1. உ தாது ஷூ . . . [திருப்ப]ணி முகிச்சது அரிய நயினார் முதலியார் அய்யன் அவர்களுக்கு புண்ணியமாக உ

மேற்படி மண்டபத்து தூண்

1. ஸ்வஸ்திஸ்ரீ உத்தமசோழந்

20 : 7

இடம் : *மேற்படி கோயில் மகாமண்டப உட்புறம் தரையில் பதிக்கப்பட்டுள்ள கல்*

காலம் : *ஈசுவர வருஷம், ஐப்பசி, 25 , பொ.ஆ 1757*

செய்தி : *திருவண்ணாமலை ஞானபிரகாச பண்டாரத்தின் மகன் அண்ணாமலை சிவன் என்பவர் மகாமண்டபத் தளவரிசை திருப்பணியைச் செய்துள்ளார்*

1. உ யீசுர வருஷம் அ–
2. ற்பசி *மீ* 25 திருவ–
3. ண்ணாமலை ஞான பிற–
4. காச பண்டாரத்தின் கு–
5. மாரர் திருப்பணி அண்
6. ணாமலை சிவன் சதாசேர்வை

20 : 8

இடம் : *தரையில் பதிக்கப்பட்டுள்ளதனிக் கற்களில்*

காலம் : *பொ.ஆ 17ஆம் நூற்றாண்டு*

செய்தி : *இவ்விடத்தில் உள்ள தனிக் கற்பலகைகளில் முத்தசதாசேர்வை, செல்லப்பன், காளிதாசன், குருவய்யன் ஆகியோரின் பெயர்கள் எழுதப்பட்டுள்ளன பெயர் பொறிக்கப்பட்டுள்ள கற்களை இவர்கள் கொடையாக வழங்கினர் எனக் கருதலாம்.*

1. முத்த சதா சேர்வை, 2. செல்லப்பன், 3. காளிதாசன்

20 : 9

இடம் : *மேற்படி கோயில் நடராஜர் உற்சவர் சன்னதி முன் தரையில் உள்ள கல்*

காலம் : *பொ.ஆ 16-17 ஆம் நூற்றாண்டு எழுத்தமைதி*

செய்தி : *நல்லதம்பி உபயம்*

1. வீரமளய உக–

2. ந்தடுமைக்
3. கொண்டார்
4. மகன் நல்லத–
5. ம்பி சதா சேர்–
6. வை

## 20 : 10

இடம் : *மேற்படி கோயில் நடராஜர் உற்சவர் சன்னதி முன் வாயில் தரை நிலை படிக்கட்டுக் கற்பலகை*

காலம் : *பொ.ஆ 11-12 ஆம் நூற்றாண்டு சோழர் கால எழுத்தமைதி*

செய்தி : *கையொப்பமிட்டவர்களின் பெயர்கள் குறிப்பிட்டுள்ளமை உடைந்த கல்வெட்டு*

1. பாக்கமுடையான் திருநாவுக்கரசு நமச்சிவாய தேவன் எழுத்து இப்படி. . .
2. யன் எழுத்து இப்படி அறிவேன் தேவ கரும அரிந்தவ நல்லூர் உத்தமதொங்க மூவேந்த வே. . .
3. வசிங்க இந்த பிச்சிபாக்கமுடையான் திருநாவுக்கரசு நமச்சிவாய தேவற்க்கு குடுத்தேன். . .
4. நமச்சிவாய தேவன் எழுத்து இப்படி அறிவேன் அரிந்தவநல்லூர் ஏனலூர் கிழவன். . .
5. னமசிவாய தேவன் கூடம்பலான பெ. . .நாட்டார் மடப்புறம். . .

# 21. வெள்ளிமலை நடுகற்கள்

கோ. சசிகலா, மதுரை
பரந்தாமன், திருச்சி

21 : 1

இடம் : *மதுரை மாவட்டம், மேலூர் வட்டம், கொட்டாம்பட்டி யிலிருந்து வடமேற்கே சுமார் 14 கி.மீ தொலைவில் உள்ள வெள்ளிமலை. கருப்பர் கோயிலில் உள்ள வில்லடியான் சாமி இரண்டு நடுகற்கள்*

காலம் : *கிபி 11-12 ஆம் நூற்றாண்டு*

செய்தி : *அதியம் மகன் அரையன். செயிக்கன் என்பவன் போர்க்களத்தில் இறந்ததமைக்கு நடுகல் இட்டமை*

1. உச்சி வடக்கில்
2. மங்கலத்தில்
3. அதியம் மக
4. யரையன் கல்
5. லூன்றி தந்தது
6. பட்டான் யிது
7. செயிக்கன் யிவ
8. ரன் மகன் வால
9. ன்

21 : 2

இடம் : *மதுரை மாவட்டம், மேலூர் வட்டம், கொட்டாம்பட்டி யிலிருந்து வடமேற்கே சுமார் 14 கி.மீ தொலைவில் உள்ள வெள்ளிமலை கருப்பர் கோயிலில் உள்ள வில்லடியான் சாமி இரண்டு நடுகற்கள்*

காலம் : *பொ.ஆ 11-12 ஆம் நூற்றாண்டு*

செய்தி : *போர்க்களத்தில் இறந்ததமைக்கு நடுகல் இட்டமை*

1. . . ந்ந வட
2. க்கில்
3. மங்கலத்து

# 22. திருமலைச்சேரி மூன்றாம் இராஜராஜன் கல்வெட்டு

ப. வெங்கடேசன், பூண்டி

இடம் : வேலூர் மாவட்டம், வாலாசா வட்டம், திருமலைச்சேரி ஈசுவரன் கோயில் வளாகத்தில் உள்ளது.

காலம் : மூன்றாம் இராசராசன், யா.17, பொ.ஆ.1233.

செய்தி : 4 அடி உயரம் 3 அடி அகலம் கொண்ட கற்பலகையில் வெட்டப்பட்ட கல்வெட்டு.வலதுபுறமும் கீழ்ப்பகுதியிலும் கல்வெட்டு உடைந்துள்ளது. திருமயிலாப்பூரில் உள்ள திருப்பூம்பாவை வழிபாட்டிற்கு நாள்தோறும் அமுதுபடி, பூசைப் படி முதலியவைகளுக்குக் கொடுத்த கொடை பற்றிய செய்தி.

1. ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவந
2. ச் சக்கரவத்திகள் ஸ்ரீ
3. ராஜராஜ தேவற்கு யாண்டு
4. 17 வது திருமயிலாப்
5. பூர் உடையார் திருப்பூ
6. ம் பாவை நாயனா
7. ற்கு திருநாட்படிக்கும்
8. பூசைக்கும் திரு . . .
9. . . .



# 23. ஆச்சாள்புரம் கல்வெட்டுகள்

கோ. விசயவேணுகோபால்
நா. பாபு [எ] இராமசாமி
கோ. இரவீந்திரன், பாண்டிச்சேரி

**23 : 1**

இடம் : *நாகப்பட்டினம் மாவட்டம், சீர்காழி வட்டம், சிவலோக தியாகர் கோயில், ஆச்சாள்புரம், இரண்டாவது சுற்று வடக்கு வெளிச் சுவர்*

காலம் : *மூன்றாம் இராசராசன், யா 18, பொ.ஆ 1234*

செய்தி : *நிலக்கொடை அளித்த செய்தி முற்றுப் பெறவில்லை*

1. ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவனச் சக்கரவத்திகள் ஸ்ரீ றாஜறாஜ தேவர்க்கு யாண்டு பதின் எட். . . றாஜாதிறாஜவளநாட்டு. . .

2. ங்கண்ணாற்று நாலாஞ் சதிரத்து தெற்கடைய நிலம் மூன்று மா இதில் தெற்கடையவும் கிழக்கடையவும் நிலம் இ....கிழக்கடைய திரிபுவனை பங்கிலாந நிலம் அரைக்காணி கீழரை இதில் கிழக்கடைய ம...ழ் நிலம் கீழரை நீக்கி விளைநிலம்...க்காணி பதினஞ்சாம் தரம் நீக்கி வடமேற்க்குச் சார் நிலம் ஒரு மா இதில் தென்மேற்க்கு குளமும் கரையும் நிலம் அரைக்காணி கிழக்கடைய குலைவரம்பு நிலம் முந்திரிகைக் கீழரை வடக்கடைய குலை உ.... க்குப் பெருமணநல்லூர் நிலம் முக்காணி இதின் வடக்கு நிலம் மூன்று மா இதில் வடக்கடைய குலை வரம்பு நிலம் முந்திரிகை கிழக்கடைய ....நிலம் முந்திரிகை மேற்க்கடைய குலைவரம்பு நிலம் முந்திரிகை நீக்கி திருப்பெருமணநல்லூர் நிலம் இரண்டு மா....க்காணி....ஆக நிலம் நாலு மா அரைக்காணிக்கீழரை இதில் திருப்பெருமணநல்லூர் நிலம் மும்மாவரை முந்திரிகை திரிபுவனவீரம–

3. ங்கலம் நிலம் அரைக்காணிக் கீழரை இதில் நீங்கல் நிலம் கீழரை நீக்கி விளைநிலம் அரைக்காணி பதினைஞ்சாந் தரம் ...காணி அரைக்காணி முந்திரிகையும் நாலாங் கண்ணாற்று[நா]லாஞ் சதிரம் நிலம் ஆறு மா இதில் தென்கிழக்குச் சார்...தெற்கடைய...லம் காணி அரைக்காணி நீக்கி ந....ரைமா அரைக்காணி இதில் தென்மேற்குச் சார் குளமும் கரையும் நிலம் அரைக்காணி இதின் கிழக்குச்சார்க் குளமும் கரையும் நிலம் ...கீழரை வடமேற்க்குச்சார் குளம் இரண்டினால் நிலம் அரைக்காணி நடுவடைய வடக்குச்சார் குலைவரம்பு நிலம் முந்திரிகை வடக்கடைய குலைவரம்பு நிலம் ....திடலும் நிலம் . . . முந்திரிகை கீழ் கால் இதில் குலைவரம்[பு நில]ம் முந்திரிகைக் கீழ்க் கால் நீக்கி இறுப்புக் கொல்லை

நிலம் அரைக்காணி ஆறாந் தரம் நீக்கி திருப்பெருமணநல்லூர் நிலம் கால் ஆக நிலம் காலே அரைக்

4. . . .அரைக்காணி இதில் திருப்பெருமணநல்லூர் நிலம் கால் ஊற்ப்பற்று நிலம் அரைமா அரைக்காணி இதில் நீங்கல் நிலம் ...கொல்லை நிலம் அரைக்காணி ஆறாந்தரம் ஐஞ்சாங் கண்ணாற்று நாலாஞ் சதிரம் நிலம் ஆறுமா இதில் தென்கிழக்குச் சார்...லம் அரைக்காணி இதன் வடக்கு ஓடை....அரைமா இதில் தெற்கடைய திரிபுவனவீரமங்கலம் உண்ணிலம் காணி பதினாறாந்தரம் நீக்கி ஓடை நிலம் நீக்கி நடுவடைய குலைவ....நிலம் கீழரை கால் இதில் கிழக்குச் சார் குளம் இரண்டினால் நிலம் அரைக்காணி விட்டு மேற்க்குச்சார் குலைவரம்பு நிலம் முந்திரிகை வடக்கடைய குலைவரம்பு நிலம் முந்திரிகைக் கீழ் கால் இதன் மேற்க்கு குலைவரம்பு நிலம் கீழரை நீக்கி திருப்பெருமணநல்லூர் நிலம் நாலுமா முக்காணி அரைக்காணி முந்திரிகை ஆக நிலம் ஆறும் இதில் திருப்பெருமணநல்லூர் விளைநிலம் நாலுமா முக்காணி முந்திரிகை திரிபுவனவீரமங்கலம் [ஊர்]நிலம் காணி பதி...ந்தரம் நீக்கி வி

5. ர பற்று நீங்கல் நிலம் முக்காணி முந்திரிகை ஆறாங் கண்ணாற்று நாலாஞ் சதிரம் நிலம் ஆறு மா இதில் தென்மேற்க்குச் சார்...தெற்க்கு....நிலம் காணி அரைக்காணி இதில் தென்மேற்க்குச் சார் அகமனையும் குளமும் நிலம் அரைக்காணி மேற்க்கடைய....ம் தெற்க்கடைய ....பாழ்நிலம்...லை நிலம் முக்காணி ஆறாந்தரம் இதில் கிழக்குச் சார் குளமும் கரையும் நிலம் அரைக்காணி கிழக்கடைய குலைவரம்பு நிலம் முந்திரிகை...கடைய குலைவரம்பு நிலம் முந்திரிகை நீக்கி திருப்பெருமணநல்லூர் நிலம் நாலு மாக்காணி ஆக நிலம் ஆறுமா இதில் திருப்பெருமணநல்லூர் நிலம் நாலுமாக்காணி நீக்கி மூன்றாங் கண்ணாற்று நிலம் ஒரு மா [முந்திரிகை]நீக்கி....மா நீக்கி கொல்லை நிலம் முக்காணி அரைக்காணி....ங்கண்ணாற்று நாலாஞ் சதிரத்து நிலம் இரண்டு மா இதில் [வ]டக்கடைய குலைவரம்பு [நிலம்] அரைக்காணி இதன் கிழக்குச் சார் அகமனை நிலம் அரைக்காணி....குளமும் கரையும் நிலம் அரைக்காணி....லம் காணி அரைக்காணி நீக்கி திருப்

6. பெருமணநல்லூர்....நிலம் ஒருமாவரையே அரைக்காணி ஆக நிலம் இரண்டு மா இதில் திருப்பெருமணநல்லூர் நிலம்....நிலம் காணி அரைக்காணி....நீக்கி...கண்ணாற்று முதலாஞ் சதிரத்து வடக்கடைய ...நிலம் இரண்டு மா இரண்டாங் கண்ணாற்று முதல் சதிரத்து. . . மேற்க்கு...திருப்பெ...லூர் நிலம் ஒருமா இதில் தெற்க்கடைய [நிலம்]கிழக்குச் சார் குளமும் கரையும் நிலம்...மனை நிலம் முக்காணி....ணி நீக்கி நிலத்....தெற்க்கடைய நி....இ....வடக்கு வடகிழக்க....மும்மாகாணி நீக்கி....நிலம் இரண்டு....பற்று நீங்கல் நிலம் இர....

7. ...ஒருமாவரையே அரைக்காணி ஆக நிலம் இரண்டு மா இதில் திருப்பெருமணநல்லூர் நிலம் . . .

## 23 : 2

இடம் : *மேற்படி இரண்டாவது சுற்று, வடக்கு வெளிச் சுவர்*

காலம் : *முதலாம் குலோத்துங்க சோழன், யா 10, பொ.ஆ 1080*

செய்தி : *இறையிலியாகக் கொடுக்கப்பட்ட நிலங்கள்*

1. ஸ்வஸ்திஸ்ரீ. . .ஸ்ரீகுலோத்துங்கசோழ. . ..தேவற்கு யாண்டு பத்தாவது கு$_4$ம்ப$_3$ நாயற்று..
2. திருமடை விளாகமும் திருவீதியும் திருந[ந்தவ]னமும் இக்கோயில் உடைய பிள்ளையார் திருக்கல்லியாணம் பண்ணி அருளின திருமாளிகையாய் வரியில் நீங்கல் முன்பு அனாதியாய் அனுபவித்து வருகிற நிலம் உட்பட மாணிக்கவாசகநல்லூரில் தா மாணிக்கவதிக்கு கிழக்கு ஸ்ரீ[பிராந்]தக வாய்க்காலுக்கு வடக்கு [பத்தாங்கண்]ணாற்று நாலாஞ் சதிரத்து வடக்கடைய கொல்லை நிலம் முக்காணியும் காணி மாணிக்கவதிக்கு கிழக்கு கண்டராதித்த வாய்க்காலுக்கு வடக்கு ஐஞ்சாங் கண்ணாற்று முதல் சதிரத்து வடக்கடைய நிலம் மூன்று மாவில் வடமேற்கடைய கொல்லை நிலம் அரை மாவும் ஆறாங் கண்ணாற்று முதல் சதிரத்து வடக்கடைய நிலம் மூன்று மாவில் வடக்கடைய நிலம் இரண்டு மாவும் ஏழாங் கண்ணாற்று முதல் சதிரத்து
3. வடக்கடைய நிலம் மூன்று மாவில் வடக்கடைய குளம் உட்பட நிலம் ஒரு மா...ரை செயு மாக்காணியும் இரண்டாஞ் சதிரத்து நிலம் அரைமா அரைக்காணி கீழ் முக்காலும் எட்டாங் கண்ணாற்று முதல் சதிரத்து மணலிக்கு வடக்கு நிலம் நாலுமா முக்காணியும் இரணஅடாஞ் சதிரத்து மேற்கடைய திருனந்தவனம் நிலம் அரைமா அரைக்காணியும் ஒன்பதாங் கண்ணாற்று முதல் சதிரத்து குளமும் திருனந்தவனமும் நிலம் ஒருமா முந்திரிகை கீழ்க் காலினால்...வு நிலம் காலே அரைமாவிந் கீழ் காலும் பத்தாங் கண்ணாற்று முதல் சதிரத்து ஸ்ரீகோயிலும் திருமுற்றமும் திருமடைவிளாகமும் திருவீதியும் நிலம் ஆறு மாவும்...யூர் திருச்சிற்றம்பலவதிக்கு கிழக்கு ஸ்ரீகண்டராதித்த வாய்க்காலுக்கு வடக்கு முதல் கண்ணாற்று முதல் சதிரத்து திருந்நந்தவனமும் திருக்குளமு திருமடைவிளா
4. கமும் நிலம் ஆறு மாவும் இரண்டாஞ் சதிரத்து தெற்கடைய திருந்நந்தவனம் தெற்கடைய நிலம் நாலுமாவும் இதன் வடக்கு [அர்]ச்சனாபோகம் நிலம் இரண்டு மாவும் இரண்டாங் கண்ணாற்று முதல் சதிரத்து திருந்நந்தவனமும் தீர்த்தக் குளமும் திருமடைவிளாகமும் திருவீதியும் நிலம் ஆறு மாவும் இரண்டாஞ் சதிரத்து அச்சனார்போக$_3$ நிலம் இரண்டு

மாக்காணிக் கீழரையும் மூன்றாங் கண்ணாற்று முதல் சதிரத்து இக்கோயில் உடைய பிள்ளையார் திருக் கல்லியாணம் பண்ணி அருளின திருமாளிகையும் திருவீதியும் திருநந்தவனமும் திருமடைவிளாகமும் நிலம் ஆறு மாவும் ஆலாலசுந்தரநல்லூர் திருச்சிற்றம்பல வதிக்குக் கிழக்கு ஸ்ரீபிராந்தக வாய்க்காலுக்கு வடக்கு முதல் கண்ணாற்று நாலாஞ் சதிரத்து வடக்கடையக் கொல்லை நிலம்

5. அரைமாவரைக்காணியும் ஆக நிலம் நா...த்து நாலுமாக்காணி அரைக்காணி.....விரிவு நிலம் பதினொன்றரையே காணி இந்நிலம் பதினொன்றரையே காணியும் முன்....வா.....அனாதியாக அனுபவித்து வாராநிற்க இந்...திருமடைவிளாகமும் திருவீதியும் இக்கோயில் உடைய பிள்ளையார் திருக்கல்லியாணம் பண்ணி...ன திருமாளிகை...முன்பே ....இறையிலியாக விட்டதை நாங்கள் அனுபவித்து வருகிறபடியே ஊர்க்கீழ் இறையிலியாக விடுகவென்று எங்களுக்கு ஒரூராக செய்தருளின திருமுகம் எழுதி இக்கோயில் ஸ்ரீமாகேசுரக் கண்காணி செய்வார்க்கும் சேவர்கன்மிகளுக்கும் முன்பு ஊர்க்கீழ் இறையிலியாய் அனுபவி

6. .....பண்ணு ....சாதஞ் செய்தருளின திருமுகம் வந்த....காசுகொள்ளா இறையிலி...த்துத் தருமென கல்....செம்பிலும் வெட்....ஊர்க்கணக்கு....ன் எழுத்தென்றும் இப்படிக்கு இவை....திருச்சிற்றம்பலமுடையான் தேவநாயக பட்டன் எழுத்தென்றும் இப்படிக்கு....திருச்சிற்றம்பலநம்பி எழுத்தென்றும் இப்படிக்கு...

7. ரையன் திருச்சிற்றம்பலமுடையான் எழுத்தென்றும் இப்படிக்கு இவை இருங்கண்டி உய்யவந்ததேவ பட்டன் எழுத்தென்றும் இப்படிக்கு இவை குணவீரமங்கலத்து தில்லை மூவாயிர நம்பி எழுத்தென்றும் இப்படிக்கு இவை மருதூர் மாதேவன் பொன்னம்பல நம்பிஎழுத்தென்றும் இப்படிக்கு இவைதில்லைநாயக நம்பி எழுத்தென்றும் இப்படிக்கு இவை இருங்கண் ஸ்ரீகயிலாஸமுடையான் எழுத்தென்றும் இப்படிக்கு இவை களத்தூர் திருவெண்காடு பட்டன் எழுத்தென்றும் இப்படிக்கு இவை குரோவித் தாமோதர பட்டன் எழுத்தென்றும் இப்படிக்கு இவை நல்லூர் தாமோதிர பட்டன் எழுத்தென்றும் இப்படிக்கு இவை இருங்கண்டி வேதவன நாயக பட்டன் எழுத்தென்றும் இப்படிக்கு இ–

8. வை ஆத்திரையன் திருவெண்காடு பட்டன் எழுத்தென்றும் இப்படி அறிவேன் திருப்பெ..பொன்னம்பல பட்டன் எழுத்தென்றும் இவை இராயூர் பொன்னம்பல பட்டன் எழுத்தென்றும் இவை மணலூர் நாயன் ஆதித்த தேவன் எழுத்தென்றும் இப்படிக்கு இவை காமக்காணி திருச்சிற்றம்பலமுடையான் வினாயக பட்டன் எழுத்தென்றும் இப்படிக்கு இவை இராயூர் தக்ஷிணாமூ[ர்]த்தி பட்டன் எழுத்தென்றும் இப்படிக்கு இவை இருங்கண்டி தச....த்த நாயக பட்டன்எழுத்தென்றும் இப்படிக்கு இவைபாடலன் திருவெண்காடு பட்டன் எழுத்தென்றும் இப்படிக்கு இவை

ஓடப்புறை திருச்சிற்றம்பலமுடையான் பட்டன் எழுத்தென்றும் இப்படிக்கு இவை ஆதித்த பட்டன் எழுத்தென்றும் இப்படிக்கு இவை

9. கண்டிநாகதேவ பட்டன் எழுத்தென்றும் இப்படிக்கு இவை இருங்கண்டித் தக்ஷிணாமூர்த்தி பட்டன் எழுத்தென்றும் இப்படிக்கு இவை திருச்சிற்றம்பலமுடையான் பட்டன் எழுத்தென்றும் இப்படிக்கு இவை இருங்கண்டி நாகைப் பட்டன் எழுத்தென்றும் இவை ஸ்ரீரங்கநாயகன் மாதேவ பட்டன் எழுத்தென்றும் இப்படிக்கு இவை ...சியன் திருச்சிற்றம்பலமுடையான் பட்டன் எழுத்தென்றும் இவை காவப்ப பெருமான் பட்டன் எழுத்தென்றும் இப்படிக்கு இவை மருதூர் சிற்றம்பலமுடையான் தெக்ஷிணாமூர்த்தி பட்டன் எழுத்தென்றும் இப்படிக்கு இவை குணதீரமங்கலத்து திருச்சிற்றம்பலமுடையான் பட்டன் எழுத்தென்றும் எழுதின நியோகத்தின்படி உ உ

## 23 : 3

இடம் : *மேற்படி மகாமண்டபம் வடக்குச் சுவர், நர்த்தனக் கணபதி சிலைக்கு வலப்புறம் (இ.க.ஆ 525/1918)*

காலம் : *பராக்கிரம பாண்டியன், யா 8, பொ.ஆ 1343*

செய்தி : *முற்றுப் பெறாத கல்வெட்டு. நிலக்கொடை அளித்த செய்தி.*

1. சக்கரவத்தி . . .
2. ற பன்மர் திருகள் ஸ்ரீபராக்கிறம பாண்டிய தேவர்க்கு யாண்டு 8. . .
3. நாயற்று பூர்வ பக்ஷத்து பஞ்சமியும் புதன்கிழமையும் பெற்ற முக. . .
4. ராஜாதி$_4$ராஜ வளநாட்டு வெண்ணையூர் நாட்டு பஞ்சவன் மஹாதேவி. . .
5. ங்கசோழச் சதுர்வேதிமங்கலத்து உடையார் திருப்பெருமணமுடைய. . .
6. ன் முன்னாள் பெருமாள் குலோத்துங்கசோழ தேவற்க்கு பத்தாவது. . .
7. லமு உட்பட பின்பு பராக்கிறம பாண்டிய தேவற்கு ஏழாவது வரை. . .
8. கொண்டு உடைமையான நிலங்களும் உட்பட மாணிக்கவாசக. . .
9. ணக்க வதிக்கு கிழக்கு ஸ்ரீபராந்தக வாய்க்காலுக்கு வடக்கு 3 கண். . .
10. 9 சதிரம் நிலம் 6 . . .ம் 5 கண் 3 சதிரத்து வடக்கடைய நிலம் 6 100ம் 4 சதி. . .
11. 3 சதிரம் நிலம் 6 . . .ம் 4 சதிரத்து நிலம் 6 . . .
12. நீக்கி நிலம் . . .ம் 4 சதிரத்து நிலம் 6.....4 கண் 1 சதிரத்து வடக். . .
13. திரத்து வடக்கடைய நி 4 . . .ம் 3 சதிரத்து நிலம் 600ம் 4 சதி. . .
14. டைய நிலம் . . .ம் 3 சதிரத்து நி . . . 4 சதிரத்து நிலம் சதிரம் நிலம் . . . ம். . .

15. லுக்கு வடக்கு 3 கண் 1 சதிரத்து நி 8 .. ம் 4 கண் 1 சதிரத். . . .

16. யார் திருச்சிற்றம்பலமுடையார் திருநாமத்துக்காணி நிலம் 4 . . . ம இ. . .

17. க்கு வடக்கடைய நிலம் . . .ம் 2 சதிரத்து தெற்கடைய உ....ர் பற்று நிலம். . .

18. ந்த்து இளைய திருக்கழிப்பாலை உடையான் வட..... பக்கல். . .

19. யர் தமக்குக் காணியாக்க் கொண்ட நிலம் முன்... மா செம்பி...

20. ய நிலம் . . .ம் 2 சதிரம் நிலம் . . . 7 கண் 9 சதிரத்து. . . நிலம் . . .

21. சதிரத்து வடக்கடைய நிலம் . . .2 சதிரம் நி 60.. சதிரம் நிலம். . .

## 23 : 4

இடம் : *மேற்படி இரண்டாவது சுற்று மேற்கு வெளிச் சுவர், (இ க ஆ 1918 எண் 530)*

காலம் : *திரிபுவன வீரதேவன் - மூன்றாம் குலோத்துங்கன், யா 32, பொ ஆ 1210*

செய்தி : *நிலக்கொடை மற்றும் அம்மன் சந்நிதி கட்டியமை*

1. த்ரிபு$_4$வன......துரையும் ஈழமுங் கருவூரு....னை முடித்தலையுங் கண்டருளி வீராபிஷேகமும் விஜயாபிஷேகமும் ப
2. ண்ணி....வீரதேவற்க்கு யாண்டு முப்பத்திரண்டாவது நாள் முன்னூற்றறுபத்தேழினால் ப்ரஸாதஞ் செய்தருளின திருமுகப்படி த்ரிபு$_4$வன சக்ரவத்திகள் கா
3. னேரில்....ன ராஜதிராஜ வள னாட்டு வெண்ணையூர் நாட்டு நல்லூரான திருப்பெருமணமுடையார் கோயில் தேவர்கன்மிக்கும் ஸ்ரீ
4. மாஹே...செய்வானுக்கு[ம்]ஸ்ரீகாரியஞ்செய்வானுக்கும் ஜயங்கொண்டசோழமண்டலத்துப் புலியூர்க் கோட்டமான குலோத்துங்க சோழ
5. வளநா.... டு நெற்குன்றங்கிழான் சந்த்ரசேகரன் பஞ்சநதிவாணன் இக்கோயி[ல்] எழுந்தருளுவித்த திருக்காமக்கோட்டமுடைய நாச்சியார்க்கு
6. வேண்டும் நிவ....ளுக்கு இறுப்பதாக வரு...
7. லியும் சேரவல்லா....இந்நிலத்துக்கு தலைமாறு பற்றுக்கு ஒக்க இவ்வேண்டும் நிலத்துக்கு உடலாக இராசாதிராசவளநாட்டு திருவிந்தளூர் நாட்டுச் செய்யா–
8. றிலே மூன்றேமூன்று முந்திரிகைக் கீழரை நிலமும் செம்பங்குச் சேற்றூரென்று கூவின நிலம் நீக்கி நீக்கினின்ற நிலத்திலே முக்காலே மூன்றுமா நில–

9. மும் முப்பத்திரண்டா....னமு தேவதான இறையிலியாக வரியிலாரும் வந்த கூறு செய்வார்களும் எழுத்திட்ட ஊறவருஞ் சொன்னோம் இன்னிலம் முப்பத்து

10. [இ]ரண்டாவது பசான முதல் தேவதான இறையிலியாக கைக்கொண்டு . . .நெறியுடைச் சோழ மூவேந்த வேளான்

11. . . .ணவா. . .டையான் எழுத்தென்றும் இவை சகதாய...அங்கராயன் எழுத்தென்றும் இவை பல்லவராயன் எழுத்தென்–

12. றும் இவை ராஜன் எழுத்தென்றும் இவை. . . ழ. . ளுத்தரையன் எழுத்தென்றும் இவை காலிங்கராயன் எழுத்தென்றும் இவை கள . . .ப்பாக்கராயன்

13. எழுத்தென்றும் இட்டது. 15 உ

# 24. பரசலூர்க் கல்வெட்டு

**கோ. விசயவேணுகோபால்**
**நா. பாபு [எ]இராமசாமி**
**கோ. இரவீந்திரன், பாண்டிச்சேரி**

இடம் : *நாகப்பட்டினம் மாவட்டம், மயிலாடுதுறை வட்டம், பரசலூர், தட்சபுரீசுவரர் கோயில், கருவறை வடக்கு இடப்புறச் சுவர்*

காலம் : *சடையவர்மன் முதலாம் சுந்தர பாண்டியன், யா. 5, பொ.ஆ 1256*

செய்தி : *இக்கோயில் கல்வெட்டுக்கள் மூன்று மத்தியத் தொல்லியல் கல்வெட்டுக் களஆய்வுத் துறையினரால் 1925இல் படியெடுக்கப்பட்டும் இதுவரை வெளியிடப்படவில்லை. கல்வெட்டு கருவறை, மகாமண்டபம் ஆகிவற்றின் சுவர்களில் வெட்டப்பட்டுள்ளது திருப்பணியின்போது சாந்து பூசப்பட்டுள்ளமையால் சில இடங்களில் வாசகம் மறைந்துள்ளது. கல்வெட்டு சுந்தர பாண்டியன் பெயரில் காணப்படினும் உள்ளே உள்ள வாசகம் இக்கோயிலுக்கு முன்பு வழங்கப்பட்ட திருநாமத்துக்காணியை மீண்டும் கல்லில் வெட்டியதாகக் குறிப்பிடுகின்றது கோயில் தீப்பற்றி எறிந்தமை காரணமாகச் சுட்டப்படுகின்றது. எனவே இக்கொடை சோழர் காலத்தியதாகக் கொள்ளலாம். ஊரின் பெயர் பறியலூரான இராசநாராயணச் சதுர்வேதிமங்கலம் எனக் குறிக்கப்படுகிறது.*

1. ஸ்திஸ்ரீ உ ஸ்ரீ ம . . .
2. . . .மேல்கொ–
3. ண்ட பன்மர் திரிபுவன–
4. ச[க்]கரவத்திகள் ஸ்ரீ .ந் . . .
5. பாண்டிய தேவ . . .
6. டு வது ஐஞ்சாவது கும்ப . . .
7. பர பக்ஷத்து த்ரிதியையும்
8. சனிக்கிழமையும் பெற்ற உத் . . .
9. து நாள் ஜயங்கொண்டசோழவள
10. நாட்டு விளை நாட்டு பறியலூரான
11. ராஜநாராயணச்சதுர்வேதிமங்க–
12. லத்து உடையார் திருவீரட்டா–

13. ன . . .

14. யான விளைநிலமும் [கொ]ல்லையும்

15. வயலில் நீர்நிலையும் நீங்கலும் உ

16. ட்பட முன்னாள் பழந்[தி]ருநாமத்துக்

17. காணிக்கு கல்வெட்டின இது துரித

18. காலங்களில் நெருப்[பு]ப் பட்டு அழி

19. ந் . . .

20. பு விலைகொண்ட திருநாமத்துக்கா

21. ணியான நிலத்துக்கும் கல்லிலு[ம்]

22. செம்பிலும் வெட்டிக்கொள்ளு[ம்ப]டி

23. உ.வரி மதுராந்தகப் பேராற்[று]க்கு

24. கிழக்கு அரங்ககுடி எல்லைக்கு வட

25. க்கு. . . . . . . . .

26. வப்பட்ட நிலத்துக்கு கீழ்பாற்கெ...

27. இவ்வூர் நாயனார் திருவேகம்பமு

28. டைய நாயனார் திருநாமத்துக்காணி [க்]

29. கு மேற்கும் தென்பாற்கெல்லை. . .

30. டையார் திருச்சிற்றம்பலமுடைய..

31. தேவதானத்துக்கு வடக்கும் மே.

32. பாற்கெல்லை மதுராந்தகப் பே...

33. குக் கிழக்கும் வடபாற்கெல்

34. லை கெங்கைகொண்[டசோ]

35. ழ வாய்க்காலுக்கு தெற்...

36. ஆக இன்னான்கெல்லை

37. .....மனைநிலமும் மண்

38. மேடுங் குலை உட்பட்ட நிலம் ...

39. இவ்வாய்க்காலு[க்]கு கிழக்கு ராஜேந்த்₃ர

40. சோழ வாய்க்காலுக்கு வட...பறியலூார் விளாக ெ[ம]

41. ன்று பேர் கூவப்பட்ட கொல்லைக்கு கீழ்

42. பாற்கெல்லை உடையார் திருச்சிற்றம்ப[ல]

43. முடையார் தேவதானத்துக்கு மேற்கு ெ—

44. தன்பாற்கெல்லை குழிச்சாற்று எல்லை
45. விட்....மேல்பாற்கெல்லை மதுர[ா]
46. ந்தக பேராற்றுக்கு கிழக்கும் வடபா[ற்]
47. கெல்லை உடையார் திரு நன்னி
48. பள்ளி உடையார் தேவதானம் மனித்த
49. இறையிலிக்கு தெற்கும் இன்னான்கெல்
50. லைக்[கு] உட்பட்ட கொல்லை நிலம் ருப்பம
51. . . . . . .
52. ய் ஓடை எ[ன்]று பேர் கூவப்பட்ட நிலத்–
53. துக்கு கீழ்பாற்கெல்லை முன்னூற்றுவ வ–
54. திக்கு மேற்கும் தென்பாற்கெல்லை
55. உடையார் திருச்சிற்றம்பலமுடையார்
56. தேவதான கொல்லைக்கு வடக்கும் மே
57. மல்பாற்கெல்லை *கண்ணாலவாயா*
58. ற்றுக்கும் மனித்[த] இறையிலிக்கும் கிழ
59. க்கும் வடபாற்கெல்லை இவ்வாற்று
60. க்கு தெற்கும் ஆக இன்னான்கெல்லை..
61. நடுவுபட்ட நிலம் முன்னூற்று
62. வ வதிக்கு கிழக்கு ராசேன்திரசோழ
63. வாக்காலுக்கு வடக்கு *கண்ணா*...
64. று என்று பேர் கூவப்பட்ட நிலத்து

மேற்படி சுவர் வலது பகுதி

65. க்கு கீழ்பாற்கெல்லை சீ[ரா]
66. [ம] வதிக்கு மேற்கும் தென்
67. பாற்கெல்லை உடையார்
68. [தி]ரு நன்னி பள்ளி உடையார்
69. . . .
70. கு வடக்கும் மேல்பாற்கெல்லை
71. இவ்வதிக்கு கிழக்கும் வடபாற்கெ–
72. ல்லை கண்ணாலவாய் ஆற்றுக்கு தெ–
73. ற்கும் ஆக இன்னான்கெல்லை நடுவு

74. உட்பட்ட குளம் உட்பட்ட நிலம்

75. சீராம வதிக்கு கிழக்கு இவ்வாய்க்காலு–

76. க்கு கண்ணாலவாய் என்று பேர் கூ–

77. வப்பட்ட நிலத்துக்கு கீழ்பாற்கெல்–

78. லை உடையார் காலகாலதேவ[ர் திருநா]–

79. மத்துக்காணிக்கு மேற்கும் தென்பாற்கெல்–

80. லை இன்னாயநார் கொல்லைக்கும்

81. இளைய பிள்ளையார் திருவிருப்புக்கு வ–

82. டக்கும் மேல்பாற்கெல்லை [இ]வ்வதிக்–

83. கு . . .

84. ஆற்றுக்கு தெற்கும் ஆக இன்னான்கெ–

85. ல்லை நடுவுட்பட்ட நிலம் இவ்வதி–

86. க்கு கிழக்கு இவ்வாய்க்காலுக்கு வடக்கு அ–

87. ப்பக் குண்டென்று பேர் கூவப்பட்ட நிலத்–

88. துக்கு கீழ்பாற்கெல்லை உடையார் திரு ந–

89. ன்னி பள்ளி . . .

90. நிலத்துக்கு மேற்கும் தென்பாற்கெல்லை

91. ஊர்க்கொட்டுக்கு வடக்கும் மேல்பாற்

92. கல்லை உடையார் காலகாலதேவ[ர்] திருநா–

93. மத்துக்காணிக்குக் கிழக்கும் வடபாற்கெல்–

94. லை கண்ணாலவாய் ஆற்றுக்கு தெற்கு ஆக

95. இன்னான்கெல்லை நடுவுட்பட்ட .....உ–

96. ட்பட்ட நிலம் 13ம் இவ்வதிக்கு [கி]ழக்கு

97. . . .

98. ழ் வாய்க்காலுக்கு வடக்கு

99. ப்பட்ட கண்டத்து வடமே–

100. ற்கடை குண்டு நிலம் 524 ம்

101. இ .....இதன் கிழக்கும் தெற்கு

102. . . .

103. தவன் பக்கல் விலைகொண்ட நில–

104. ம் உட்பட கீழ்பாற்கெல்லை உடை–

105. டயார் திருச்சிற்றம்பலமுடையா [ர்]

106. தேவதானம் விளைநிலத்துக்கு மே-

107. ல் வடசிறு வாய்க்காலுக்கு மேற்கு-

108. ம் தென்பாற்கெல்லை இவ்வாய்க்-

109. காலுக்கு வடக்கும் ....பாற்கெ-

110. ல்லை இவ்வதிக்கு கிழக்கும் வடபாற்-

111. கெல்லை இராசேன்திரசோழ வாய்க்கா-

112. லுக்கு தெற்கு ஆக இன்னான்கெல்லை ந-

113. டுவுட்பட்ட நிலம் 1004 ஆக நிலம் 106

114. இவ்வதிக்கு கிழக்கு திருவரங்க வாய்க்கா-

115. . . . . . . உ –

116. ட்பட்ட நிலத்துக்கு கீழ்பாற்கெல்லை தெ-

117. ன் . . . மு குலைக்கு மேற்கும் தென்பாற்கெல்-

118. லை [தி]ருவரங்க வாய்க்காலுக்கு வடக்கும்

119. மேல்பாற்கெல்லையும் வடபாற்கெல்லையு-

120. ம் உடையார் திருச்சிற்றம்பலமுடையார் இ-

121. . . .

122. பட நிலம் ருய ம் இரா.......திக்கு கிழக்கு இராசேன்-

123. திரசோழப் பேராற்றுக்கு வடக்கு முழை உ-

124. டயாநென்று பேர் கூவப்பட்ட நிலத்துக்கு கீழ்பாற்கெ-

125. ல்லை உடையார் திருச்சிற்றம்பலமுடையார்

126. தேவதானத்துக்கு வீரமாதேவி வதிக்கு

127. மேற்கும் தென்பாற்கெல்லை இவ்வாற்று-

128. க்கு வடக்கும் மேல்பாற்கெ . . .

129. டபாற்கெல்லை திருவரங்-

130. க வாய்க்காலுக்கு தெற்கும்

131. ஆக இன்னான்கெல்லை நடு-

132. வுட்பட்ட நிலம் ருயம் வீரம . . .

133. . . . திருவ[ர]-

134. ங்க வாய்க்காலுக்கு வடக்கு நொச்சி

135. விளாகமென்று பேர் கூவப்பட்ட நி-

136. லமாய் கௌ$_3$தமன் சங்கரநாராயண பட்ட–

137. ரும் காக்கியன் திருவரங்கமாளி வரதராச ப–

138. ட்டனும் பக்கல் விலைகொண்ட நிலத்து–

139. க்கு கீழ்பாற்கெல்லை உடையார் திருச்சிற்ற–

140. . . . . . .

141. ர் விச்$_2$வேச்$_2$வர தேவர் தேவதானம் சங்கர

142. நாராயண பட்டர் நிலத்துக்கு மேற்கும் செ[த]–

143. ன்பாற்கெல்லை மேற்படியார் குலைக்[கு]

144. வடக்கும் மேல்பாற்கெல்லை உடை[ய]–

145. ார் திருச்சிற்றம்பலமுடையார் தேவதா[ன]–

146. த்துக்கு கிழக்கும் வடபாற்கெல்லை

147. திருச்சிற்றம்பல வாய்க்காலுக்கு தெற்கும்

148. ஆக இன்னான்கெல்லை நடுவுட்பட்ட

149. . . . க

150. . . . க்கு

151. அர்ச்சனா போகமென்று பேர் கூவப்பட்ட

## கருவறை வடக்கு,பிரம்மன் சிலைக்கு இடது பக்கச் சுவர்

152. . . . . . .

153. . . . . . .

154. வதானக்கொல்லைக்கு

155. ....சங்கரநாராயண ப[ட்டர்]

156. நிலத்துக்கு வடக்கும் மே[ல்பா]–

157. ற்கெல்லை கமுகங் குளத்துக்கு ....

158. றவாற வாக்காலுக்கு கிழக்கு [வட]

159. பாற்கெல்லை இராசேன்திரசோழவா[ய்க்]–

160. காலுக்கு தெற்க்கும் ஆக இன்னான்கெல்–

161. லை நடுவுட்பட்ட நிலம் . . . இவ்வதி

162. க்கு கிழக்கு சுன்தரசோழ வாய்க்காலுக்கு

163. வடக்கு நம்பியாண்டான் கொலவ என்–

164. று பேர் கூவப்பட்ட நிலத்துக்கு கீ[ழ்பாற்கெ]–

165. ல்லை ஊற்சிறுவா . . .

166. தென்பாற்கெல்லை உடையார் திருநன்–
167. னி பள்ளி உடையார் தேவதானம் பலரும் காணி–
168. க்கும் வடக்கும் மே[ல்]பாற்கெல்லை இன்னா–
169. யநார் தேவதானம் [பல]ரும் காணிக்கு கிழக்கு–
170. ம் வடபாற்கெல்லை கடவூரன் ஆற்றுக்கு –
171. . . . . . . ல் நடுவுட்–
172. ப்பட்ட கொல்லை நிலம் விளை நிலம் [காணி]
173. ஆக நிலம் இது விட்டு தெற்கு பொற்–
174. கோயிலாண்டார் குண்டு என்று பேர் கூவ–
175. ப்பட்ட நிலத்துக்கு கீழ்பாற்கெல்லை உடை–
176. யார் திரு நன்னி பள்ளி உடையார் தேவதா–
177. னமும் தென்பாற்கெல்லை . . .
178. தேவதானமும் மேல்பாற்கெல்லை இ–
179. . . . கௌ$_3$தமன் ச–
180. ங்கரநாராயண பட்ட[ர்] பக்கல் விலை கொ–
181. ண்ட சேற்றுடையான் என்று பேர் கூவ–
182. ப்பட்ட தடி னால் நிலம் [அரைக்காணி] ம் இதன் தெ[ற்]–
183. கு காக்கியன் மாதேவபட்டர் பக்கல் விலை ெ–
184. காண்ட தண்ணீர் குண்டு நிலம் ஆக நில[த்]
185. துக்கு கீழ்பாற்கெல்லை புவனிமாணிக்க வதி–
186. க்கு மேற்கும் தென்பாற்கெல்லை உடையா
187. ன்னாயநார் தேவதானமும் வடபாற்கெ–
188. ல்லை இன்னாயநார் தேவதானமும் பலர் கா–
189. ணியுமான இன்னான்கெல்லை நடுவுட்ப–
190. ட்ட நிலம் புவனிமாணிக்க வதிக்கு கி–
191. ழக்கு இராசேன்திரசோழ வாய்க்காலு–
192. க்கு வடக்கு மேற்கடை கௌ$_3$தமன் சங்கர

## அர்த்த மண்டபம் துர்க்கைச் சிலைக்கு வலதுபுறச் சுவர்

193. [நாராயண] பட்டர் பேரால் விலைகொண்ட நிலத்துக்கு [கீ]–
194. ழ்பாற்கெல்லை திருவெண்காட்டகரப் பட்டப் பாழும் மனை–
195. க் குண்டுகளுக்கு மேற்க்கும் தென்பாற்கெல்லை இவ்வாய்க்கா–

196. லுக்கு வடக்கு[ம்] மேல்பாற்கெல்லை இவ்வதிக்கு கிழக்கும் வட–

197. பாற்கெல்லை உடையார் திரு நன்னி பள்ளி உடையார் தேவதா–

198. . . . நிலத்துக்கு தெற்க்கு இன்னான்கெல்–

199. லை நடுவுட்[ப்ப]ட்ட நிலம் ..... ம் இங்கு விட்டு கிழக்கு குழைந்தான் இருப்பு என

200. பேர் கூவப்பட்ட நிலத்துக்கு கீழ்பாற்கெல்லை உடையா[ர்] திரு நன்னி பள்ளி [உ]-

201. டையார் தேவதான. . . ட்டப் பாழுக்கும் விளைநிலத்துக்கும் மேற்க்கும் தெ–

202. [ன்]பாற்கெல்லை இவ்வாய்க்காலுக்கும் இன்னாயநார் தேவதானத்துக்கும் வடக்கும்

203. மேல்பாற்கெல்லை உடையார் திரு நன்னி பள்ளி உடையார் தேவதானம் பலர் காணிகளுக்கு தெ

204. . . .

205. கைகொண்டசோழ வாய்க்காலுக்கு வடக்கு வடகிழக்.....ட்டு காக்கியன் மாதேவப–

206. ட்டர் பக்கல் விலைகொண்ட பனை அடி என்று பேர் கூவப்பட்ட நிலத்துக்கு கீழ்

207. பாற்கெல்லை இராசமாணிக்க வதிக்கு மேற்க்கும் தென்பாற்கெல்லை பெருவழி–

208. க்கு வடக்கும் மேல்பாற்கெல்லை உடையார் திருச்சிற்றம்பலமுடையார் தேவதான[த்]–

209. துக்கு கிழக்கும் வடபாற்கெல்லை இராசேன்திரசோழ வாய்க்காலுக்கு தெற்கும்

210. ஆக இன்னான்கெல்லை நடுவுப்பட்ட நிலம் 2 இந் . . .

211. . . . வரதராச பட்டன் பக்கல் விலைகொண்ட அருளாளப்பெரு–

212. மானென்று பேர் கூவப்பட்ட நிலத்துக்கு கீழ்பாற்கெல்லை ப..ங்க குளத்துக்கு நீர் [ப]–

213. ரய்கிற வடசிறு வாய்க்காலுக்கு மேற்கும் தென்பாற்கெல்லை கெங்கைகொ–

214. ண்டசோழ வாய்க்காலுக்கு வடக்கும் மேல்பாற்கெல்லை புவனமாணிக்க வதிக்கு

215. [கி]ழக்கும் வடபாற்கெல்லை உடையார் திருச்சிற்றம்பலமுடையார் தேவதானத்து–

216. ம் திருமேல்கோயில் திருநாராயண விண்ணகர் எம் பெருமா[ன்] திருவிடையாட்ட....

217. க்கும் உடையார் திருச்சிற்றம்பலமுடையார் தேவதானத்துக்கு[ம்] நடுவுட்....

218. ரு . . . இவ்வதிக்கு கிழக்கு இராசேன்திரசோழப் பேராற்றுக்கு வடக்கும் மாம்–

219. பாத்தி என்று பேர் கூவப்பட்ட நிலத்துக்கு கீழ்பாற்கெல்லையும் வடபாற்கெல்–

220. லையும் உடையார் திருச்சிற்றம்பலமுடையார் தேவதானத்துக்கும் தென்பாற்–

221. கெல்லை திருமேல்கோயில் திருநாராயண விண்ணகர் எம்பெருமான் திருவிடை–

222. யாட்டத்துக்கு வடக்கும் மேல்பாற்கெல்லை புவனிமாணிக்க [வ]திக்கு கிழக்கு–

223. ம் ஆக இன்னான்கெல்லையுள் நடுவுட்பட்ட நிலம் ம் இராசேன்திரவதி

## அர்த்த மண்டபம், துர்க்கைச் சிலைக்கு இடது பக்கச் சுவர்

224. க்கு கிழக்கு இராசேன்திர சோழப் பேராற்றுக்கு

225. வடக்கு திருநாவுக்கரசு விளாகமென்று பேர்

226. கூவப்பட்ட நிலத்துக்கு கீழ்பாற்கெல்லை உடையார் திருச்சிற்ற[ம்]–

227. பலமுடையார் தேவதானத்துக்கு மேற்க்கும் தென்பாற்கெல்லை

228. இவ்வாற்றுக்கு வடக்கும் மேல்பாற்கெல்லை இவ்வாய்க்காலு–

229. க்கு கிழக்கும் வடபாற்கெல்லை பெருவழி வரம்புக்கு தெற்க்கும் ஆ–

230. . . . . . .

231. க்கு கிழக்கு வீரராசேன்திர வாய்க்காலுக்கு வடக்கு நடுவுட்பட்ட நிலம் வடகரைப் பத்து

232. என்று பேர் கூவப்பட்ட நிலத்துக்கு கீழ்பாற்கெல்லை எல்லைக் குலைக்கு மேற்–

233. கும் தென்பாற்கெல்லை இவ்வாய்க்காலுக்கு வடக்கும் மேல்பாற் கெல்லையும் வடபாற்–

234. கெல்லையும் உடையார் திருச்சிற்றம்பலமுடையார் தேவதானத்துக்கு எல்லை

235. குலைக்கும் நடுவுட்ப்பட்ட நிலம் அரைக்காணி இவ்வதிக்கு கிழக்கு இவ்வாய்க் காலுக்கு மேற்க்கும் தெற்கு

236. தென்தேவதானம் [என்]று பேர் கூவப்பட்ட நிலத்துக்கு கீழ்பாற்கெல்லை அகரம் வீரராசே . . .

237. . . .

238. திருநாமத்துக் காணியான நிலத்துக்கும் எல்லை வாய்க்காலுக்கு மேற்க்கும் [தெ]ன்பா–

239. ற்கெல்லை இர[ா]சேன்திரசோழ வாய்க்காலும் மேல்பாற்கெல்லை பட்ட–

240. ப்பாழுக்குப் போகிற வழிவரம்புக்கு கிழக்கும் வடபாற்கெல்லை இன்னாயநார் திரு–

241. வோடைக்கும் உடையார் திரு நன்னி பள்ளி உடையார் தேவதான பலர் காணியா–

242. ன நிலத்துக்கும் நடுவுட்பட்ட நிலம் இங்கே இன்னாயநார் திரு ஓடை

243. நிலம் இவ்வதிக்கு கிழக்கு சுன்தரசோழ வாய்க்காலுக்கு வடக்கு இன்னாய நார்

244. திருத்தோப்புக்கு கீழ்பாற்கெல்லை சித்திரமேழி வினாயகப் பிள்ளையார் தி–

245. ருமஞ்சனப் பெருவழிக்கு மேற்க்கும் தென்பாற்கெல்லை வழிவரம்புக்கு வடக்–

246. கும் மேல்பாற்கெல்லை திருவெண்காட்டக[ர]த்துக்கு கிழக்கும் வடபாற்கெல்லை

247. உடையார் திரு நன்னி பள்ளி உடையார் தேவதானம் இராசநாராயணன் திரு ஒடைக்கு தெ–

248. ற்கும் ஆக இன்னான்கெல்லை நடுவுட்ப்பட்ட நிலம் திருமஞ்சனப் பெருவழிக்கு கிழ–

249. க்கு இராசேன்திரசோழ வாய்க்காலுக்கு வடக்கு வளையசெய் என்று பேர் கூவப்பட்–

250. ட நிலத்துக்கு கீழ்பாற்கெல்லை இன்னாயனார் திருநன்தவனத்துக்கு மேற்க்கும்

## தென் மகாமண்டபம், வடக்குச் சுவர்

251. . . .இவ்வாய்க்காலுக்கு வடக்கும் .......க்கு கிழக்கும் வட.......க்கு கிழக்கும் வட–

252. க்கில் உடையார் திரு நன்னி பள்ளி உடையார் தேவதா னம் பலர் காணிக்கும் தெற்கும் ஆக இன்னான்கெல்

253. லை நடுவு உப்பட்ட காக்கியன் பஞ்சநதி வாண பட்டர் பக்கல் [வி]லைகொண்ட நிலம் 3. இதன் கிழக்கு இன்னாயநார் .

254. ன்தவனத்துக்கு கீழ்பாற்கெல்லையும் வடபாற்கெல்லை உடையார் திருச்சிற்றம்பல முடையார் தே[வதானமு]

255. தென்பாற்கெல்லை வழிவரம்புக்கு வடக்கும் மேல்பாற்கெ[ல்லை] இன்னாயநார் நிலத்துக்கு கிழக்கும் ஆக இன்னான்கெ

256. கல்லை உள் நடுவுட்ப்பட்ட நிலம் . இங்கு விட்டுக் கிழக்கு [மா]ன்கொல்லை என்று பேர் கூவப்பட்ட நிலத்துக்கு கீழ்பாற்–

257. கெல்லை. . .சிற்றம்பலமுடையார் தேவதானத்துக்கும் தென்பாற்கெ–

258. ல்லை உடையார் திருவீரட்டானமுடையார் திருநாமத்துக்காணி.....முக்கு வடக்கும் ஆக இன்னான்கெல்லை உள்நடுவுட்பட்ட

259. நிலம் திருவீரட்டான வதிக்கு கிழக்கு கெங்கைகொண்டசோழ வாய்க்காலுக்கு வடக்கு பிச்சன் செய் என்று பேர் கூவப்பட்ட நில–

260. த்துக்கு கீழ்பாற்கெல்லையும் மேல்பாற்கெல்லையும் உடையார் திருச்சிற்றம்பலமுடையார் தேவ[தான]த்துக்கும் தென்பாற்கெல்லை இ–

261. வ்வாய்க்காலுக்கு வடக்கும் வடபாற்கெல்லை ஊற்சிறுவாய்க்காலுக்கு தெற்கும் இன்னான்கெல்லை.. நடுவுட்பட்ட நிலம் இங்கு

262. விட்டு வடக்கு குளச்செய் என்று பேர் கூவப்பட்ட நிலத்துக்கு கீழ்பாற்கெல்லை உடையார் திருச்சிற்றம்பலமுடையார் தேவதானத்துக்கு மே[ற்]கு–

263. ம் தென்பாற்கெல்லை வட......வ்வாய்க்காலுக்கு வடக்கும் மேல்பாற கெல்லை இவ்வதிக்கு கிழக்கும் .......கெல்லை இராசேந்திரசோழ வாய்க்–

264. காலுக்கு தெற்க்கும் ஆக இன்னான்கெல்லை உள் நடுஉட்பட்–

265. கெல்லை எழுபதின் மா உ .........மேற்க்கு பாற்கெல்–

266. யும் உடையார் திருச்சிற்றம்பலமுடையார் தேவதானத்துவா–

267. ய்க்காலுக்கு வடக்கு தட்டான் குண்டு என்று பேர் கூவப் . . .

268. ம் உள்ளூர் நிலத்துக்கு மேற்க்கும் தென்பாற்கெல்லை

269. டையார் திருச்சிற்றம்பலமுடையார் தேவதானத்துக்கு கிழக் . . .

270. உட்பட்ட நிலம் இவ்வதிக்கு கிழக்கு கெங்கைகொண்ட . . .

271. கீழ்பாற்கெல்லை உடையார் ........ தேவ ..........கெல்லை உடையார்–

272. தேவதானத்துக்கு ..........க்கும் மேல்பாற்கெல்லை எழுபதின்மா வதிக்கு கிழக்கும் வடபாற்கெல்லை இராசேன்திரசோழ வாய்க்காலுக்கு–

273. த . . . ம் ஆன இன்னான்கெல்லை உள் நடுவுட்ப்பட்ட நிலம் இவ்வதிக்கு கிழக்கு திருச்சிற்றம்பல வாய்க்காலுக்கு வடக்கு–

274. . . . கூவப்பட்ட நிலத்துக்கு கீழ்பாற்கெல்லையும் வடபாற்கெல்லையும் கடலூரன் ஆற்று . . . தென்பாற்கெல்லையும்

275. உடையார் திருச்சிற்றம்பலமுடையார் தேவதானத்துக்கும் நடுவுட்ப்பட்ட குளம் உட்பட . . . ம் திருவீரட்டான வதிக்கு கிழக்கு திருவாது.

276. ய்க்காலுக்கு வடக்கு வ[ா]ணிபுரி என்று பேர் கூவப்பட்ட நிலத்துக்கு கீழ்பாற்கெல்லை உடையார் விச்[2]வேச்[2]வர தேவர் தேவதான.

277. . . .தென்பாற்கெல்லை உடையார் திருச்சிற்றம்பலமுடையார் தேவதானத்துக்கு வடக்கு மேல்பாற்கெல்லை.

278. . . .க்கும் ஆக இன்னான்கெல்லை நடுவுட்ப்பட்ட நிலம்....ம் ஆ . . .

279. நீங்கலும் நீர்நிலமும் விளைநிலமு . . . உட்ப்பட்ட நிலம் . . . னிலம் பதினஞ்செய் மூன்றுமாவும் கல்லிலும்

280. செம்பிலும் வெட்டிக்கொள்ளச் சொன்னமைக்கு [கௌ[3]]தமன் சங்கரநாராயண பட்டன் எழுத்து உ இன்னில–

281. பதின் அஞ்சே மூன்று மாவும் கல்லிலும் செம்பிலும் வெட்டிக் கொள்ளச் சொன்னமைக்கு இவை காக்கியன் மாதேவபட்[ட] –

282. ன் எழுத்து இப்படிக்கு இவை பஞ்சநதிவாண பட்டன் எழுத்து இவை தலையாலங்காடுடையார் திருவையாறுடைய [பட்ட] –

283. ன் எழுத்து இப்படிக்கு இவை குறுக்கை உடையான் சட்டைப்பெருமாள் எழுத்து உ இவை ஊற் கணக்கு பறியலூர் கிழவன் பொன்

284. குறுக்கை உடையான் திருவெண்காடுடையான் எழுத்து உ

# 25. திருமயம் கோயில் கல்வெட்டுகள்

ஆர். மணி, திருமயம்

## 25 : 1

இடம் : *புதுக்கோட்டை மாவட்டம், திருமயம் வட்டம், திருமயம் கோட்டையின் கிழக்கு பகுதி சுவர் கல்வெட்டு*

காலம் : *பொ.ஆ 12-13ஆம் நூற்றாண்டு*

செய்தி : *நிலத்தை விற்றதற்கான செய்தி*

1. . . .[க]ள்ள பற்றுள் தடிக்கு தேவர்கன்மி கண்காணி. . .
2. . . .ண உண்டாகிச் சுற்று நாழியும் படுவதாகவும் இப்படிக்கு
3. . . .உடை யான் எழுத்து இப்படிக்கு இவை பெரிய நாட்டு
4. வீர ராசேந்திர சோழச் சி[லை]செட்டி எழுத்து இப்படி
5. . . . எழுத்து இப்படி அறிவேன் ஆதனூர்–

## 25 : 2

இடம் : *மேலது*

காலம் : *பொ.ஆ 12-13ஆம் நூற்றாண்டு*

செய்தி : *நிலத்தை விற்றதற்கான செய்தி*

1. . . .த்துள் வாயில் இந் நாயனற்கு–
2. . . .த நிலமாவது அழிஞ்சது வாங்கல்–
3. . . .லக்கலு நான்கெல்லைக்குள்–
4. . . .ம் மநித்து விற்று விலை பசுமான–
5. . . .ம் விற்று குடுத்த இந்நிலத்து–

# 26. எறையூர் வீரபாண்டியன் கல்வெட்டு

**சி. வீராரகவன்**
**வீ.ஆர். மங்கையர்க்கரசி,**
**கூ. பிச்சைப்பிள்ளை, விழுப்புரம்**

இடம் : *விழுப்புரம் மாவட்டம், வானூர் வட்டம், எறையூர் இடிபாடு களுடன் கூடிய சிவன் கோயில் தெற்கு முப்பட்டைக் குமுதம்*

காலம் : *வீரபாண்டிய தேவர், யா 4, பொ.ஆ 1345*

செய்தி: *கடமையை நாட்டு இறையிலியாகக் கோயிலுக்கு அளித்தமை*

1. ஸ்வஸ்தி ஸ்ரீ கோமாற பன்மர் திருபுவனச் சக்கரவர்த்தி ஸ்ரீ வீரபாண்டிய தேவற்கு யாண்டு நாலாவது தலைப்பரியள நல்லூரில் நாயனார் தவநெறி ஆளு–
2. டைய நாயநார்க்கு மதுராந்தக மதகுக்குத் தெற்கு இவ்வாய்க்காலுக்குக் கிழக்குச் சொக்கர் குழிக்கு வடக்கு இந்த எல்லைக்குட்பட்ட பல நியாயக்குடிகளால் வருங்கடமை இந்–
3. நாயனார்க்கு முதலடங்க நாட்டு இறையிலியாக விட்டோம் நாட்டவர் பணியால் இவை நாட்டுக் கணக்கு அறமிறங்கா நாட்டு பிரமராயன் எழுத்து
4. சுபமஸ்து

# 27. கீழவனம் கோயில் கல்வெட்டுகள்

ஜெ. சவுந்தரராஜன், சென்னை

## 27 : 1

இடம் : *காஞ்சிபுரம் மாவட்டம், செங்கல்பட்டு வட்டம், கீழவனம் கரிவரதராச பெருமாள் கோயிலுள்ள தெற்கு முப்பட்டை குமுதத்தில் துண்டுகளாக உள்ள கல்வெட்டுகள்*

காலம் : *பொ.ஆ 12ஆம் நூற்றாண்டு*

செய்தி : *ஆனந்தபட்டன் என்பவர் கொடுத்த தானம் பற்றிய செய்தி*

1. ஸ்வஸ்தி ஸ்ரீ ஸ்ரீ மதுராந்தக சதுப்பெதி மங்கலத்து மஹாசபையாரி. . .
2. ந் ஆனந்தபட்டநெற் ஸ்ரீ ஹ ஸ்தத்து உதக பூர்வ்வ [றெ] மாக நான் தானம் பண்ணிக் ... இயலாது இவ்வூர்–

## 27 : 2

இடம் : *மேற்படி*

காலம் : *12ஆம் நூற்றாண்டு*

செய்தி : *கையொப்பப் பெயர்கள் பொறிக்கப்பட்டுள்ளமை*

1. சங்கரநாரா[யணன்] அறிவேந் இராயூர் சொட்டைச் சி இராமபட்டன்–
2. அறிவேந் [து]ற்றறூர் திரு இரவிபட்டந்–
3. திருவரங்க நாராயண பட்டன்–
4. பொற்தேவபட்டந் . . .
5. கெடவப் . . . யாஜி எழுத்து இப்படிக்கு
   இவை இக்குடிச் சங்கரநாரா
6. முத்து இப்படி அறிவேந் இராயூர் சொட்டைச் சிராமப்பட்டனேந் . . . இப்படிக்கு . . .
7. யிற்ற இப்படி அறிவேந் [து]ள்ளலூர் ஸ்ரீ[தர] நேந்ட்டறெற் இப்படி அறி –
8. ரைத் திருவரங்க நாராயண [ப]ட்ட இப்படி அறிவேற் குன். . .
9. யா இப்படியறிவேந் இ[வை] பொற் தேவப்பட்டன். . .

## 27 : 3

இடம் : *மேற்படி*

காலம் : *11ஆம் நூற்றாண்டு*

செய்தி : *கையொப்பமிட்டவர்களின் பெயர்கள் பொறிக்கப்பட்டுள்ளன*

1. அதிரர்க்கு யாஜியார் எழுத்து இப்படிக்கு இவை எற்மாடத்து இஷிெ . . .
2. ந் எழுத்து இப்படிக்கு இவை கிண்கிணிச் செட்டு நாராயண பட்டநெழு
3. ப்புவில் எஞ்ஞட்டிநெந் இப்படி அறிவேந் மகசிரை விந்த குமாரபட்டநெ . . .
4. திரை அண்ட நாயக ஸந் பாதித்தநெற் இப்படி அறிவெந் இப்படி அறிவெற் பயிரைத் . . .
5. இப்படி அறிவெந் நம்பிந்தக் கரி டொ. . . பொதிரப்பட்ட ஸொமாயாஜியெந் இப்

## 27 : 4

இடம் : *மேற்படி*

காலம் : *11ஆம் நூற்றாண்டு*

செய்தி : *கையொப்பமிட்டவர்களின் பெயர்கள்*

1. [ஸ்ரீ] பிரியபட அதிரர்க்கு யாஜியார் எழுத்து . . .
2. யணப்பிநெந் எழுத்து இப்படிக்கு இவை இ . . .
3. வேந் குஞ்சப்புவில் எஞ்ஞட்டநேந் இப்படி . . .
4. வெநாதி திரை அண்டநாயக ஸற்பாதி . . .
5. பட்டநேந் இப்படி அறிவேநம்பி . . .

# 28. பேருஹள்ளி கல்வெட்டு

**செ. கோவிந்தராஜ், கிருஷ்ணகிரி**

இடம் : *கிருஷ்ணகிரி மாவட்டம், கிருஷ்ணகிரி வட்டம், பேருஹள்ளி ஊரிலுள்ள கோவிந்தராஜ பெருமாள் கோயிலுக்கு அருகே நடப்பட்ட கல்*

காலம் : *ஒய்சாள மன்னன் வீரராமநாதன் யா 9, பொ.ஆ 1265*

செய்தி : *நானாதேசி என்னும் வணிகக் குழுவைச் சேர்ந்த கண்டச் செட்டி என்பவர் வேற்பள்ளியில் மன்னரின் நலம் வேண்டி கோவிந்த பெருமாள் சிலையை நிறுவி அதன் பூசைக்காக நிலம் வழங்கியமை*

முன்பக்கம்

1. ஸ்வஸ்திஸ்ரீ ஸார்வபௌமச் ச–
2. க்கரவத்திகள் ஸ்ரீபே–
3. ாசள வீரராமநாத தேவர்க்கு யாண்டு 9
4. ஆவது தகடை நாட்டு பாரூர் பற்று வேற்பள்ளி
5. . . .ரங்கண நாராயணச் சதுப்பேதி மங்–
6. கலத்து இராமநாத தேவர் தோளுக்கும் வாளுக்கும்
7. ஆழ்வார் வடவிடார் உடைய நானாதேசி மலையாளரி–
8. ல் கா. . .உள்ளிட்டார் கண்டச் செட்டி இந்நாய–
9. னார் ஸ்ரீகோவிந்தப் பெருமாளை உகந்தருளப்பண்ணி
10. இவர்க்கு அமுதுபடி திருவிளக்கு உள்ளிட்ட [நி] பந்தங்களு–
11. க்கு உடலாக ஆற்றுக்கு வடக்கு வேலம் மேட்டு
12. வாய்காலுக்கு தெற்கும் நம்புன்செய்
13. . . . கொண்டருளும் விஸ்வநாத. . .
14. . . .குளத்து நன்செய் இலவங்–

பின்பக்கம்

15. கொல்லைக்கு பெருநாங்கெல்லை–
16. யும் ஆற்றுக்கு வடக்கு மணற்கொ–
17. ல்லைக்கு கிழக்கு கானோடைக்கு மேற்–

18. கு தோட்ட நிலம் உவர்க்கு தெற்கும்
19. மேட்டுக் குண்டிலும் கலசக் குண்டிலு
20. மரத்தசலி குண்டிலும் ஈரங்கொல்லை குண்–
21. டிலும் ஆக இ நன்செய் புன்செய்நிலமும் இன்று
22. நாலிலே சக்கரவர்த்தி இராமநா[த] தேவர் வாளுக்
23. கும் தோளுக்கும் நன்றாக தன்மதானம் பண்ணி குடுத்–
24. தோம் கோவிந்தப் பெருமாளுக்கு கண்டச்செட்டி
25. யெல்லைக்கல். . . நட்டு . . . கில் கெங்–
26. கை கரையில் குறார் பசு கொன்ற பாவங் கொண்ட
27. வனாகக் கடவான்.



# 29. மணப்பாறைப் பகுதியில் சில புதிய கல்வெட்டுகள்

**வீ. பரந்தாமன், புத்தாநத்தம்**

## 29 : 1

இடம் : *திருச்சிராப்பள்ளி மாவட்டம், மணப்பாறை வட்டம், கருமலைக் கிராமத்தைச் சேர்ந்த ஸ்ரீ ஹரிகிரி வரதராசப் பெருமாள் கோயில் கருடாழ்வார் சன்னதியின் வாயிற்படியில் உள்ள கல்வெட்டு*

காலம் : *பொ.ஆ. 12ஆம் நூற்றாண்டு*

செய்தி : *துண்டுக் கல்வெட்டு*

1. ஸ்வஸ்தி ஸ்ரீ . . .
2. நாரண . . .
3. நாயணாந . . .
4. நாட்டுத்தி . . .
5. ன தம்மம் . . .

## 29 : 2

இடம் : *மேற்படி கோயிலின் பலிபீடத்தில் உள்ள துண்டுக் கல்வெட்டு*

காலம் : *பொ.ஆ. 13ஆம் நூற்றாண்டு*

செய்தி : *இலங்கேச்சிரதேவன் துவராபதி வேளான் பெயர்கள் உள்ளன*

1. ஸ்வஸ்திஸ்ரீ தாடவ . . .
2. இலங்கேச்சிர தே[தவன்] . . .
3. னான துவார [பதி வேளான்] . . .

## 29 : 3

இடம் : *மேற்படி பெருமாள் சன்னதி மகாமண்டப முப்பட்டைக் குமுதம்*

காலம் : *பொ.ஆ.12ஆம் நூற்றாண்டு*

செய்தி : *துண்டுக் கல்வெட்டு துவராபதி வேளான் பெயர் உள்ளது*

1. க்கம் ஆக்சி தேவ பட்டனுக்கு துவராபதி வேளாந் மாற நாய . . .
2. [பஞ்]சமியும் வியாழக்கிழமையும் பெற்ற ஆனி மூல நாள் திங்கள் கிழமை . . .

3. [பே]ரெரியில் ஊர் கணக்கன் மரக்கால் நாக்கல நெல்லு உதக பூர்வமாக குவ . . .

## 29 : 4

இடம் : *பளுவஞ்சி பெருமாள் சன்னதியின் மேற்குப்புறம் உடைந்த குமுதப்படை*

காலம் : *பொ.ஆ.12ஆம் நூற்றாண்டு*

செய்தி : *துண்டுக் கல்வெட்டு குடிகாடு, கண்காணி செய் ஆகியவை கூறப் பட்டுள்ளன*

1. ன பலமுங் கொண்டரு–
2. ட யாதிலங்கை ெ . . .
3. க் கண்காணி செய்வ . . .
4. து எங்களுர் குடி காட்டில் . . .
5. துக்கு நீர் வருகிற ஆற்றுக்கு . . .
6. போந்த செவ்வைக்கு தெற் . . .

## 29 : 5

இடம் : *திருச்சி மாவட்டம், மணப்பாறை வட்டம், பழையபாளையம் செவல்பட்டி சிவன் கோயிலின் கருவறையின் மேற்குப்புறச் சுவரில் வடபுறம்*

காலம் : *பொ.ஆ 13ஆம் நூற்றாண்டு*

செய்தி : *கோயிலுக்கு இறையிலி நிலம் கொடுத்தமை*

1. ஸ்ரீ மருங்கூர் நாட்டு மருங்கூரான
2. செயங்கொண்ட சோழபுறத்து உடையார் திருவகத்தீ–
3. சுரமுடைய நாயனாருக்கு இத்தேவகனங்குடு–
4. த்த நிலங் காற்[ட்]படி வயலில் இறையிலியா–
5. க வேளார்கள் குடுத்த நிலம்
6. [ஒ]ருமா ஊர் மன்னுக்குறிச்சியில்
7. பெரிய உடையான் இறையிலியாக
8. ஏ[ரி] வயலில் குடுத்த நிலம் அ[ரை]ர செய் [நிலதோம் நெடிர்] இது
9. மாகேஷ்வர ரக்ஷை

## 29 : 6

இடம் : *மேற்படி சிவன் கோயிலின் கருவறையின் தென்புறச் சுவர்*

காலம் : *பொ.ஆ 13ஆம் நூற்றாண்டு*

செய்தி : *சிவன் கோயிலுக்கு பொற்கோயில் நம்பி முதலியோர் கொடுத்த நிலக் கொடை பற்றியது*

1. பொற்கோயில் நம்பி தங் குடி
2. க்காட்டில் குடுத்த நிலம் காணி
3. மா நின்க நாடாழ்வான் குடுத்ததில்
4. [இங்கான்] வடசேரி உடையார் குடி கா–
5. ட்டில் குடுத்த நிலம் அரைக்க[ாணி] மு–
6. ந்திரிகை மருங்கூர் நாட்டுக்கோன் குடுத்–
7. த நிலங்காணி பிச்சந் உடையான் ஊர்
8. மன்னுக்குறிச்சி வயலில் குடுத்த நிலம்
9. . . .மருங்கூர் வயலில் தண்டே
10. ஸ்வர விலைகொண்ட கோயில் [சி கொ] –
11. காணி அரைக்காணி [ஸாங்கிழவின்] தே–
12. வன் குடுத்த நிலம் அரைக்காணி காணி
13. உடையான் முந்நாள் குடுத்த நிலம் அரைக்காணி ஆக
14. அகத்தி தேவன் குடுத்த நிலம் இறை
15. யிலி கொடுத்தேன் அழகப் பெருமாள் துவாரபதி வேளான் மருங்கூர[நே]ந்
16. மாகேஷ்வர ரக்ஷை

# 30. கொங்குப் பகுதியில் சில கல்வெட்டுகள்

து. சுந்தரம், கோவை

30 : 1

இடம் : திருப்பூர் மாவட்டம், உடுமலைப்பேட்டை வட்டம், உடுமலை அருகில் கல்லாபுரம் ஊரில் வீதியில் உள்ள தூண்.

காலம் : கொங்குச் சோழன் வீரராசேந்திரன், யா. 11, பொ.ஆ. 1218.

செய்தி : உடுமலை அருகில் உள்ள கடற்றூரைச் சேர்ந்த தேவரடியார் களில் சொக்கன் வேம்பி என்பவள் இத்தூணைக் கொடையாக அளித்ததைக் கூறுகிறது. கல்வெட்டில் இடம்பெறும் சொக்கன் வேம்பி கடத்தூர் மருதீசர் கோயிலைச் சேர்ந்தவள். கடத்தூர் மருதீசர் கோயிலில் உள்மண்டபத்தூண் கல்வெட்டு அக் கோயிலுக்கு இவள் தூணும் போதிகையும் கொடை அளித்ததைக் கூறுகிறது.



தூணின் ஒரு சதுரம்

1. ஸ்வஸ்திஸ்ரீ வீரரா
2. ற்கு யாண்டு
3. றூர் இருக்குந்
4. ரில் சொக்கந்
5. ட தூண்

தூணின் அடுத்த சதுரம்

சேந்திரதேவ

11 வது கடற்

தேவரடியா

வேம்பி இட்

30 : 2

இடம் : மேற்படி மாவட்டம், வட்டம், உடுமலை அமராவதி அணைக்கருகில் உள்ள ஆற்றங்கரையில் சிதைந்து கிடக்கும் மண்டபத் தூண்.

காலம் : பொ.ஆ. 13ஆம் நூற்றாண்டு

செய்தி : அமராவதி ஆற்றங்கரையில் படித்துறை மண்டபத்தின் சிதைந்த தூண்களுக்கிடையில் ஒரு தூணின் சதுரப் பகுதியில் இக்கல்வெட்டு கிடைக்கப் பெற்றது கிழானடிகள் பிள்ளைகளில் பொன்னன் துறையன் என்பவன் தூண் ஒன்றினைக் கொடையாக அளித்ததைக் கூறுகிறது

1. ஸ்வஸ்திஸ்ரீ கிழா–
2. நடிகள் பிள்ளை–
3. களில் பொநன்
4. துறையந் இ
5. ட்ட தூண்

## 30 : 3

இடம் : கோயம்புத்தூர் மாவட்டம், கோயம்புத்தூர் வட்டம், வெள்ளலூர் சிவன் கோயில் சுவர்

காலம் : சாலிவாகன சகாப்தம் 1843, கலியுக ஆண்டு 5022, ஆனி-28; பொ.ஆ 11-7-1921

செய்தி : கோவைக்கருகில் உள்ள வெள்ளலூர் மஜார் இடையபாளையம் ஊரைச் சேர்ந்த குமரக்கோனான் என்பவரது மனைவி மருதக்காள் என்பவள் இச்சிவன் கோவிலில், காசி விசுவநாதர், விசாலாட்சி அம்மன் கடவுளரை எழுந்தருளிவித்து, நாயன்மார் அறுபத்து மூவர்களுடன் மண்டபம் எழுப்பி ரூபாய் இரண்டாயிரத்து ஐந்நூறு பெறுமானமுள்ள நிலம் கொடையாகக் கொடுத்தமை

1. சிவமயம்
2. சாலியவாகன சகாப்தம்– 1843–கலியு
3. காதி 5022–துன்மதி வருஷம் ஆனி மீ
4. 28 தேதி சோமவாரம் சிம்மலக்–
5. கினம் வெள்ளலூர்மஜார் இடைய
6. பாளையம் குமரக்கோனான்
7. பெண்ஜாதி மருதக்காள் வி –
8. ஸ்வநாத விசாலாக்ஷி அம்மன்
9. அறுபத்திமூவர் நாயன்மார்க–
10. ளுடன் மண்டபமும் நூதன

11. பிரதிஷ்டை உபயம்
12. வெள்ளலூர் சிங்கனூர்
13. செட்டிபாளையம் இந்த
14. மூன்று ஊரில் மருதக்கா
15. ளுக்கு பாகம் வந்த பூமி
16. 2550 ரூ பொரும் பூமி உபயம்

## 30 : 4

இடம் : கோவை இடிகரை வில்லீசுவரர் கோயில் தீபத்தூண் மண்டபத்தின் கூரைப் பகுதி

காலம் : கலியுகம் 4992. விக்ருதி ஆண்டு, தை மாதம் 21ஆம் தேதி சோமவாரம் = 2.2.1891.

செய்தி : இடிகரை வில்லீசுவரர் கோவில் தீபத்தூண் மண்டபத்தை இடிகரையைச் சேர்ந்த அழகிரி நாயுடுவின் குமாரர் இரங்கப்ப நாயுடு செய்தமை.



1. கலியுகாதி 4992ன் மேல் செல்லாநின்ற விகுர்தி ஸு
2. தை மீ 21 தேதி சோமவாரம் இந்த தீபஸ்தம்பத்தை இடிகரை
3. அழகிறி நாயுடு குமாரர் இரங்கப்ப நாயுடு செய்து
4. வைத்தார் வில்லீஸ்பரஸ்வாமிக்குபயம்

# 31. வண்ணாரிருப்பு கோயில் கல்வெட்டுகள்

**வீ. முத்துக்குமார், பாண்டிச்சேரி**

## 31 : 1

இடம் : *சிவகங்கை மாவட்டம், திருப்புத்தூர் வட்டம் பிரான்மலைக்கு வடபுறமாக உள்ள வண்ணாரிருப்பு ஊரின் வடபுறம் சாலையோரமாக உள்ள இடிந்தசிவன் கோயில்*

காலம் : *சுந்தரபாண்டியன், யா 13, பொ.ஆ 1229*

செய்தி : *மணலூர் நாட்டிலுள்ள பூண்டியான ஸ்ரீபுண்டரிகநல்லூரி லுள்ள மறமாணிக்க ஈஸ்வரமுடைய நாயனார் கோயிலுக்குப் பூண்டி, முகக்குன்றத்தூர், திருவாண்டவூர் மற்றும் பாலைக்குறிச்சி ஆகிய நான்கு ஊரார்களும் சேர்ந்து திருப்படிமாற்று போன்ற வழிபாட்டுச் செலவிற்காக நிவந்தம் அளித்தமை*

1. ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவனச் சக்கரவத்திக-
2. ள் [சிரி] சோணாடு வழங்கி அருளிய
3. சுந்தர பாண்டிய தேவற்கு ய்யா-
4. ண்டு 13[ஆ]வது மணலூர் நாட்-
5. டு பூண்டியான சிபுண்டரிகநல்-
6. லூர் மறமாணிக்க ஈச்சுரமுடைய
7. நாயனா[ர்]க்கு பூண்டி ஊரோமும்
8. முகக்கு[ன்]றத்தூரோமும் திருவா-
9. ண்ட ஊரோமும் பாலைக்குறிச்சி ஊ-
10. ரோமும் இன் நால்லூரோமும் எங்க
11. நாயனார் மறமாணிக்க ஈஸ்வரமுடை-
12. டயாற்கு காரணவர் தூணிப்ப-
13. தக்கும் ஆள் தூணிய்யும் ஆட்டை-
14. வ[ட்]டம் திருப்ப[ா]டிமாற்று
15. . . . ன திராச்சிய பகல்
16. . . .க் கல்வெட்டி நெ
17. . . .கர் ரச்செ

## 31 : 2

இடம் : *மேற்படிக் கோயில் திருவாசல் தூண்*

காலம் : *பொ.ஆ 13ஆம் நூற்றாண்டு*

செய்தி : *திருவாசலை வலைவாணர் என்பவர் செய்தமை*

1. இத்திரு
2. வாசல்
3. வலை–
4. வாண–
5. ர் தந்ம[ம்]

## 31 : 3

இடம் : *மேற்படிக் கோயில்*

காலம் : *சுந்தரபாண்டியன், யா 1, பொ.ஆ.14ஆம் நூற்றாண்டு*

செய்தி : *சுந்தரபாண்டியனின் முதலாவது ஆட்சியாண்டில் கல்வாயில் நாட்டுக் குலசேகரபுரத்தைச் சேர்ந்த திருவேட்பூருடையான் சேரமான் அய்யர்க்குநல்லார் என்பவர் மறமாணிக்க ஈஸ்வரமுடைய நாயநார் கோயிலின் திருக்குளத்தைச் செய்தமை*

1. ஸ்ரீ சுந்தர பா[ண்டிய]–
2. ய தேவற்கு 1 வ–
3. து கல்வாயி ந–
4. ாட்டு குலசேக–
5. ரபுரத்து திருவே–
6. வட்பூருடைய–
7. ான் சேரமான்
8. அய்யர்க்கு ந–
9. ல்லார் மறமா–
10. ணிக்கசுரமுடை–
11. ய நாயந[ா]ர் திரு
12. க்குளம்.

# 32. விசையன்குடி கல்வெட்டுகள்

பா. பாலமுருகன், பாண்டிச்சேரி

## 32 : 1

இடம் : *சிவகங்கை மாவட்டம், இளையான்குடி வட்டம், விசையன்குடி சிவன் கோயில் தெற்கு, மேற்கு, வடக்கு அதிட்டானத்தில் உள்ள கல்வெட்டுகள்*

காலம் : *பொ.ஆ 13ஆம் நூற்றாண்டு*

செய்தி : *விசையன்குடி சிவன் கோயிலுக்கு அன்றாட பூசை செலவினங்களுக்கு நிலக்கொடை அளிக்கப்பட்டு அந்நிலத்தின் எல்லைகள் கூறப்பட்டுள்ளன வரகு, தினை, எள் போன்றவை விளையும் நிலங்கள் பல நீர்ப்பாசன மடைகளால் நீர்பாயும் வயல்கள் பற்றி இக்கல்வெட்டு குறிப்பிடுகிறது கோயில் திருப்பணியின்போது கல்வெட்டு பொறித்த கற்கள் முறை மாறி வைத்துக் கட்டப் பட்டுள்ளதால் கல்வெட்டு தொடர்ச்சியாக இல்லை (தெற்கு 1-5, மேற்கு 6-7, வடக்கு 8-13)*

I

1. ஸவஸ்தி ஸ்ரீ திரிபுவனச. . . ரின்மை கொண்டான். . .
2. வன் ஆயூர்க்குளத். . .ப்போக்கு வெள்ளிம. . .
3. நிலங். . .வான்பக்கல்வி. . .
4. . . .ஆகசுந்தரபாண்டிய. . .
5. உட்படப் பதின் கலமும். . . துலாவிறைத்து விளைந்து–
6. க்குநம்பேர் வோலையும். . . சந்திராதித்தவர் செல்வதாக

II

1. சையன்குடி திருக்கானப்பேருடையா. . .
2. யன்பக்கல் விலைகொண்ட ஆ. . .
3. பக்கல் நிலம் அரைக்காணி முந்திரிகை. . .
4. வரையன் கீழரைக்கு கடமையும் நக. . .
5. சயல் ஒன்றுகாலும் எள் வரகு தினை. . .
6. கொள்க. . . செவ்விருக்கைநாட்டுச் சக்க. . .

## III

1. நிவந்தங்களுக்கும் மாஹேசுவரகண். . .
2. அரைக்காணி முந்திரிகை. . .
3. . . .வையன்பக்கல் வ. . .
4. கமும் தருவதான அச்சும்காரியவாராட்சி. . .
5. [வ]ரகு விளைந்த நிலத்துக்கு இவ்வூர். . .
6. ஆண்டாள் பட்டாலக[ன்]ன வத்தவராயனே. . .

## IV

1. களுக்கும் இந்நாயனாற்கு திருப்படிமாற்றுள்ளிட்டு வேண். . .
2. . . .ரயன்பக்கல் விலைகொண்ட சங்கன் பக்கல் நில. . .
3. க்கிசெய்நில. . .
4. பாட்டமும் பஞ்சுபீலி சந்திவிக்கிரகப் பேறும். . .
5. பாதியும் இன்நாயனார் கோயிலிலும் ஐய். . .
6. கோலா. . .

## V

1. . . .ய . . .யன்பக்க. . .
2. லைகொண்ட தடி இரண்டு. . .
3. பயிர்பாத்து விளைந்த நிலத்துக்கு மாத்தா. . .
4. எண். . .ம் பொன்வரி அச்சும் நாலாவது. . .
5. ல்லூரையந் விரதமுடித்த பெருமாள். . .முதல். . .

## VI

1. யமடையால் நீர்பாய்ந்து. . .
2. தடி மூன்றுக்கும் எல்லை. . .
3. நீர்பாயும் பொதியறை வய. . .
4. த்துங்க வயக்கல் தடிபல. . .
5. க்கல் வடகீழ் மூலைத்தடிக்கு எல். . .
6. கும் கல்லுக்கும் கிழக்கும் வாய்க்க. . .

## VII

1. . . .
2. . . .நிலத்து. . .

3. லை. . .

4. லை தேவேந்தராயன் சிவித. . .

5. க்காலுக்கும் மேற்கும் இச்செ. . .

6. தெற்கும் ஆக இநான்கெல்லைக்கும். . .

## VIII

1. ஸ்வஸ்தி ஸ்ரீ கங்கை நாராயண சக்கரவர்த்தி ஓலைக். . .

2. ரையன் உள்ளிட்டார் சீவிதத்துக்கு. . .

3. சிவலவன் அழகன் சிவிதத்து. . .

## IX

1. சையன்குடியில். . . திருக்கானப்பேரு. . .

2. செய்க்கு வயக்கும் . . .ய. . . குமல. . .

3. . . .

4. ண்டியன். . .

5. வாய்க்காலுக்கு வடக்கு. . .

## X

1. மஹேஸ்வர கண்காணி செய்வா

2. குத்தெற்கும் இந்நான்கெல்லை

3. . . .ருந்தா[ல்] அளக்கும்

4. க்காலுக்குத்தெற்கும் ஆக இந்நான்கெ–

5. [கெறம்]ஆக இநான்கெல்லைக்குப்

6. . . .வாய்கால். . .கிழக்கு

## XI

1. . . .

2. . . .

3. . . .

4. . . .ட்டமை ஒருமா. . .

5. . . .

6. ம் இரண்டுமா மு. . .

7. முத்த. . .கும் முருக. . .

## XII

1. ன. . . உள்ளிட்டு வேண்டு. . .
2. . . .
3. . . .
4. . . .
5. ந்திரிகையும் அஞ்சாதான் பக்கல்
6. . . .க்கு மேற்கும் வாய்காலுக்கு வட

## XIII

1. [ந்தமைக்கு] இவ்வூர் வயலில் புற்றன். . .
2. பாயும் [வண்ணா]செய்க்கும் இதன்கிழக்கு. . .
3. . . .பக்கல்மடைய. . .
4. த்தங்கலக்கமடையால் நீர்பாயும். . .
5. டையால் நீர்பாயும் மனமேதுணை வய. . .
6. யும் தேவிவயக்கலுக்கும் பாலைசெய். . .

## 32 : 2

இடம் : *சிவன் கோயிலுக்குப் பின்புறம் உள்ள தனிக் கல்*

காலம் : *சகம் - 1432 பொ.ஆ. 1510*

செய்தி : *சுந்தரதோளுடையார் ஆன இறந்த காலம் எடுத்த மாவலி வாணாதிராயர் காலத்தில் மண் காத்த பெருமாள் என்ற திருமால் கோயிலுக்கு நிலம் அளித்ததைத் தெரிவிக்கிறது இதில் அழகியநம்பி காலிங்கராயர் என்ற அதிகாரி குறிப்பிடப்படுகிறார்*

1. [சுபமஸ்து] சகாப்த்தம்
2. 1432 இதன் மே–
3. ல் செல்லா நின்ற–
4. து [வருசம்] சித்திரை–
5. . . .கருங்குடிநாட்டு
6. . . .விசையன்குடி
7. அழகியநம்பி

8. காலிங்கராயர் வெ–
9. ள்ள ஈசுவ. . .இரா
10. யசெவியார் கல்வெட்–
11. டி குடுத்தபடி சுந்தர–
12. த்தோளுடையார்
13. ஆன இறந்தகால
14. மெடுத்த மாவலி
15. வாணாதராயர் கா
16. ணியாட்டம் மாய்
17. எனக்கு விசைய
18. ன்குடியில் சந்தா
19. லத்தில் இவ்வூர் நாய
20. னார் மண்கா[த்]த பெரு
21. மாள். . .தி
22. ருவிடை ஆட்டம்
23. ஆகவிட்ட–
24. நயினார் திரு–
25. . . .

# 33. கருப்புக்கால் கல்வெட்டுகள்

**பா. பாலமுருகன், பாண்டிச்சேரி**

**இடம் :** *மதுரை மாவட்டம், மதுரை வடக்கு வட்டம், மதுரையிலிருந்து சிவகங்கை செல்லும் சாலையில் சுமார் 32 கி.மீ. தொலைவு கருப்புக்கால் இரண்டு இடங்களில் தனிக்கற்களில் வணிகப் பகுதியைக் குறிக்கும் எல்லைக் கல்வெட்டுகள் உள்ளன*

**காலம் :** *பொ.ஆ 13-14ஆம் நூற்றாண்டு*

**செய்தி :** *இக்கல்வெட்டு கருப்புக் காலன் ஆன அழியாவிரதங் கொண்ட நல்லூர் என்ற ஊரில் இருந்த இரங்கல்மீட்டான் பெருந்தெரு என்ற வணிகப் பகுதி பற்றி குறிப்பிடுகிறது மேற்குறித்த செய்தியே 2வது கல்வெட்டிலும் உள்ளது.*

## I

1. ஸ்வஸ்திஸ்ரீ நாயனார் அழகி
2. ய சொக்கநார் தேவதா
3. னம் கருப்புக்காலன்
4. அழியா விரதங்
5. கொண்ட நல்லூர்
6. இரங்கல் மீட்டான்
7. பெருந்தெரு

## II

1. ஸ்வஸ்திஸ்ரீ நாயனார்
2. அழகிய சொக்கநார்
3. தேவ
4. கருப்புக்
5. காலன்
6. அழியா விரதங்
7. கொண்ட நல்லூர்
8. இரங்கல் மீட்டான்
9. பெருந் தெரு

# 34. ஊட்டத்தூர் கல்வெட்டுகள் – II

**இல. தியாகராஜன், கு. கண்ணகி,**
**இரா. அகிலா, அரியலூர்**

**34 : 1**

இடம் : *திருச்சிராப்பள்ளி மாவட்டம், இலால்குடி வட்டம், ஊட்டத்தூர் சுத்தரத்தினேஸ்வரர் கோயில் இராஜகோபுர வாயில் உட்புற வலப்பக்கச் சுவர் (இ க ஆ 1912 எண் 525)*

காலம் : *இரண்டாம் மாறவர்மன் குலசேகரபாண்டியன் (1268-1318) யா 33, (பொ ஆ 1301)*

செய்தி : *இக்கல்வெட்டில் மன்னரின் அதிகாரியாகக் குறிப்பிடப்படும் வாணாதராயன் என்பவர் திருப்பைஞ்ஞிலியிலுள்ள இரண்டாம் மாறவர்மன் குலசேகரன் கல்வெட்டில் குறிப்பிடப் படுகிறார்*

*இது மன்னரின் ஆணையாக ஊற்றத்தூர் நாட்டு நாட்டார் களுக்கு அனுப்பபட்ட ஓலையாகும் மன்னர் இப்பகுதியில் வாரம், வரிசை என்ற வரிகளைக் கடந்த ஆண்டுகளில் வசூலித்தபடியே இப்போதும் வசூலித்துக் கொள்ள ஒப்புக்கொண்டு ஆணை அனுப்பியுள்ளார் வரி வசூல் செய்யப்படும் நிலங்களில் கடந்த ஆண்டுகளில் வரி விலக்கு அளிக்கப்பட்ட ஊர்மைஇறையிலி, பற்றுப்பேறு, தேவதானம், திருவிடையாட்டம் , பள்ளிச்சந்தம் , ஐய்யன்பாத்தி (ஐய்யனார் கோயில் நிலம் ), மடப்புறம் , அகரப்பற்று, பட்டவிருத்தி ஆகிய நிலங்களுக்கு முன்பு போலவே வரி விலக்கு அளிக்கவும் ஒப்புக் கொண்டார் இந்த ஆணையை ஓரூருடையான் , வாணதாராயன் ஆகியோர் எழுதியுள்ளனர்*

1. ஸ்வஸ்திஸ்ரீ திருபுவனச்சக்ரவத்தி கோனேரின்மை கொண்டான் ஊற்றத்தூர் நாட்டு நாட்டாற்க்கு தங்கள் நாடு முப்பத்து மூன்றாவது
2. எதிராமண்டு முதல் வாரமும் வரிசையுங் கொள்வதாகச் சொன்னோம் இப்படி செய்யுமிடத்து கதிர்ப்பயிர் வாரப்பற்று வார
3. ங் கொள்ளவுங் கடமைப் பற்று முன்பிலாண்டு கொள்ளும்படி கொள்ளவும் இப்படி செய்யுமிடத்து முன்பிலாண்டு ஊர்
4. மையிறையிலிப் பற்றுப் பேறு முன்பிலாண்டு விடும்படி விடவும் தேவதானம் திருவிடையாட்டம் பள்ளிச் சந்தம் ஐய்யன் பாத்தி
5. மடப்புறம் அகரப் பற்று பட்டவிருத்தி உள்ளிட்ட இறையிலிகள் முன்பிலாண்டு விடும்படி விடவும் இப்படிக்கு இவ்வோலைப்

38. முதல் திருவிடையாட்டமாக விட்ட நிலம் நூறுமாவும் கையாண்டு கொண்டு இத்தரவின்படி உள்ள மருசாதி கொள்ளும்

39. பல உபாதி வினியோகம் உட்பட்ட வகையும் புன்செய் நிலத்துக்கு பணம் இரண்டாகவும் விளை ஒன்றுக்கு தானியம் பதக்காகவும்

40. முதலாகக் கொண்டு அமுதுபடி சாத்துப்படி திருப்பரி வட்டம் திருநந்தா விளக்கு உட்பட்ட வகையெல்லாம் தீர்வர நடத்திக் கொ

41. ண்டு போகவும் இத்தரவுபடிபாடாகவு கல்லிலும் செம்பிலும் வெட்டிக் கொள்ளும் கணக்கு அழகிய மன்னார் எழுத்து

42. சந்திராதித்தவற் செல்வதாக.

## 43 : 17

இடம் : *திருக்குறுங்குடி - திருப்பாற்கடல் நம்பி கோயில் - முன்பு வெளியில் நிற்கும் கல்லில் நாற்புறமும் வெட்டப்பட்டுள்ள கல்வெட்டு*

காலம் : *சகம் 1590 கொல்லம் 844, பொ.ஆ 1668*

செய்தி : *செண்பகமாறன் காளந்தியப்பன் பெயரில் சத்திரம் ஒன்று உருவாக்கி அதில் பிராமண போஜனத்துக்கு நிலம் கொடையளித்த செய்தி.*

முதல் பக்கம்

1. ஸ்ரீதுல்யம் தத்$_3$தம் ஜக$_3$த$_3$க அபி$_2$ ஸ்த:
2. ஸ்வதஸ$_0$ ஹார காரணம் ஸாஸந
3. ம் ச$_3$ாஸ்வதம் விஷ்ணோம் ஸ்ரீ திரர$_0$க$_3$நி
4. வாஸிந: சகாத்தம் சதருளகய 1590
5. ன்மேல் செல்லாநின்ற சொல்
6. லம் 844 வருசம் கீலக வருசம் காத்
7. திகை *மீ* 7உ பூறுவட்பசத்து திரை
8. யோதசியும் சுக்கிரவாரமும்
9. பவோக சுபகரணமும் பெற்ற அசு–
10. வதி நட்சத்திரத்து நாள் செய்த
11. தன்ம சாதனமாவது உதயம–
12. ரர்த்தாண்ட பந்தல்கீழ் புசபல
13. வீரவசந்ததிகீ$_3$ மதுரம் தேவமக–
14. ாராசாவின் பீடத்து நாமும் நம்பெ–

15. ண்டு களோடுங்கூடியிருந்து ஆராத–
16. னை கொள்ளாநிற்க நம் வீட்டில்
17. காரியஞ் செய்வாரில் மடப–
18. களில் பேரருழாழசீயரும்
19. பெரிய திருமலை நம்பியும் நம்ம–
20. டிப்பிடிக்கும் நம்பிமாரும் சீவர
21. சாலதாசனும் வாசல் காரியஞ்
22. செய்யும் சொக்கலிங்க நாயக்கர்
23. காரியத்துக்கு கர்த்தரான நம்.

இரண்டாம் பக்கம்

1. வடமலையப்பர்
2. திருமலை சொழுந்தர்
3. இருவப்பர் மனு
4. ஷரான
5. சொக்கனாதனும்
6. வாசல்கணக்–
7. கெழுதி போ–
8. தும் பேரும் அ
9. னைத்துக் கொ–
10. த்துங்கூடிக்
11. கற்பித்த காரி
12. யமாவது நம்–
13. பி செய்வார் ந–
14. ம் முடன்வந்–
15. து சொன்னக–
16. ாரியமாவது
17. திருக்குறுங்கு
18. டி தென்பால்
19. நம் திருப்பாற்
20. கடல் நம்பிகோயி–
21. லுக்கு வட–

22. க்கு நம் சீபண்

23. டாரக்கணக்கு

மூன்றாம் பக்கம்

1. செண்பகமாறன் காளத்தியப்பன்
2. சத்திரம் பிராமணபோசனம் நடக்–
3. கும்படிக்கு நாம் திருஉளம் உகந்து
4. கற்பித்த நிலமாவது நம் புருஷ
5. நாராயணப் பேரேரியில் நாம்பூமித–
6. ரனவிரைக் கூருக்கு நிலம் காணி அரைக்காணியும்
7. காளத்தியப்பன் கிரையமாகக் கொ
8 ண்டுவிட்டபடியானாலே எல்கை தெ
9. ன்கட்டளை இரண்டு காணி அரைக்காணியும் முன்னடைந்த ச
10. த்திரத்துக்கு திருவரங்கனேரியில் வி–
11. ட்டசெய் 5 பரிவர்த்தினையாகவிட்ட–
12. து தெய்வங்களுள் மடப்புறம் 25
13. அட்டணைப்பள்ளம் 120 ஆக தி
14. ருத்திவிட்டது கேசவனேரி காணி அரைக்காணியும்
15. மேல் நடுக்கன்பாறை உவகிள் நடுக்–
16. கன்பாறை உஉய ஆக உயஉயவும் கரித–
17. ன் செங்காரமுடையார் கோயிலுக்கு
18. கீழ்த்தோப்பும் தெங்கரை ஊருக்கும் மேற்
19. கு தோப்பும் பஞ்சை விரை சம்நாம் உ
20. ண்ணுடசொத்தில் ஒதுங்குங்கலத்தில்
21. கட்டளையிட்டது நாள் 1க்கு வெள்ளித்
22. தமனகச்சாதம் அஞ்சுபடி அய்வகை
23. க்கறி சாத்துப்படிக்கு இ[அரை] தோசை 1 வடை
24. . . யகசுருள் 17 நெய்படி வலு [3/8] கட்டளை

நான்காம் பக்கம்

1. யிட்டோம் இதுக்கு
2. அஞ்சாலி மேல்வாரம்
3. சில்வரி பெருவரி [செட்]

4. . . . வேகாரி மற்றுமு
5. ள்ள சமஸ்தபிரா
6. ப்த்தியும் சுத்தக்ர
7. யமானியமாக ஆச
8. ந்திராதித்தவற் சந்த–
9. திபிரவேசமாக க
10. ல்லிலும் செம்பிலும்
11. வெட்டிக் கையாண்–
12. டு கொள்ளும்படிக–
13. ற்பித்து திருவாய்
14. மொழிந்தருளினபடி
15. க்கு நம். . .
16. னால திருமந்திரஒ–
17. லை நாயகம். . .
18. . . .பனுக்கு
19. கணக்கு பேர–
20. ருளாள மூவே–
21. ந்த வேளா
22. ன் எழுத்து சு$_3$
23. ப$_3$ மஸ்து

## 43 : 18

இடம் : *திருப்பாற்கடல் நம்பிகோயில் மேற்கு அதிட்டானம் (கருவறை) முப்பட்டைக் குமுதம் ஜகதிப்படையில் உள்ளது*

காலம் : *எம்மண்டலமும் கொண்ட மாறவர்மன் குலசேகரன், யா 17, பொ.ஆ 1285*

செய்தி : *பழங்கல்வெட்டைப் புதிதாக வெட்டியது. மூவேலி நிலம் தேவதான இறையிலியாகத் திருப்பாற்கடல் ஆழ்வார்க்கு தேவியார் புவனி முழுதுடையார் வளாகமெனப் பெயரிட்டு வழங்கப்பட்டமை*

1. ஸ்வஸ்திஸ்ரீ கோமாற பன்மரான திரிபுவனச் சக்கரவர்த்திகள் எம் மண்டலமுங்கொண்டான் ஸ்ரீ குலசேகரதேவற்கு யாண் 17வது ஆவணி மாதம் ஆறாந் தேதி ஸ்ரீ [வி]ம

2. ரனம் வாங்கி சேகையால் முன்புதுகை கல்வெட்டின படி எடுத்து இந்த ஸ்ரீ [வி]மானம் சமஞ்சபின் . . .வர்க்கு 24 ஆவது ஆனி மாஸம் முதல் தியதி[நாம்] வெட்டினபடி ஸ்வஸ்திஸ்ரீ

3. திருமடந்தையும் ஜெயமடந்தையும் திருப்புயத்தினிதிருப்ப இரு நிலமும் பெரு . . . ட்சையும் குடை நிழற்ற மன்னவரெல்லாம் திறை–

4. மணிமுடி சூட்டித் தென்குமரியும் வட . . . வேதிரை கடலெல்லையாக உலக முழுதுங் கயலாணை பரந்த–

5. ஸனத்து உலகமுழுதுடையாளொடும் வீற்றிருந்தருளிய மாமுதல் மதிக் குலம் விளங்கிய கோமுதற் கோச்சடையன் பன்மரான திருபுவனச் சக்கரவத்திகள் குலைசேகர தேவற்கு யாண்டு

6. ஆறாவது நாட்டாற்றுப் போக்கு திருக்குறுங்குடி திருப்பாற்கடல் ஆழ்வார்க்கு மாடக்குளக்கீழ் மதுரை உள்ளாலை அழகிய பாண்டியன் கூடத்து பள்ளிக்கட்டில் பாண்டிய ராசனில் எழுந்தரு

7. யிருந்து யாண்டு ஆறாவது நாள் இருநூற்று அறுபதினால் நாட்டாற்றுப் போக்கு திருக்குறுங்குடி திருப்பாற்கடல் ஆழ்வார்கோயில் ஸ்ரீ வைஷ்ணவர்கள் செயத் திருவாய் மொழிந்தருளினபடி ஆழ்வார்க்கு முன்னாள்

8. தேவதான இறையிலியென்று இத்தேவர்க்கு திருப்படி மாற்றுள்ளிட்டு வேண்டும் நிவந்தவங்களுக்கு இந்நாட்டு பராக்கிரம பாண்டியச் சதுர்வேதிமங்கலத்து பயிரேறாது காடு

9. கொள்ளிய் கிடந்தனிலத்து ஸ்ரீ வாஸதேவப் பேரேரியில்னின்றும் வோந இடவாற்றுக்கு கிழக்கு. . . ஐயன் கோயிடைய மூவேலி நிலம் தேவதான இறையிலியாக யிட்–

10. டு புவனி முழுதுடைய வளாகமென்று பேரால் வேறு பிரிக்க பெற வேணுமென்று நம் பெண்டுகளில் புவனுமுழுதுடையாள் நமக்குச் சொன்னமையில் நாட்டாற்றுப் போக்குத்

11. திருக்குறுங்குடி திருக்கோடித் திருப்பாற்கடலாழ்வார்க்கு திருப்படிமாற் றுள்ளிட்டு வேண்டும் நித்த நிமந்தங்களுக்கு பராக்ரம பாண்டிய சதுர்வேதிமங்கலத்து நீர் நிலக்கொடை நிலத்து–

[பூமிக்குக் கீழ் கல் உள்ளது. சிமெண்ட் தளம் போடப்பட்டு விட்டது]

**43 : 19**

இடம் : *மேற்படி கோயில் முதல் பிரகாரம் தென்சுவர்*

காலம் : *பொ.ஆ 17-18ஆம் நூற்றாண்டு*

செய்தி : *துண்டுக் கல்வெட்டு. திருச்சுற்று மாளிகைச் சுவர் பகுதி கட்டுவித்தமை*

1. இப்பத்தி மூன்று முழமும் கல்பத்தி
2. செய்தநாளில் சோழ மண்டலத்து
3. ஓமாம்புலியூர் முதலிச்சியாராஜன் செய்
4. விச்ச தன்மம்

## 43 : 20

இடம் : *மேற்படி இடம்*

காலம் : *சகம் 1393, பொ.ஆ. 1471*

செய்தி :

1. ஸ்வஸ்திஸ்ரீ சகாப்தம் **1393** இதன் மேல். . .லையும்
2. பூர்வபட்சத்து தசமியும் திங்கள் கிழமையும் பெற்ற பூசத்து நாந்
3. இப்பத்தி மூன்று முழமும் சோழமண்டலத்து ஓமாம்புலியூர்
4. . . . . . .
5. செய்வித்தன்மம்

## 43 : 21

இடம் : *திருப்பாற்கடல் ஆழ்வார் கோயில் முதல் திருச்சுற்று தென் சுவர்*

காலம் : *கி.பி.13-14ஆம் நூற்றாண்டு*

செய்தி : *திருச்சுற்று மூன்று முழம் உயரம் கட்ட தனிமம் வழங்கியது*

1. ஸ்வஸ்திஸ்ரீ சகாப்தம் 12. . . இதன் மேல்ருஷப$_3$
2. நாயிற்று 24உயும் பூர்வபட்சத்து திரயோதசியும் புதன்
3. கிழமையும் பெற்ற விசாகத்து நாள் இப்பத்திமூன்று முழமும்
4. சோழமண்டலத்து திருமழபாடியில்–
5. வதுஸசெ$_3$ாத்ரத்து அம்பலங்கோயில் கொ–
6. மகிழந்தினான் சேவித்த தன்மம்

# 44. காயல்பட்டினம் அழகிய மணவாளபெருமாள் கோயில் கல்வெட்டு

த.த. தவசிமுத்து, ஆறுமுகநேரி

**இடம் :** *காயல்பட்டினம், அழகிய மணவாள பெருமாள் கோயில் வடகிழக்கு கோட்டையின் உள்புறம் மேடைக்கு மேலே உள்ள கல்வெட்டு*

**காலம் :** *பொ.ஆ.16ஆம் நூற்றாண்டு*

**செய்தி :** *அழகிய மணவாள பெருமாள் கோயில் வழிபாட்டிற்கு நிலம் விடப்பட்டுள்ள செய்தி உள்ளது. தற்போது காயல்பட்டினம் என்றழைக்கப்படும் ஊர், அக்காலத்தில் உதையமார்த்தாண்டன் பட்டினம் என்று வழங்கப்பட்ட செய்தி உள்ளது.*

1. சு$_0$பமஸ்து ஸ்வஸ்திஸ்ரீ மஹா மண்டலீச்$_0$வரந்வீரகேரள. . .
2. ஸப்ரதி$_4$க$_2$த ப்ரதிவிராஜ்யஞ் செய்தருளாநின்ற காலம் ச$_0$காப்$_3$தம் 14.4ன் மேல்
3. செல்லா நின்ற . . . வபக்ஷத்து த்ரிதியையும் ஆதித்தவாரமும் பெ–
4. ற்ற அத்தத்து நாள் குடநாட்டு உதைய மாத்தாண்டன் பட்டினத்து நயினார் அழகிய மணவாள



5. பெருமாள் நயினாற்கு அஞ்சிரண்டு குடுத்து தளிகை
6. கற்பித்த அமுதுபடிக் பத்துக்கு நானாழி . . .
7. . . .
8. ஆர. . . வெங்கட
9. த்துப்படிக்கு வகையாகா. . . கொண்டு குடுத்த வளநாடான வீரவளநாட்டு
10. கிகுளமும் புரவுங் கொண்டு மாதத்து திருவிள
11. . . . மதுரைகை நம்பி நடத்தும் கற்பித்தது

# 45. கொழமங்கலம் மடைக்கல்வெட்டு

பா. பாலமுருகன், கு. பால்துரை, பாண்டிச்சேரி

இடம் : *சிவகங்கை மாவட்டம், இளையான்குடி வட்டம், கொடி மங்கலம் கண்மாய்க்குள் உள்ள மடைத்தூண் கல்வெட்டு*

காலம் : *சுமார் 17 ஆம் நூற்றாண்டு*

செய்தி : *திருச்சிற்றம்பல சற்குரு தேசிகரின் மடத்தில் இருந்த விசுவலிங்க தம்பிரான் விஞ்சைமான் என்பவர் கல்வெட்டுள்ள மடையைச் செய்வித்ததைத் தெரிவிக்கிறது இக்கல்வெட்டு மூன்று மடாதிபதிகளைப் பற்றி குறிப்பிடுகிறது இதில் இறுதியாகக் குறிப்பிட்டவரே இப்பாசன மடையைச் செய்வித்துள்ளார்*

1. மெய்கர
2. சந்ததியில்
3. ஸ்ரீ நமசிவா
4. ய மூர்த்தி பரம்
5. பரையில்ச்
6. சுப்பிரமணி
7. ய குருதேசி
8. கர் நாளை
9. யில் [த்] திரு
10. ச்சிற்றம்ப
11. ல சற்குரு
12. தேசிகர்
13. சன்னி
14. தான தி
15. [லடிமை]
16. பட்ட ஒ
17. டுகத்து
18. விசுவலி
19. ங்க தம்
20. பிரான்
21. விஞ்சை
22. மான் த
23. ர்மம்
24. [லி]தும்வி
25. . . .கிர போ
26. து ஆங்
27. கில [வருசம்] வை

# 46. முத்து விஜய ரெகுநாத சேதுபதி பட்டயம்

கரு. இராசேந்திரன், மேலப்பனையூர்

இடம் : இராமநாதபுரம் மாவட்டம், திருவாடானை வட்டம், பதனக்குடி லெட்சுமணன் சேர்வை மகன் பாலசுப்பிரமணியன் வீட்டிலுள்ள செப்பேடு

காலம் : சகாப்தம் 1636 பொ.ஆ. 1714

செய்தி : 22.2 செ.மீ. நீளம் 15.4 செ.மீ. அகலம் 800 கிராம் எடையுள்ள இச்செப்பேடு முத்து விசைய ரெகுநாத சேதுபதி அவர்கள் பட்டுக்கோட்டை கசுப்பா மல்லனூருக்கு வந்தபோது செங்குந்த முதலிகளில் உடையார் என்பவர் தங்கத்தால் இலை போட்டு சாப்பாடு போட்டமைக்காக சேதுபதி மகிழ்ச்சி அடைந்து மல்லனூரில் பச்சேரியேந்தல், கிளி பிள்ளையேந்தல் சேனைவயல், சேமண வயல், செங்காலன் வயல் முதலான வயல்களை மல்லனூரில் அன்னசத்திரம் அமைப்பதற்கு கொடையாக கொடுத்தமை.

1. உ ஸ்ரீ ராமசெயம் சாலிய வாகன சகாத்தம்
2. 1636க்கு மேல் செல்லா நிண்ட விறோதகிறது
3. ஸ்ரீ தையி மீ 26 உ சுக்கிர வ[ா]ரம் அம்மா வாசியும் வுத்தி–
4. ர நச்சேத்திரமு[ம்] கூடின சுபதினத்தில் அசுபதி கெசபதி ந–
5. ரபதி முத்துவிசைய ரெகுனாத சேதுபதி யவர்கள் பட்–
6. டுக்கோட்டை சுபாறிக்கி எழுந்தருளி மல்லனூ ருக்கு வந்தா[ர்]–
7. கள் அந்தமுன்னுக்கு செங்குந்த முதலிமாரு களில் உடை–



8. யாற் சேதுபதியவர்களை கண்டு சேதுபதியவர்களுக்கு வி-
9. [ரு]ந்து கட்டளையும் பன்னி விச்சார்னு வுக்கு முன்னா-
10. ளை படியும் போட்டு தங்கத்தால் வாளையிலையும் வே-
11. பாட்டு சேதுபதியவர்களுக்கு உடையார் மகன் உடை-
12. ய[ா]ர் அன்னம் பகுந்தபடி[யி]னாலே சேதுபதியவர்க[ள்]
13. சந்தோசபட்டு ஒநக்கு தேள்வையான காரிய
14. ம் யென்ன வேனுமெண்டு கேட்டா[ர்]கள் அப்பே-
15. ாது உடையா[ர்] மகன் உடையா[ர்] அடியேன்க்கு ஒ-
16. ண்டால் ஒண்டு குறையில்லை. இந்தக் கிராம மல்-
17. லனூரு நிலமை தலமை அம்பலம் கொத்து க-
18. ன[க்]கு பனைபந்ததடை மல்லனூரு பெருநாங்குயெல்
19. லையும் தெரவியம் போட்டு காடுவெட்டி யெங்கள் பூர்வி
20. கம்மான காணியாகச்சே நான் ஆண்டு வருகிறேன்
21. யிதுல சேந்த பிரவடை யேந்தல் பச்சேரியந்தல்
22. கிளிப்பிள்ளை யேந்தல் பெரியாண்டி யேந்தல் யெந்-
23. னுட பள்ள அடும்மை சொக்கன் காளிஆண்டி உ-
24. ள் இட்டார் அடியேன்உட பள்ளகுடி அருபதும்
25. அடியேனும் ஆண்டு வருகிரேன் அடியேனுக்கு ஒ-
26. ண்டால் ஒண்டு கொறையில்லை அடியேனுக்கு ஒரு
27. பேரு கட்டளையிட வேனும்மெண்டு உடையார் கே-
28. ட்டான் அப்போது சேதுபதிவர்கள் சந்தோசப்ப-
29. ட்டு மல்லனூரு அன்னகுடை விளங்கி உடை-
30. டயாற்ரெண்ற பேரும் குடுத்து அம்பலம் கொத்து
31. கனக்கு உம்பளம் மாகா வாளைகாய் செய்யி
32. அப்பல செயி கொத்தி வயக்கல் ஆகவாய் மடை மூ-
33. ணையும் சர்வமானிய உம்பளம்மாக பண்ணி கூடுத்து
34. மல்லன் ஊரு கிராம ஒன்னுக்கும் பிரவடை ஏ-
35. ந்தல் மூனுக்கும் நாங்கு யெல்லையும் கண்டு கிராம
36. [உ.முத்து விசைய ரெகுனாத சேதுபதியவர்கள்]

பின்பக்கம்

1. த்தில் கெல்[லை]க்கு கல்லு பட்டையம் போட்டு குடுத்து தா
2. ம்புர பட்டையம் பண்ணி குடுத்தோம் இந்த கிராம



3. மல்லனூரு கிராம ஒன்னும் பிரவடையேந்தல்
4. மூனும் செங்குந்த முதலிமாருகளில் மல்லனூரு
5. அன்னகுடை விளங்கி உடையார் கானியாச்சிநி–
6. ற்ச்சையம் இதுல சேந்த அன்னகுடை உடையார் கொ–
7. த்து கணக்கு காணி காச்சியாவது சேனை வயல் சேமண
8. வயல் செங்காலன் வயல் இந்த கிராம மூனும் அன்–
9. னகுடை விளங்கி உடையார் கொத்து கனக்கு கானி–
10. யாச்சி நிச்சையம் இந்த கானியாச்சியள்கு பட்டைய–
11. பிரகா[ர]ம் கல்லும் காவேரியும் புல்லு பூமியும் உள்–
12. ள மட்டுக்கும் ஆதிசந்திராதித்தார் உள்ள மட்டு–
13. க்கும் புத்திரா புத்திரா[ள்] வரைக்கும் இந்த கானியா–
14. ச்சி ஆண்டு கொண்டு வரவும். இந்த கானியாச்சிக்கி யா–
15. ச்சிக்கி யாதா ஒருதன் விகாத்துரோகம் பன்னிந
16. பேருகள்க் கெங்கை கரையில் காராவின் பசுவை
17. வகொண்ட தோசத்திலும் தீ[ர்]தக் கரையில் பிராமனா–
18. ளை கொண்ட தோசத்திலே போவா[ர்]கள் இந்த ப
19. டிக்கி றாம[நாத] சுவாமி பாதத்தானை தப்பாது உ
20. [தெலுங்கில் கையொப்பம்]
21. இந்த படிக்கி இந்த பட்டையம் துரையவர்கள் உ
22. தாரபடிகி தாம்புர பட்டையம் வெட்டினே[ன்] ரொகுநாத–
23. புரம் சன்முக ஆசாரி குமாரன் முத்துராமலிங்–
24. கம் கையிளளுத்து

# 47. அயோத்தி நகரத்தார் சத்திரக் கல்வெட்டு

**கி. ஸ்ரீதரன், சென்னை**

இடம் : *உத்தரப்பிரதேசம் - அயோத்தி நகரில் உள்ள நகரத்தார் சத்திரம்*

காலம் : *கலி ஆண்டு 4984 சாலி வாகனம் 1805, ஆவணி 18, பொ.ஆ. 1883, செப்டம்பர் 2*

செய்தி : *அயோத்தி நகருக்குப் புனித யாத்திரையாக வருபவர்கள் தங்குவதற்காக நாட்டுக்கோட்டை நகரத்தாரால் கட்டப்பட்ட சத்திரம் உள்ளது. அதில் காணப்படும் கல்வெட்டு இராம பிரானை பிரதிஷ்டை செய்தும், அன்னதானம் செய்யவும், சத்திரம் 1883ஆம் ஆண்டில் நிர்மானிக்கப்பட்டதைக் கூறுகிறது.*

1. சிவமயம்
2. கலி வருடம் 4984 சாலிவாகனம் வருடம்
3. 1805 சுபானு வருடம் ஆவணி மாதம் 18உ ஆ
4. தித்திய வாரம் பாண்டிய நாட்டைச் சேர்ந்த
5. நாட்டுக்கோட்டை செட்டி வைசிய நகரத்தா
6. ர் ஸ்ரீ அயோத்தியாபுரியில் ஸ்ரீராமபிரான்பி
7. ரதிஷ்டையும், அன்னதானச் சத்திர ஸ்தாபன
8. மும் செய்யப் பெற்று நடந்து வருகிறது. சுபம்
9. வருடம் 1883 ஸெப்டம்பர் மாதம் 2ம் தேதி



# 48. மும்முடி பட்டந்தரித்த குமார காங்கேய மன்றாடியார் செப்பேடு

வெ. இராமமூர்த்தி, சென்னை

**இடம் :** *கோயம்புத்தூர், இடையர் வீதி எண்: 619லிருக்கும் திரு டி ஜி ஜெயச்சந்திரனிடம் இச்செப்பேடு உள்ளது.*

**காலம் :** *18ஆம் நூற்றாண்டு. செப்பேட்டில் சாலிவாகன வருடம் 1292, கலி வருடம் 4393, சாதி வருடம் 1292, தமிழ் வருடம் துன்முகி ஆகியவை குறிப்பிடப்பட்டுள்ளன மீண்டும் கலி வருடம் 557 கூடுதலாக முதல் வரிக்கு மேல் சேர்த்துக் குறிப்பிடப்பட்டுள்ளது இவை அனைத்தும் பிழையாக உள்ளன எழுத்தமைதி கொண்டு 19ஆம் நூற்றாண்டின் முன்பகுதியில் பொறிக்கப்பட்ட நகல்ச் செப்பேடு என்று கருதலாம்.*

**செய்தி :** *இச்செப்பேடு 40 X 35 செ.மீ அளவுடையது. 81 வரிகளில் எழுதப்பட்டுள்ளது. செப்பேட்டின் தலைப்புப் பகுதியில் இடம் வலமாக திண்டின் மீது அமர்ந்த சிவபெருமான், பார்வதி, மயிலுடன் முருகன், நடனமாடும் கண்ணன் ஆகிய உருவங்களும் மகுடம் அணிந்து கூப்பிய கரங்களுடன் மன்றாடியார் உருவமும் கோட்டுருவங்களாக உள்ளன. மன்றாடியார் உருவத்தின் அருகில் அரவது பெயர் மூன்று வரிகளிலும் அதனை அடுத்து மூன்று விளிம்புக் கோடுகள் உள்ள வட்டத்தினுள் அவரது முகரு (முத்திரை) வாசகமும் எழுதப்பட்டுள்ளது*

*இதனில் மன்றாடியார் நாட்டின் மீதான மைசூர் திப்புச்சுல்தானின் (1750-1799) இரு படையெடுப்புகளும் திருமலை நாயக்கரின் படையெடுப்பும் சொல்லப்பட்டுள்ளன மைசூர் நாட்டினர் மன்றாடியார் நாட்டைக் கொள்ளையடித்து ஆண் பெண்களைச் சிறைபிடித்துச் சென்றுவிட்டனர் மன்றாடியார், காவல் பணியாற்றிய நான்கு சிங் இனத்துக் குடும்பத்தினரை அழைத்து பொறுப்பற்றவர்கள் என்று கோபங் கொண்டதால் அவர்கள் மைசூர் நாட்டினர் மீது படையெடுத்துச் சென்று தங்கள் உயிர்போன நிலையிலும் எதிரிகளில் 100 பேர் தலையைக் கொய்து கொடுத்தனுப்பினர் போரில் இறந்த அவர்களது குடும்பத்திற்கு மன்றாடியார் மேழிக்கூட்டம் கூட்டி முடிவெடுத்து ஒவ்வொரு ஆண்டும் ஒரு வீட்டிற்கு 1 பணம், திருமணத்திற்கு 2 பணம் வீதமும் 4 படி அரிசி வீதமும் கொடுப்பதற்குத் தீர்மானம் செய்த செய்தி*

இச்செப்பேட்டில் உள்ளது. திப்பு சூல்தான் 'டிப்பு' என்று குறிக்கப்பட்டுள்ளார் திப்புவின் இர்ண்டாவது படையெடுப்பிலும் மூன்று குடும்பத்துச் சிங்குகள் இறந்துபட்ட போது மீண்டும் முன் போலவே தீர்மானம் செய்து உத்தரவிடப்பட்டுள்ளது பிறகு காவல்பணிக்குப் புதிதாக கவண்டமார்கள் நியமிக்கப்பட்டுள்ளனர். திருமலை நாயக்கர், மைசூர் குதிரைப்படை உதவியுடன் மன்றாடியார் படையோடு சண்டையிட்டுள்ளார் மன்றாடியாரின் கவண்டர் படை திரும்பிவிட்டது. மன்றாடியார் மும்முடிப் பட்டம் தரித்தவர் என்பதும் இவரின் கீழிருந்த கவண்டர்களும் நாயக்கர்களும் இருமுடி தரித்தவர்கள் என்றும் தெரிகிறது

செப்பேடு: உருவப் படங்களை அடுத்துள்ளவை வட்ட முத்திரையினுள் உள்ள பாடம்

1. மும்முடி ப
2. ட்டம் தரித்த
3. கொமறகங்கை
4. கய மன்றாடி
5. யார் ஆண்டார்
6. சோல முதலி
7. யார் முகரு

1. சாலிவாகன சகாப்தம் வருஷம் 1292 கலியாபத்தம் வருஷம் 4393 சாதி வருஷம் 1292க்கு தமிள் செல்லா நி
2. ன்றது துன்முகி வருஷம் சித்திரை மீ 15ம் தேதியில் பிரந்த தாம்பூறசாதனம் உ
3. உ கலியுகாதி அஞ்ஞூத்தி யன்பத்தேழாம் வருஷமாகிய துன்முகி வருஷம் சித்திரை மாசம் வெள்ளிக்கிளமை
4. பூருவபட்சமும் பஞ்சமியுஞ் சுவாதி நட்சேத்திரமுங் கூடிய சுபதினத்தில் சொக்கலிங்க மீனாக்ஷிராச செங்கோல் வே
5. ளாளர் பொருளந்தை ஆண்டான் சோலமுதலிக்கு விமலமுடிசூடிய துயிதன் பிரகு பிறப்ப நாட்டில்
6. வாசஞ்செய்யாநின்ற சூரிய குலமாகிய அருச்சுன சிங்கு பல்வாசிங்கு வீமசிங்கு மோசிங்கு இவர்களு
7. ம் யிவர்களுடைய அண்ணன் தம்பி பந்துக்கள் 25 பேர்களை மேற்படி முடிபட்டந் தரித்த குமரகா

8. ங்கேய மன்றாடியார் வரவளைத்து சேவகத்தில் தாக்கல் செய்து காங்கேய நாடு பூந்துரநாடு தென்

9. கரைநாடு அய்யம்புள்ளிக்கிச் சேந்த வையாபிரி நாடுள்பட கொங்குயிருவத்திநாலு நாட்டிலேயுமி

10. ருந்து சேவிகஞ்செய்யும் படிக்கி உத்தரவு கொடுத்தார்கள் அந்தப்படியே மேல்கண்டிருக்கு நாட்டிலிருந்

11. து சேவகத்தில் வெகு சாக்கிரதையாய் நடந்து வருங்காலத்தில் மயிசூரான் படை வந்து யிந்த நாடுகளி

12. ல் ஆண்சிரை பெண்சிரை பிடித்துங் கொள்ளையடிதும் உபத்திரவ செய்தார் யிது சமாசாரங்

13. களை மேற்படி சேவகர் மன்றாடியாருக்குத் தெறியப்படுத்தும் போது யிதற்கு மன்றாடியார் சேவகர்

14. களைப் பாத்துச் சொன்னதாவது நீங்கள் நம்மிடத்தில் நாள்தோருஞ் சேவித்து சம்பளம் வாங்கிக் கொண்

15. டு காலச்சேபம் பண்ணுரெ நீங்கள் தானே யிப்பேர்ப்பட்ட வார்த்தைகள் சொல்லுவதற்குத் தா

16. னா நாமுங்களைச் சேவகத்தில் வைத்தது நீங்களென்ன ஆண்பிள்ளை களல்லவா உங்கள் மு



17. கத்தில் முளைத்தது மீசையல்லவாவென்று ரோசத்துவேசமாய்ச் சொல்லி நல்லதுயிப்போ

18. து நீங்கள் போய் அந்த யெதிராளிகளிடத்தில் சண்டைசெய்து கொண்டு போன சிரையும்

19. பொருளையுங் கொண்டு வந்தீர்களானால் உங்களுக்கு வேண்டிய யெனாந் தருகுரோமென்று

20. சொன்ன பிரகு மேற்படி சேவகர்களுக்கு கோபம் வந்து பிரப்பட்டுப் போய் மூணுநாளாறு போது யெ

21. திராளிகளுடனே யெதுத்துச் சண்டை செய்யயில் அருச்சுனசிங்கு பலவாசிங்கு வீமசிங்கு மோ

22. சிங்கு யிந்நாலு பேரும் யிவர்களுடைய அண்ணன் தம்பிநாலு பேரும் ஆயெட்டுப்பேரும் யிரந்து

23. போனாகள் அதின் பிறகு மத்தச் சேவகர்கள் கூடி கொண்டுபோன சிரையும் போருளையும் துக்க

24. டியான தலையுள்பட நுறுபேர் தலையுங் கொண்டு வந்து மன்றாடியாருடைய சன்னத தானத்

25. தில் வைக்கும்போது மன்றாடியார் சந்தோஷப்பட்டு நம்முடைய சேவர்களில் யாறாவது சேதமுண்டா

26. வென்று கேழ்க்க மத்த சேவகர்கள் சொன்னதாவது மேற்கண்டிருக்குர சேவகர் நாலுபேரும் அவர்களுடைய அண்ணன் தம்

27. பி நாலுபேரும் ஆஎட்டுப் பேர்கள் யிரந்து போனார்களென்று சொன்னார்கள் அது சேதி கேட்ட மன்றாடியார் வே

28. கு விசனத்தை யடைந்து அங்காலித்து பூந்தரநாட்டில் வந்திருந்து கொண்டு சையூர் சின்னண்ண கவண்டன்

29. பெரியண்ண கவண்டன் யிவர்களிருவரையும் அளைத்து வைத்துக்கொண்டு ஆலோசனை செய்

30. து தென்கரை நாட்டிலிருக்கும் யிருமுடிப்பட்டந்தரித்த வேண்டுடையாக் கவண்டன் சிதம்பர பரபல்

31. லவராயக் கவண்டன் உத்தமான நல்லதம்பி சக்கரைக் கவண்டன் கொங்கு யிருவத்திநாலு நாட்டிலுள்ள

32. நற்குடி நாற்பத்தெண்ணாயிரங் கோத்திரத்திலுள்ப்பட்ட கவண்டமாரு களையும் அனைத்து வரச்சொ

33. ல்லி உத்திரவு செய்தார் அந்தப்படியே மேற்படி சின்னஅண்ண கவண்டன் பெரியண்ண கவண்டன் பொன்

34. னாபுரம் தம்பாக் கவண்டன் மோகனூரு தொண்டமாக் கவண்டன் யிவர்கள் கூடி ஓலையெழுதி

35. யனுப்பிவித்து வரவளைத்து ஒருமாசம் வரையில் மேழிக் கூட்டங்கூடி ஆலோசனை செய்து கொ

36. டுத்த உத்திரவாவது யிரந்துபோன எட்டுச் சேவகர்களும் நம்முடைய காரியமாய் போயிரந்து போ

37. னதாலும் அவாளுடைய பெண்டுபிள்ளைகள் நமக்கு பிள்ளை புகுந்ததாலும் யிவர்களுக்கு வருஷம் தர க

38. ட்டின மனை தர பணம் 1ம் வீதமுங் கலியாணத்துக்கு பணம் 2ம் 2 படி அரியுங் கொடுக்கும்படி தீர்மான

39. ம் பண்ணி யிந்த தீர்மானத்துக்கு யாதாமொருவர் விகாதஞ் செய்யப்போகாது என்று மன்றாடி

40. யார் சொல்ல சகலத்திராளும் சம்மதிப்பட்டு பாசிப்பட்டுக் கொடுத்தார்கள். = 2வது = வையாபுரி நாட்

41. டுக்கதிபதியாகிய யிருமுடிப் பட்டந் தரித்த விசயகிரி நாயக்கரும் ஆயக்குடி கருத்தக் கொண்டம நா

42. யக்கருங் கூடி முப்பத்திரண்டு அமரத்துக் கவண்டமார்களையும் ஆயக்குடிக்கிச் சேந்த எட்டுக் கிராமத்துக் கவண்டமாருள்

43. பட்ட நயிக்குடி நாற்பத்தி நாலாயிரங் கோத்திரத்துக்குள்ப்பட்ட கவண்டமாரையும் திருவாலங்குடியில் வந்திருந்துகொண்டு வரவழை

44. ச்சு அவாளுடைய முன்பாக சொன்னதாவது டிப்பு பாளையம் நம்முடைய நாட்டில் வந்து ஆண்சிரை பெண்சிரை பிடித்து

45. உபத்திரவஞ் செய்குரபடியினாலே மும்முடிப்பட்டந் தரித்த குமரகாங்கேய ஆண்டான் முதலியாகிய ம

46. ன்றாடியாருக்கு சில சேவகர்களை அனுப்பிவிக்கும்படி ஓலையெழுதி மேகரைப்பட்டி கண்டிக்கவண்டன்

47. கீகரைபட்டி தாச்சி கவண்டன் நயினார்க்கவண்டன் வாகரைக்கிச் சேந்த மடிச்சிலம் புதுக்காயி கவ

48. ண்டன் கண்டி கவண்டன் காணியாளன்குளம் புண்டஞ்சாமிக் கவண்டன் முத்துக்கவண்

49. டன் தாளையூத்து முத்துக்கவண்டன் சேருவைகாரக் கவண்டன் மானூரு குப்பண்ண கவண்டன் பச்சயகவ

50. ண்டன் குமர கவண்டன் அமரபூண்டி கண்டிகவண்டன் கச்சேரி வேலப்ப கவண்டன் உலகிய கவ

51. ண்டன் யிவர்களை வரவழைத்து யிந்த வோலையை அவாளிடத்தில் கொடுத்து மன்றாடியாரிடத்தி

52. ல் குடுத்து சில சேவார்களை கூட்டிவரும்படியாய் உத்திரவு கொடுத்தார் அந்த படிக்கியவாள் போய் மன்றாடியாரைக் கண்டு தாங்கள் கொண்டு

53. வந்த ஒலையைக் கொடுத்தார்கள் அதை மன்றாடியார் வாங்கி வாசித்து பாத்து அதன் பிரகு தென்கரை நாடு யிருமு

54. டிப்பட்டந் தரித்த வேண்டுடையாக் கவண்டன் சிதம்பரம் பரபரபல்லவராயக் கவண்டன் உத்தமான நல்லதம்பி சக்

55. கரைக் கவண்டன் யிவர்களை வரவளைத்து வைத்துக்கொண்டு ஆலோசனை செய்ததில் பிரகு ஒலை கொண்டு வந்த கவண்டன்

56. மார்கள் கூட சில சேவகரைக் கூட்டியனுப்பிவித்தார் அதன் பிரகு வந்த பேர்ரை முப்பத்திரண்டு கிராமத்திலும் ஆ

57. யிக்குடிக்கிச் சேந்த எட்டுக் கிராமத்திலுமிருந்து வெகுசாக்கிரதையாய் சேவகஞ் செய்யும்படி விசயகிரி நாயக்கருங் கருத்

58. தக் கொண்டம நாயக்கரும் உத்திரவு கொடுத்தார்கள் அந்த உத்திரவின் படியே வந்த சேவகர் மேற்படி கிராமங்களிலிருந்து வெ

59. கு சாக்கிரதையாய்ச் சேவித்து வரும்போது டிப்புப் படைகள் வந்து மேற்படி கிராமங்களில் ஆண்சிரை பெண்சிரை பிடிப்

60. பதை யிந்தச் சேவகர் கண்டு அவாளுடனே யெதுத்து அஞ்சு நாள் பத்துப்பொழுது சண்டை செய்து ஆண்சிரை பெண்சிரை

61. யுங் திருப்பிக்கொண்டு வரும்போது போன சேவகர்களிலிருந்து போன பேர்கள் பவானி சிங்கு 1 லட்சும சிங்கு 2 சுப்பிர



62. மணிய சிங்கு 3 பேரும் யிவர்களுடைய அண்ணன் தம்பிகள் மூணுபேர்கள் ஆக ஆறுபேர்கள் யிரந்து போனதால் அவாளுடை

63. ய பெண்டு பிள்ளைகள் மும்முடிப்பட்டந்தரித்த குமரகாங்கேய மன்றாடி யாரிடத்தில் வந்து முரையிடும் போது அவர் கேட்டு வெகுவி

64. சன்தையடைந்து அதன் பிரகு வையாபுரி நாட்டுக் கதிபதியாகிய விசயகிரி நாயக்கரையுங் கருத்த கொண்டம நாயக்கரை

65. யும் யிருமுடிப்பட்டந் தரித்த வேண்டடுடையாக் கவண்டன் சிதம்பரம் பரபரபல்லவராயக் கவண்டன் உத்தமான நல்ல

66. தம்பி சக்கரை கவண்டன் யிவர்களை யளைப்பி வத்து அவாளிடத்தில் சொல்லியதாவது முப்பத்திரண்டு கிராமத்துக் கவண்

67. ட மாரையும் ஆயக்குடிக்கிச் சேந்த எட்டுக் கிராமத்துக் கவண்டன் மாரையும் அழைப்பிவிக்கச் சொல்லியே லொரு

68. ஆறு நாள் மேழிக் கூட்டங்கூடித் தீர்மானித்ததாவது வருஷம் 1க்கு கட்டின மனை 1க்கு பணம் 1 வீதம் கலியாணத்துக்கு ரெண்டு பண

69. மும் நாலு படி அரிசியும் கொடுக்கும்படி தீர்மானம் பண்ணினார்கள் = 3வது = தாமரைகுளம் வையாபுரி நாட்டுக் கதிபதி

70. யான வேலாயுத நாயக்கர் திருமலைராயர் பேரில் படையெடுக்க வேணுமென்று யோசித்து திருவாலங்குடியான்

71. மூலமாய் முப்பத்திரண்டு கிராமத்துக் கவண்டமாரையும் ஆயிக்குடி எட்டுக் கிராமத்துக் கவண்டமாரையும் யி

72. ன்ன நற்குடி நாற்பத்தெண்ணாயிரங் கோத்திரத்துக்குள்ப்பட்ட கவண்டமாரையும் அளைப்பிவிக்க

73. சொல்லி எல்லோரும் வந்து சேந்த பின்பு மேழிக் கூட்டங்கூடி யோசினை செய்யயில் யிது சாமா

74. சாரந் திருமலைராயருக்குத் தெறிய வந்து உடனே பிறப்பட்டு போய் மயிசூர் டிப்பிடத்தில்

75. தெறியப்படுத்தில் அவனிடத்தில் கேட்டு சில குதிரைப்படைகளை கூட்டிக் கொண்டு வரும் வரும்போது

76. மேல்க்கண்டிருக்குர கவண்டமார்கள் மன்றாடி யாருடைய சேவகருள்பட சில படைகளை கூட்டி

77. க்கொண்டு போய் தாமரைக்குளத்திலிரங்கி திருமலைராயர் வருகுர தடத்தைக் கட்டிக்கொ

78. ண்டிருக்கையில் வந்த திருமலைராயர் யிவர்கள் தடத்திலிருப்பதைக் கண்டு தான் கூட்டி வ

79. ந்த குதிரைப்படைகளுடனே தானுமிருந்து சண்டைசெய்யும் போது கவண்டமார்கள் கூட்டி

80. வந்த மன்றாடியாருடைய சேவகர்களில் ஒன்பது பேரிறந்து போ[க]கக்கண்டு அங்கிருந்த கவண்

81. டமார் முதலான பேர்களுந் திரும்பி தங்களுடைய சீமைக்கிப் பிறபட்டு வந்துவிட்டார்கள்.

# 49. சிங்கப்பூர்த் தமிழ்க் கல்வெட்டுகள்

**கோ. விசயவேணுகோபால், பாண்டிச்சேரி**

**இடம் :** *சிங்கப்பூர்,சின்ன இந்தியா வணிக வளாகம்* (Little India Arcade), *48,செராங்கூன் சாலை வளாகக் கட்டிட முகப்பின் இரு முனைகளிலுள்ள தூண்களில் பதிக்கப் பட்டுள்ளன.*

**காலம் :** *பொ.ஆ 1828,1829*

**செய்தி:** *இந்த வணிக வளாகம் 1913 இல் கட்டப்பட்டது. இது 1965 ஆம் ஆண்டு வரை இந்து-முஸ்லீம்கள் அறக்கட்டளைக் கீழ் இருந்தது 1965க்குப் பின்னர் இந்து அறக்கட்டளை வாரியத்தின் கீழ் உள்ளது. வளாகத்தின் இடது கோடியிலுள்ள கல்வெட்டு தமிழ் ஆங்கிலம் என இரு மொழிகளில் உள்ளது தமிழ்ப் பகுதி சேர சோழ பாண்டிய தேசங்களைச் சேர்ந்த தமிழர்க்கான மயான பூமி எனக் குறிப்பிட, ஆங்கிலப் பகுதி இந்த எரிக்குமிடம் மெட்ராஸ்,சிங்கப்பூர் இந்து மக்களுக்குரியது எனக் குறிப்பிடு கிறது இதில் ஆண்டு 1828 எனத் தெளிவாகக் குறிப்பிடப் பட்டுள்ளது கல்வெட்டின் தொடக்கத்தில் ஸ்ரீ அரிசந்திர மகாராச சத்தியகீர்த்தி என உள்ளது சுடுகாடுகளும் இடுகாடுகளும் அரிச்சந்திர மன்னனோடு தொடர்புபடுத்தப் படும் மரபினை ஒட்டி இங்கும் இவ்வாறு குறிப்பிடப் பட்டுள்ளது வளாகத்தின் வலது கோடியில் பதிக்கப்பட்டுள்ள கல்வெட்டு தமிழகக் கோயில்,தோட்டம், கருங்கல் படித்துறை (சொற்கள் சிதைக்கப்பட்டுள்ளன)சத்தனதிக்கப்பால் (இப்பெயரில் ஒரு நதி இருந்தது போலும்)மசான பூமி ஆகியன சேரன் சோழன் பாண்டிய சேசத்தைச் சேர்ந்த தமிழாட்களால் சாலிவாகள சகாப்தம் 1751 மற்றும் கலியுக ஆண்டு 4929 ஆகிவற்றைச் சேர்ந்த சறுவதாரி ஆண்டில் உண்டு பண்ணி வைத்ததாகக் குறிப்பிடுகிறது முதலில் குறிப்பிடப்பட்ட கல்வெட்டு ஆண்டினை 1828 எனவும் இரண்டாம் கல்வெட்டு ஆண்டினை 1829 எனவும் குறிப்பிடுகின்றன இந்த வணிக வளாகத்தைச் சுற்றியுள்ள பகுதிகளில் இந்துக் கோயில்கள் இல்லை சிங்கப்பூரின் புகழ் பெற்ற மாரியம்மன் கோயில், விநாயகர் கோயில் ஆகியன சைனா டவுன் எனப்படும் சீனர் வாழ் பகுதியில் உள்ளன இப்பகுதி வணிக வளாகத்திலிருந்து நான்கு கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது மாரியம்மன் கோயிலில் பதிக்கப்பட்டுள்ள கல்வெட்டு கோயில் நாராயண பிள்ளை என்பவரின் முயற்சியால் 1823இல் கட்டப்பட்டதாகக்*

குறிப்பிடுகிறது தூண்களில் காணப்படும் கல்வெட் டுக்களில் நாராயண பிள்ளை பற்றிய குறிப்பெதுவுமில்லை முதலாவது கல்வெட்டில் மேலே திருமாலுக்குரிய நாமம், சங்கு, சக்கரம் ஆகிய சின்னங்கள் பொறிக்கப்பட்டுள்ளன. அரிச்சந்திரனை வைணவ சமயத்தவனாகக் காட்டுகிறது இக்கல்வெட்டு இரண்டாவது கல்வெட்டு சிவமயம், ஸ்ரீராமஜெயம், தேவி சகாயம் என முப்பெரும் தெய்வ வணக்கங்களைக் குறிப்பிட்டாலும் மேலே அய்யனார்க்குரிய செண்டு, திருமாலுக்குரிய நாமம், சிவனுக்குரிய இலிங்கம், காளிக்குரிய சூலம், இறுதியில் முருகனுக்குரிய வேல் ஆகிய சின்னங்கள் உள்ளன இத்தெய்வங்களை வழிபட்ட பல்வேறு பிரிவினர் இருந்தனர் போலும் இத்தெய்வ உருவங்கள் ஒரே கோவிலில் இருந்தனவா வேறு பல கோயில்கள் இருந்து மறைந்தனவா இக்கல்வெட்டுக்கள் எவ்விடத்தில் முதலில் இருந்தன வணிக வளாகத்தில் ஏன் வைக்கப்பட்டன என்பன போன்ற கேள்விகளுக்கு இவை பற்றிய மேலும் விரிவான ஆய்வுகளே பதில் கூற இயலும்

1. ஸ்ரீஅரிசந்திர மகாராச
2. சத்திய கீர்த்தி சோறன் சோ–
3. ழன் பாண்டிய தேசத்–
4. தை சேர்ந்த தமிழாள்
5. மசான பூமி சறுவதா–
6. ரி வருஷம் சிங்கப்பூர்
7. THIS
8. Burning ground
9. belonging to Hin
10. doo peoples, of
11. Madras, Singapore
12. 1828

1. சிவமயம் சீராமசெ–
2. யம் தேவி சகாயம்
3. சிங்கப்பூர்
4. தமிழக கோயில் தோட்ட–

5. ம் கருங்கல்ப் படித்து–
6. றை . . .யிந்த
7. சத்த னதிக்கப்பால் மசா–
8. ன பூமி சேறன் சோழ–
9. ன் பாண்டிய தேசத்தை–
10. ச் சேர்ந்த தமிழாளால்
11. உண்டுபண்ணி வைத்து
12. சாலியவாகன சகாற்த்தம்
13. 1751 கலியுகாற்
14. த்தம் 4929 க்குச்
15. செல்லானின்ற சறுவதாரி வரு
16. . . .

# 50. எழுத்துப் பொறிக்கப்பட்ட பம்பை இசைக் கருவி

ச. இரவி, கோவை

இடம் : திருப்பூர் மாவட்டம், திருப்பூர் வட்டம், தேசிகவுண்டன் பாளையம், அப்பச்சி கோயிலில் தாத்தா கோயில் விராணம் என்று அழைக்கப்படுகின்ற (பம்பை) இசைக் கருவி.

காலம் : சர்வஜித் ஆனி 27, நாயக்கர் காலம், 18ஆம் நூற்றாண்டு

செய்தி : விராண இசைக் கருவியை ஊர் மக்கள் வாங்கிக் கொடுத்த செய்தி. இவர்களுள் பாவிகான் மகன் சபேத்திகான் என்ற இசுலாமியர் பெயர் வருவது குறிப்பிடத்தக்கது.

1. சருவசத்தி ஷு ஆனி 27
2. தேசிகவுண்டன் பாளையத்தி –
3. லிருக்கும் அப்பச்சி கோயிலுக்கு நா –
4. ராயணன் மகன் மகன் ரங்கப்ப நாயக்கன்
5. லிங்கப்ப நாயக்கன் மகன் வெங்கிட்ட
6. நாயகன் வெங்கிட்ட நாயக்கன் மகன்
7. வெங்கிட்ட நாயகன் நாராய–
8. ணன் மகன் வெங்கிட்ட நாயக–
9. ன் மகன் கெங்கநாயக்கன் கோ
10. னப்ப நாயக்கன் மகன் வெங்கிட்ட
11. நாயக்கன் வெங்கிட்ட நாயகன் ம
12. கன் லிங்கப்ப நாயக்கன் வேலப்பன் நா
13. யகன் மகன் ரங்கப்ப நாயக்கன் இச[ந்]
14. த உபயம் சமிரிக்கமும் நாளும் கூடி கொம்ப
15. கார பாவிகான் மகன் சபெத்திகானு–
16. க்கு அப்புச்சி கோயிலுக்கு சேரவை
17. ப்பனன் விராணம் வாங்கி வச்ச உ–
18. பயம்





# 51. கோட்டையூர் கைலாச அம்பலகாரர் சமாதிக்கல்வெட்டு

அ. சந்திரபோஸ், புதுக்கோட்டை

**இடம் :** *சிவகங்கை மாவட்டம், காரைக்குடி வட்டம், கோட்டையூரில் அமைந்துள்ள தெற்கு ஊரணியின் வடகரையில் எடுப்பிக்கப்பட்டுள்ள அம்பலகாரர் சமாதியில் திண்ணை மேடையின் கீழ்புரத்தில் பதியப்பட்டுள்ள கல்*

**காலம் :** *பொ.ஆ.1889*

**செய்தி :** *கோட்டையூர் கைலாச அம்பலகாரர் சிவலோக பதவி அடைந்தமை*

1. ஸ்வஸ்தி ஸ்ரீ சாலிவாகன சகாப்தம் 18
2. 11 கலியுகாதி வருஷம் 4089 இங்கிலிஸ் வருஷம் 1
3. 889 சரியான சர்வதாரி வருஷம் பங்குனி 11 . .
4. உ . வெள்ளிக்கிழமை ";டி திதி அனுஷ நட்சத்தி–
5. ரம் கூடிய புண்யத்தில் உதையாதினாழிகை 1
6. 5 அளவில் கோட்டையூர் கைலாச அம்பல
7. காரற் சிவலோக பதவி அடைந்தது





# 52. அவினாசி வட்டத்தில் பிற்காலக் கல்வெட்டுகள் சில

**சி.எம். ரமேஷ் குமார், கோவை**

52 : 1

இடம் : திருப்பூர் மாவட்டம், அவினாசி வட்டம், கருவலூர் வீர ஆஞ்சநேயர் கோயில் வளாகத்தில் உள்ள கல்

காலம் : பொ.ஆ. 1.12.1898

செய்தி : பழனித்தேவன் என்பவரால் கிணறு, பண்ணை (தொட்டி) மற்றும் சுமைதாங்கி வைக்கப்பட்ட செய்தி

1. சிவமயம்
2. கருவலூர்
3. கோ அங்க-
4. த் தேவன்
5. மக்கள் சி-
6. ன்ன கருப்-
7. பத் தேவ-
8. ன் பழனித்-
9. தேவனால்
10. சேந்து கிண-
11. ர் கல் பண்
12. ணை சுமதா-
13. ங்கி தர்ம-
14. த்துக்கு
15. போடப்ப[ட்ட]-
16. து 1898 ஷு-
17. ஜனவரி
18. மாதம் 12 தேதி



52 : 2

இடம் : மேற்படி மாவட்டம், வட்டம், பனப்பாளையம் நிகிதா பள்ளி அருகில் உள்ள சுமைதாங்கி

காலம் : *பொ.ஆ. 12.1.1911*

செய்தி : *சுமைதாங்கிக் கற்றூண் இட்டமை.*

1. 1911 டிசம்பர் மா [தம்]
2. 12 தே [தி] செவ்வாய் கி–
3. ழமை தினம் பூ–
4. ர நட்சத்திரம்
5. கூடிய சுவதிநத்–
6. தில் பனைப்பாழை–
7. யம் கிராமத்தில்
8. யிருக்கும் மந்தி[ரி]ப்ப
9. கவுண்டன் மகன்
10. சின்ன மாரப்ப
11. கவுண்டன். . .னும்
12. மேல்படியூர் குட்டி–
13. யாண்டி மகன் சி–
14. ன்ன மாயாண்டிர
15. ண்டு நாதன் இருப–
16. ங்கும் போட்டு
17. பையந்த சுமைதா–
18. ங்கி கல் கட்டி–
19. ன தூண்



# 53. கோட்டாத்தூர் பலகைக் கல்வெட்டு

பெ. சுதாகர், பொய்யூர்

இடம் : திருச்சிராப்பள்ளி மாவட்டம், துறையூர் வட்டம், கோட்டாத்தூர் பேருந்து நிலைய ஏரிக்கரை விநாயகர் கோயில் முன்பு உள்ள பலகைக் கல்வெட்டு

காலம் : பொ.ஆ. 16.5.1895

செய்தி : குப்பிரெட்டி மகனான கிருஷ்ண ரெட்டியாரின் மனைவி பெத்தாயம்மாள் 1887 ஜனவரி 8ல் உயிலாய்யூர் புன்பதி ஈஸ்வர சாமிக்கும் வரதராஜ பெருமாள் சாமிக்கும் 4 புறு நிலத்தையும், இலுப்பை மரங்களையும் கொடையாக வழங்கியமை.

1. 1895 வருடம் மே மாதம் 16
2. மன்மத வருடம் வைகாசி
3. மாதம் 3 தேதி கோட்டாத்தூரி–
4. லிருக்கும் குப்பிரெட்டி
5. கிருஷ்ன ரெட்டியார்
6. பெண்சாதி பெத்தா–
7. யம்மாளாகிய நான் 1887
8. வருடம் ஜேனவரி மாதம் 3 உயி–
9. லாய்யூர் புன்பதி இஸ்–
10. பற ஸாமி விறதரா–
11. ஐ பெருமாள் இந்த–
12. யெறண்டு சாமிகளு–
13. க்கும் தான சாதன மூ–
14. லமாய் விடப்பட்டு இரு–
15. க்கின்ற நாலு புறு நில–
16. ங்களையும் அதில் இரு–
17. க்கின்ற இலுப்ப மற–
18. ங்களையும் [நாளது தே]தியில் யென்–
19. மன பூர்வமாய் விட்டு வி–
20. ட்டபடியால் யினி இந்த த–



21. ர்மத்தை [வு] கோவில் இதெய்
22. கல் பாற்க்கும் தர்ம காத்த
23. ாற் அரியாய் நடத்தி வற
24. வேண்டியது இதில் குை-
25. றவு செய்தால் காராம் பசு-
26. வை கொன்ற பாவத்துக்கு
27. ஆழாவார்கள் தான சாத
28. நதின் நிவதம் 818. . .ஏர்

# 54. எழுத்துப் பொறிப்புடன் பாவை விளக்கு

கி. ஸ்ரீதரன், சென்னை

இடம் : திருவள்ளூர் மாவட்டம், திருப்பாசூர் வாசீசுவரர் கோயில், ஸ்ரீதங்காதலி அம்பாள் சன்னதியின் பாவை விளக்கின் அடிப்பகுதி

காலம் : பொ.ஆ.19ஆம் நூற்றாண்டு

செய்தி : கொ. இராமசந்திர செட்டியாரின் மனைவியான சிவானந்தம்மாள் 'தீப ஊழியமாக' இப்பாவை விளக்கை செய்தமை.

1. . . .த செட்டியார் பௌத்திரியும் தி. நாராயண
2. சாமி செட்டியார் புத்திரியும் கொ. இராமசந்திர செ
3. ட்டியார் பத்தினியுமாகிய சிவானந்தம்மாள் ஸ்ரீ தங்
4. காதலி அம்மன் சமேத ஸ்ரீ வாசீஸ்வரஸ்வாமிக்ககு தீப ஊழியம்
5. திருப்பாசூர் [1224]



# 55. பினாங்கு பேரேட்டுப் புத்தகம்

சு. இராசகோபால், சென்னை

மலேசிய நாட்டின் வடமேற்கு மாநிலமாகவும் சிறுதீவாகவும் துறைமுகமாகவும் விளங்குவது பினாங்கு. ஆங்கிலேயர் காலத்தில் சிறந்த தொழில் வர்த்தக மையமாகவும் பல்வேறு இனத்தவர் கூடும் இடமாகவும் விளங்கியது. காரைக்குடிப் பகுதியிலிருந்து இங்கு சென்று நகரத்தார்கள் தனவணிகம் மேற்கொண்டனர். அவர்களது கணக்கு ஏடுகள் நல்ல ஆவணங்களாக விளங்குகின்றன. அவ்வகையில் ஒரு கணக்கேடு தரும் செய்திகள் இங்கு சொல்லப்படுகின்றன.

இந்தப் பேரேடு --- அளவில் 276 பக்கங்களையுடையது. துணியால் ஆன உறை இந்த ஏட்டின் கெட்டியான கட்டமைப்புக்கு மேலும் வலுவூட்டி பல ஆண்டுகள் இவ்வேடு அழிவுறாமல் காக்கப்பட்டுள்ளது. தாள்கள் கெட்டியான தாள்கள் (Bond Paper) ஆகும். 1 முதல் 276 பக்கங்கள் எண்ணிடப்பட்டு அச்சிடப்பட்டுள்ளன. ஒவ்வொரு பக்கத்திலும் தலைப்பில் 'உ சிவமயம்' என்ற சிவ வணக்கச் சொல் அச்சிடப்பட்டுள்ளது. 46 நீலநிறப் படுக்கைக் கோடுகளும், 5 பத்திகளாகப் பிரிக்க சிவப்பு நிற உயரக் கோடுகளும் அச்சிடப்பட்டுள்ளன. 5 உயரப் பத்திகளில் 1.வருஷம்/மாசம், 2.தேதி, 3.விவரம், 4. வரவு-றிங்கி-காசு, 5.பற்று-றிங்கி-காசு ஆகிய சொற்களும் எல்லாப் பக்கங்களிலும் அச்சிடப்பட்டுள்ளன.

தொடக்கத்திலுள்ள இருபக்கங்களில் விருப்ப தெய்வங்களின் பேரில் விருப்ப வரவு பற்று எழுதப்பட்டுள்ளது. இத்தெய்வங்கள் மலேசிய நாட்டு மலாக்கா பொய்யாத விநாயகர், பெரியமலை ஆண்டவர், தண்டாயுதபாணி ஆகியவையும் தமிழ்நாட்டு அண்ணாமலையார், பெரிய கருப்பணசுவாமி ஆகியவையும் ஆகும். இக் கணக்கேடு சுக்கில, பிரமோதூத, பிரசோபத்தி, ஆங்கிரச, ஸ்ரீமுக (1929-1933) ஆகிய ஆண்டுகளுக்கானது. காரைக்குடி

5 பத்து மெய்யப்பன் ஊரிலிருந்து இவடம் வர ரயில்
சார்சு கப்பல் கேழ்வு வகையறா சிலவு ரூபாய்
நூற்றிநாற்பத்து ஐந்தே அரையே வீசத்திற்கு நூற்று ஐம்பத்து
நாலேகால் விலையாக றிங்கி தொன்னூற்று நான்கு காசு
நாற்பத்து ஒன்று

வருமானவரி அலுவலகத்தில கணக்கு சமர்பித்து 27.11.1939, 29.1.1940, 17.3.1941 ஆகிய தேதிகளில் முத்திரை பெறப்பட்டுள்ளது.

வரவு, பற்று தொகைகள் அனைத்தும் றிங்கி- காசு என்ற செலாவணிப் பெயரில் உள்ளன. றிங்கி என்பது மலேசிய ரூபாயின் பெயர் இது Malasion Ringgit (MYR) எனப்படும். ஒரு றிங்கி 100 செண்ட் காசுகளை உடையது. இவ்வேட்டில் வரவு செலவு தொகை எண்கள் அனைத்தும் தமிழ் எண்களிலிலேயே உள்ளன. எனினும் ஒவ்வொரு பக்கத்திலும் கூட்டுத்தொகை சிவப்பு மையால் இன்றைய வழக்கு எண்களில் உள்ளன.

நகரத்தார்களுடைய தொழில் நிறுவனங்கள் கடை என்றும் அவை உள்ள இடம் கிட்டங்கி என்றும் குறிக்கப்படுகிறது. இவற்றில் பணிபுரிந்து கணக்கெழுதுபவர்கள் அடித்தல் திருத்தல் இல்லாமல் சீராக எழுதியுள்ளனர். கணக்கு முடிக்குமிடங்களில் அச்சிட்டது போல சிவப்புக் கோடுகள் இட்டுள்ளனர். மூன்றாண்டுகளுக்கு ஊதியம் பேசப்பட்டு சென்று பணிபுரிந்துள்ளனர். இரண்டு ஆண்டு ஊதியத்தை முன் சம்பளமாகப் பெற்றுக் கொண்டுள்ளனர். கணக்கர் ஊதியம் மூன்றாண்டுக்கு 3001 பூவராகன் பணம் எனப் பேசப்பட்டு அதற்கு இந்திய ரூபாய் 3½ வீதம் (1 பூவராகன் = 3½ ரூபாய்) கணக்கிடப்பட்டுள்ளது. 100 ரூபாய்க்கு அன்றைய விலைப்படி றிங்கி 154 முதல் 155 வரை சொல்லப்பட்டு அத்தொகை இக்கணக்கேட்டில் பத்து எழுதப்பட்டுள்ளது.

தனவணிகம் என்பதால் பல நபர்களுக்கும் றிங்கி கடனாக வழங்கப்பட்டு வட்டி பெறப்பட்டுள்ளது. ஒவ்வொரு வாடிக்கையாளர்க்கும் ஒரு தனிப்பகுதியாக எண்ணிட்டுக் கணக்கு எழுதப்பட்டுள்ளது. மலேசியநாட்டு நபர்களிடமிருந்தும் தமிழகத்தில் உள்ள பிற நகரத்தாரிடமிருந்தும் பணம் பெறப்பட்டு அவற்றிற்கு வட்டி கொடுக்கப்பட்டுள்ளது. கடன் பெற்றவர்கள் பெரும்பாலும் சீனர்கள். இஸ்லாமியரும் உள்ளனர். வட்டி பெரும்பகுதி நாள் கணக்கில் கணக்கிடப்பட்டுள்ளது. வீடுகள் விலைக்குப் பெறப்பட்டு அவை வாடகைக்கு விடப்பட்டு 'சேவா' பெறப்பட்டுள்ளது. அவற்றின் பராமரிப்புச் செலவுகளும் சொல்லப்பட்டுள்ளன. 'ஓடு மாற்றி பாக்கர் அடைத்தது' போன்ற சொற்றொடர்கள் உள்ளன. தோட்டங்களும் விலைக்குப் பெறப்பட்டு வருவாய் சேர்ந்துள்ளது.

272

சிவமயம்.

விபரம்.

வங்கிகளின் கணக்கும் இவ்வேட்டில் உள்ளது. மாக்கண்டன் வங்கி, உலாந்தா வங்கி, சாட்டர் வங்கி ஆகியவை கணக்கில் உள்ளன. அனைத்துக் கணக்குகளும் தமிழ் ஆண்டு, மாத, தேதிகளில் குறிக்கப்பட்டிருக்க வங்கிக் கணக்குகள் ஆங்கில ஆண்டு மாத தேதிகளில் உள்ளன. செக்கு (சேக்கு) புத்தகங்கள் 25 தாள் 50 தாள் உள்ளவை வங்கியில் முறையே 2,1 றிங்கிக்குப் பெறப்பட்டுள்ளன. பணம் கட்டுவது 'சமால் ரசீது' மூலம் கட்டப்பட்டுள்ளது. கணக்கிற்கு கியாரண்டி, சுக்குருட்டி ஆகியவைக்காக முத்திரை பத்திரங்கள் எழுதிக் கொடுக்கப்பட்டுள்ளன. பணம் மாற்றுவது 'திறான்சிப்பர்', 'திறான்சுப்பர்' என்று குறிக்கப்பட்டுள்ளது. முதலாளிகள் தமிழகத்தில் இருந்தால் கணக்கர்களுக்குச் சட்ட பூர்வமாக 'பவர்' எழுதித் தரப்பட்டுள்ளது. சட்ட நடைமுறை ஆவணங்கள் எழுதுவதற்கு வழக்கறிஞர்கள் உதவி பெறப்பட்டு அவர்களுக்கு 'லாயர் பிசு' கொடுக்கப்பட்டுள்ளது. லாயர்கள் ஆங்கிலேயராக (ஐரோப்பியர்) உள்ளனர்.

பினாங்கில் இருந்த தெருக்களின் பெயர்கள் வாடிக்கையாளர்கள், வாடகை வீடுகள் முதலியவை குறிக்கப்படும்போது அறிய வருகின்றன.



30 பத்து நாளது மீ 1க்கு காடி கூலி ஸ்டாம்பு பலகாரம் அக்கரைக்களுக்குப் பேசிய டெலிப்போனுக்கும் சில்லரைச் சிலவும் சிட்டைப்படி றிங்கி நூற்று அறுபத்து ஏழு காசு எண்பத்தி ஐந்தில் நமக்கு றிங்கி

எடுத்துக்காட்டாக. தைசின் ஸ்த்திரீட்டு, யீப்போ ஸ்த்திரீட்டு, சன்றோட்டு, பெல்றோட்டு, சோனிய ஸ்த்திரீட்டு, கேம்பல் ஸ்த்திரீட்டு, பினாங்கு ஸ்த்திரீட்டு, கணவன் ஸ்த்திரிட்டு ஆகியவற்றைச் சொல்லலாம். மலேசிய மற்றும் பிற இடப்பெயர்கள் அங்கங்கு குறிக்கப்பட்டுள்ளன. அவை வாக்கான்சிறாய், யீப்போ, டெல்க்கான்சன், கூலீம், சாறா கித்தாத், கோலக்கஞ்சார், சுங்குரும்பை ஆகியவையாகும். மனையிடங்கள் 'லாட் 122 பாட் 3 டவுண் சப்டிவிஷன் கிராண்ட் நீ 1160-1163 கொயர் பீட்டு 3076 என்று குறிக்கப்பட்டுள்ளது. 1930 ஆம் ஆண்டில் 3076 சதுர அடி விலை 5100 றிங்கி என்றும் தெரிகிறது.

முன்சிப்பல் ஆபீஸ் வசம் கிராண்டாசல், வீட்டாசல், சடக்கு தண்ணீ ஆசல் என்ற வகையில் வரிகள் கட்டப்பட்டுள்ளன. பேருந்து, சிற்றுந்துகள் 'காடி' என்றும் அவற்றிற்கான கட்டணம் 'காடி கூலி' என்றும் குறிக்கப்படு கிறது. கப்பல் கட்டணம் கப்பல் கேழ்வு என்றும் ரயில் கட்டணம் ரயில் சார்ஸ்ச் என்றும் காணப்படுகிறது.

வேலை பார்க்கும் கணக்கர்களின் உணவிற்காகத் தமிழகத்திலிருந்து சமையல்காரர்கள் அழைக்கப்பட்டுள்ளனர். இவர்கள் நாகப்பட்டனத்தில் கப்பல் ஏறுவதற்கு முன்னதாக திருவண்ணாமலை சென்று வணங்கியுள்ளனர் இவர்களுக்கு வேண்டிய வேஷ்டி முதலியவை நாகப்பட்டினத்தில் வாங்கப்பட்டுள்ளது. இச்செலவுகளுடன் கப்பல் கேழ்வு, ரயில் சார்ஸ்ச் முதலியவையும் கணக்கில் எழுதப்பட்டுள்ளன

இங்குள்ள தண்ணீர்மலை தண்டபாணி கோயில் பக்தியுடன் வணங்கப்பட்டது இங்கு நகரத்தார்கள் கூடிப் பொதுவகச் செய்யும் பூசைச் செலவிற்காக மகமை எழுதப்பட்டுள்ளது. கார்த்திகை மாத சோமவாரத்தில் சங்காபிஷேகம் உபயமாகச் செய்யப்பட்டுள்ளது. தைபூசத்தின்போது தண்டபாணி கோயிலில் மஞ்சள் முதலிய பொருள்கள் காணிக்கை ஏலமாக விடப்பட்டபோது ஏலம் எடுத்த செலவும் எழுதப்பட்டுள்ளது சீனப்பெருநாள் கொண்டாடப்பட்டு சீன வங்கி அலுவலர்களுக்குப் பரிசுகள் வழங்கிய செலவுகளும் காணப்படுகின்றன

ஆங்கில மாதங்களில் ஏப்பிரல் = யேப்ரல், மே = மெய், என்ற உச்சரிப்பில் எழுதப்பட்டுள்ளன இக் கணக்கேடுகளைப் புரிந்து கொள்ள தமிழ் எண்களிலும் கூட்டெழுத்துக்களிலும் பழக்கமிருப்பது அவசியமாகும். சில எடுத்துக்காட்டுகள் இங்கு தரப்படுகின்றன

# 56. ஜவ்வாது மலைப்பகுதியில் சில தொல்லியல் இடங்கள் கண்டுபிடிப்பு

**இரா. ரமேஷ், வே. துக்கன், பாண்டிச்சேரி**

ஜவ்வாது மலை வேலூர் மாவட்டம், திருப்பத்தூர் வட்டத்தின் செங்கம் கணவாய்க்கு தெற்கே உள்ள பகுதி மேல்மலை என்றும் வடக்கே உள்ள பகுதி தென்மலை என்றும் அழைக்கப்படுகிறது. மேல்மலைப் பகுதியில் புதிய கற்கால மற்றும் இரும்புக்கால தொல்லியல் இடங்கள் கண்டறியப் பட்டுள்ளன. இவற்றில் 5 இடங்களில் புதிய கற்காலக் கருவிகள் மற்றும் ஒரு இடத்தில் கருவிகள் தீட்டுவதற்கு பயன்படுத்தப்பட்ட குழிகள் காணப்படுகின்றன. இரும்புக்கால ஈமச்சின்னங்களான கற்திட்டை, கற்குவை மற்றும் கற்பதுக்கைகள் 4 இடங்களில் கண்டறியப்பட்டுள்ளன. புதிய கற்காலக் கருவிகள் கண்டுபிடிக்கப்பட்ட ஊர்கள் பின்வருமாறு:

| வ. எண் | ஊர் | அமைவிடம் புதூர் நாட்டி லிருந்து | எண்ணிக்கை / குறிப்பு |
|---|---|---|---|
| 1. | கீழானூர் | கிழக்கே 5 கி.மீ. | 75 பிள்ளையார்க் கோயில் நீளம் 5 முதல் 25 செ.மீ. வரை |
| 2. | கூலி எருது பாறை | கீழானூருக்கும் மேற்கு 1 கி.மீ. | 21 குழிகள். புதிய கற்காலக் கருவிகள் கூர்மைப்படுத்தும் தொழிற்கூடம் |
| 3. | கோவிலூர் | வடக்கே 11 கி.மீ. | 30 கருவிகள் |



| 4. | கோம்பை | வடகிழக்கே 6 கி.மீ. | 100 மாரியம்மன் கோயில் பிள்ளையார்கோயிலில் வைக்கப்பட்டுள்ளன. நீளம் 5 செ.மீ. முதல் 25 செ.மீ. வரை |
|---|---|---|---|
| 5. | மலைத் திருப்பத்தூர் | 10 கி.மீ. | 5 பிள்ளையார் கோயில் வைக்கப்பட்டுள்ளன |
| 6. | நெல்லிவாசல் | வடகிழக்கே 15 கி.மீ. | 1. வேடியப்பன் கோயிலில் உள்ளது நீளம் 25 செ.மீ. |
| 7. | சேம்பறை | தெற்கே 10 கி.மீ. | 30. பிள்ளையார் கோயிலில் உள்ளது நீளம் 7 செ.மீ. முதல் 18 செ.மீ. |

இரும்புக் கால இடங்கள்

| 1. | வலசு | கிழக்கே 8 கி.மீ. | கற்பதுக்கை கற்குவை | 50 ஈமச் சின்னங்கள் 10 ஏக்கர் பரபப்ளவு |
|---|---|---|---|---|
| 2. | கோம்பை | | கற்திட்டை கற்குவை | 200, 50 (பாண்டியன் வீடு, பாண்டியன் திட்டு என வழங்கப் பெறுகின்றன) |
| 3. | கல்லாவூர் | வடக்கில் 15 கி.மீ. | கற்குவை | 30 |
| 4. | பேளூர் | வடக்கில் 6 கி.மீ. | கற்பதுக்கை திட்டை | - |
| 5. | அரும்பன் பட்டு | கிழக்கு 5 கி.மீ. | கற்பதுக்கை | 100 ஏக்கர் பரப்பளவு |



# 57. பெரும்பாக்கம் – இடைப் பழங்கற்கால பண்பாடு

க. சுரேஷ், தஞ்சாவூர்

பெரும்பாக்கம் : (12⁰54' 19"N 80⁰ 11' 55"E) காஞ்சிபுரம் மாவட்டம் சோழிங்கநல்லூர் வட்டம் சென்னைக்கு தெற்காக பல்லாவரத்தில் இருந்து தென்-கிழக்காக சுமார் 10 கி.மி. தொலைவில் உள்ள பெரும்பாக்கத்தில் மேற்பகுதியிலும், அடிவாரத்திலும் பெருங்கற்காலப் பண்பாட்டைச் சார்ந்த கற்கிடை மற்றும் கல்வட்டம் ஆகியவற்றை இந்தியத் தொல்லியல் துறையினர் பாதுகாத்து வருகின்றனர். இவற்றிற்கு அருகில் கிழக்கு மற்றும் தென்-கிழக்கு அடிவாரப்பகுதியிலிருந்து சுமார் 10மீ. தொலைவில் மழையின் காரணமாக ஏற்படும் நீரோட்டப் பாதையிலும் மற்றப் பகுதியிலும் இடைப்பழங்கற்கால கற்கருவிகளும், சில்லுகளும் (Flaks) மூலப்பொருட்களும் பெருமளவில் கண்டெடுக்கப்பட்டன. இவற்றுடன் இக்கருவிகள் செய்வதற்கான மூலக்கற்களான குவார்சைட் (Quarzite) மற்றும் செர்ட் (Chert) கற்களும் உள்ளன. ஏலவலாயிஸன் தொழில்நுட்ப அடிப்படையில் இக்கருவிகள் செய்யப்பட்டன. இங்கு கண்டுபிடிக்கப்பட்ட கருவிகள் பின்வருமாறு: பக்க சுரண்டிகள் (Side Scapers), லெவலாய்ஸ் சில்லுக்கருவி (Levolloise Flake) மற்றும் முனையுடன் கூடிய பக்கசுரண்டிகள் End cum-side scrapers) ஆகும். இவையாவும் இடைப் பழங்கற்காலப் பண்பாட்டுக் கருவிகளாகும்.











# 58. செய்யாறு வட்டத்தில் புதிய தொல்லியல் கண்டுபிடிப்புகள்

**சு. குமரன், சென்னை**

*திருவண்ணாமலை மாவட்டம், செய்யாறு வட்டப் பகுதியில் மேற்கொள்ளப்பட்ட கள ஆய்வில் இரும்புக்கால ஈமச்சின்னங்களின் எச்சங்கள் சுமார் 20க்கும் மேற்பட்ட பகுதிகளில் கண்டறியப்பட்டுள்ளன. அவை கல்வட்டம், கற்பதுக்கை மற்றும் கற்குவை ஆகிய அமைப்புகளைக் கொண்டுள்ளன இவ்விரும்புக்கால ஈமச்சின்னங்கள் முழுவதுமாகவும் சில ஈமச்சின்னங்கள் அழிவுற்ற நிலையிலும் காணப்படுகின்றன கல்வட்டம் மற்றும் கற்குவை போன்றவை. ஏரையூர், பாராசூர், முக்கூர், வெளுமாந்தாங்கல், கொழம்பாடி, மோரணம், பாப்பந்தாங்கல் மற்றும் அருகாவூர் போன்ற ஊர்களில் காணப்படுகின்றது.*

*கற்பதுக்கை செய்யாரிலிருந்து பாராசூர் வழியாக ஆரணி செல்லும் சாலையை ஒட்டி முக்கூர் ஊரின் வடக்குத் திசையில் காணப்படுகின்றது இங்கு காணப்படும் கற்பதுக்கைகள் முற்றிலும் சிதைந்துள்ள நிலையில் உள்ளன இவை மட்டுமல்லாது இப்பகுதியை சுற்றிலும் இரும்புக் காலத்தைச் சார்ந்த கருப்பு சிவப்பு நிற பானை ஓடுகள் கடுகனூர் என்னும் இடத்திலும் இரும்பு ஓடுகள் சிறுங்கட்டூர் என்ற இடத்திலும் கண்டுபிடிக்கப்பட்டது*

# 59. சேர்வராயன் மலைப்பகுதியில் தொல்லியல் கண்டுபிடிப்புகள்

தி. சாமுண்டீஸ்வரி, சென்னை

சேலம் மாவட்டத்தில், சேர்வராயன் மலைப்பகுதியில் இராபர்ட் புரூஸ்ஃபுட் புதிய கற்கால மற்றும் இரும்புக்காலத் தொல்லியல் இடங்களைக் கண்டறிந்துள்ளார் தற்போது புதிய மற்றும் இரும்புக்காலத் தடயங்கள் கீழ்க் குறித்த ஊர்களில் புதியதாகக் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன.

## புதிய கற்காலம்

| வ. எண் | ஊர் | கிடைக்கும் இடம் | அளவு | விளக்கம் |
|---|---|---|---|---|
| 1 | முளுவி ஏற்காட்டிற்கு வடக்கே 14 கி.மீ. | விநாயகர் கோயிலில் வழிபாட்டில் உள்ளது | 45 செ மீ முதல் 7 செ.மீ. அகலம் 5 முதல் 18 செ மீ. நீளம் | வழிபாட்டில் 35 கருவிகள் வைக்கப் பட்டுள்ளன மாரியம்மன் கோயிலின் முன் இக்கருவிகளை பளபளப்பாக்கும் குழிகள் காணப்படுகின்றன |
| 2 | செம்மம் நத்தம் ஏற்காட்டிற்கு வடக்கே 17 கி மீ | மணியப்பன் கோயிலில் வழிபாட்டில் உள்ளது | - | புதிய கற்காலக் கருவி |
| 3 | வேலூர் ஏற்காட்டி லிருந்து 12 கி.மீ. | விநாயகர் கோயிலில் வழிபாட்டில் உள்ளது | - | 50 புதிய கற்காலக் கருவிகள் |
| 4 | நடூர் | மாரியம்மன் | | 10 கருவிகள் நீளம் 4 முதல் 15 செ மீ. 7 முதல் 17 செ.மீ. நீளம் |

| 5 | பூலாக்காடு ஏற்காட்டி லிருந்து 15 கி.மீ | மாரியம்மன் கோயிலில் வழிபாட்டில் உள்ளது | - | 4 கருவிகள் 14 செ.மீ |
|---|---|---|---|---|

## இரும்புக்காலம்

| 1 | கரடியூர் ஏற்காட்டி லிருந்து வட மேற்கே 14 கி.மீ. | காபி தோட் டம் (பாண்டி யன் வீடு எனக் கூறப்படுகிறது | - | 10 கற்திட்டைகள் |
|---|---|---|---|---|
| 2 | சென்ராயங் கோயில் ஏற்காட்டி லிருந்து 7 கி.மீ. | பால்காடுப் பாறை பகுதி (பாண்டியன் வீடு எனக் கூறப்படுகிறது) | - | 50 கற்திட்டைகள் |

## வரலாற்றுக் காலம்

| 1 | நடூர் ஏற்காட்டி லிருந்து 4 கி.மீ. | காவல்காரசாமி எனப்படும் நடுகற்கள் | - | நடுகற்கள் |
|---|---|---|---|---|

# 60. சேலம் மற்றும் நாமக்கல் வட்டாரத் தொல்லியல் கண்டுபிடிப்புகள்

செ. நந்தகுமார், சென்னை

சேலம் மாவட்டம், நாமக்கல் வட்டாரத்தில் கீழ்க்கண்ட இடங்களில் இரும்புக்கால எச்சங்களும் வரலாற்றுக்காலச் சிற்பங்களும் கிடைத்துள்ளன. வேட்டுவம்பாளையம் திருச்செங்கோட்டிலிருந்து இளையமங்கலம் சாலை 8 கி.மீ. தொலைவு - இரும்புக்கால கல்வட்டங்கள் 5 மீ. முதல் 7 மீ. வரை கறுப்பு சிவப்பு மட்கலங்களும் காணப்படுகின்றன.

திருச்செங்கோட்டிலிருந்து தெற்கே இளையமங்கலம் செல்லும் சாலையில் சுமார் 12 கி.மீ. தொலைவில் மொளசி என்ற ஊரின் நடுவில் நடுகல் ஒன்று காணப்படுகிறது. இந்நடுகல்லில் வீரனின் உருவமும் பசு மற்றும் குதிரையின் உருவமும் வடிக்கப்பட்டுள்ளன. வீரன் கையில் அம்பும் வில்லும் வைத்திருப்பது போலவும், பன்றியும் குதிரையும் நேருக்கு நேர் பார்ப்பது போன்றும் உருவங்கள் காணப்படுகின்றன. இந்நடுகல் சுமார் 16, 17 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தவையாக இருக்கலாம்.



சோழ சிராமணியிலிருந்து வடகிழக்கே கவுண்டம்பாளையம் செல்லும் சாலையில் 4 கிலோ மீட்டர் தொலைவில் சித்தம்பூண்டி ஊரின் தெற்கே உள்ள அம்மன் கோயில் அருகே உள்ள நத்தக்காடு என்று அழைக்கப்படும் இடத்தில் இரும்புக் காலத்தைச் சேர்ந்த கருப்பு சிவப்பு மட்பாண்ட ஓடுகள் மற்றும் வரலாற்றுக்கால மட்பாண்ட ஓடுகள்

சுமார் ஒரு ஏக்கர் பரப்பளவில் காணப்படுகிறது இக்கோயிலின் கிழக்குப் பகுதியில் தீர்த்தங்கரர் (சமணர்) சிற்பம் மண்ணில் புதைந்த நிலையில் யோக நிலையிலும் இவருடைய இரு பக்கங்களில் இயக்கிகளின் உருவங்களும் காணப்படுகிறது

பரமத்தியிலிருந்து வடக்கே நாமக்கல் செல்லும் சாலையில் 10 கிலோ மீட்டர் தொலைவில் அமைந்துள்ள கூடச்சேரியிலிருந்து வடமேற்கே 2 கிலோ மீட்டர் தொலைவில் திருமணிமுத்தாற்றின் இடக்கரையில் அமைந்துள்ள பள்ளப்பாளையத்தில் நத்தக்காடு என்று அழைக்கப்படும் பகுதியில் இரும்புக் காலத்தைச் சார்ந்த வாழ்விடப் பகுதி 5 ஏக்கர் பரப்பளவில் காணப்படுகிறது இவ்விடத்தில் கருப்பு சிவப்பு மட்பாண்ட ஓடுகள், இரும்புக் கழிவுகள் பரவலாகக் காணப்படுகின்றன. மேலும் இவ்விடத்தில் வரலாற்றுக்கால இரண்டு நந்தி சிலைகளும், நடுகல் ஒன்றும் காணப்படுகின்றன

இராசிபுரம் பழைய பேருந்து நிலையத்தின் பின்புறம் உள்ள பகுதியில் வீடு கட்ட நிலத்தை தோண்டியபோது முதுமக்கள் தாழிகள் கிடைத்தன. இவற்றின் எலும்புத் துண்டுகள், தாங்கிகள், கருப்பு சிவப்பு மட்பாண்ட ஓடுகள் ஆகியவை காணப்பட்டன

இராசிபுரத்திலிருந்து கிழக்கே ஆத்தூர் செல்லும் சாலையில் 6 கிலோ மீட்டர் தொலைவில் உள்ள சிராப்பள்ளியில் இரும்புக் காலத்தைச் சார்ந்த நெடுநிலை கல் ஒன்று ஏற்கனவே கண்டுபிடிக்கப்பட்டுள்ளது தற்போது கள ஆய்வின்போது இந்நெடுகல் அருகில் வீடு கட்டும் பணி மேற்கொண்ட போது முதுமக்கள் தாழிகள் மற்றும் இரும்புவாள், கருப்பு சிவப்பு மட்பாண்டம், கருப்பு சிவப்பு கிண்ணங்கள், சிவப்பு மட்பாண்டம் போன்றவை கண்டறியப்பட்டுள்ளன

சேலத்திலிருந்து கிழக்கே ஆத்தூர் செல்லும் சாலையில் 2 கிலோ மீட்டர் தொலைவில் அம்மாபேட்டை அமைந்துள்ளது இவ்வூரின் சாலையோர இடப்புறத்தில் ஒரு நடுகல் காணப்படுகிறது அதில் வீரனின் உருவமும் புலியின் உருவமும் உள்ளது வீரன் புலியை ஈட்டியைக் கொண்டு தாக்குவதைப் போன்ற உருவம் அதில் இடம்பெற்றுள்ளது. சிற்ப அமைப்பை காணும்போது 17 - 18ம் நூற்றாண்டைச் சார்ந்ததாக இருக்கலாம்.

# 61. கன்னியாகுமரி மாவட்டத்தில் தொல்லியல் கண்டுபிடிப்புகள்

**ஆ. பெருமாள், புதுச்சேரி**

கன்னியாகுமரி மாவட்டத்தில் கள ஆய்வு மேற்கொண்டபோது புதிய கற்காலக் கருவி, இரும்புகால எச்சங்களான முதுமக்கள் தாழிகள், கருப்பு - சிவப்பு மண்பாண்ட துண்டுகள் மற்றும் வரலாற்றுக்கால எச்சமான சிவப்பு மண்பாண்ட துண்டுகள் ஆகியவை கண்டுபிடிக்கப்பட்டன.

## புதிய கற்கால கருவி

ஊர் - சிதரால்

வட்டம் - விளவங்கோடு

கண்டுபிடிப்பு - புதிய கற்கால கருவி

இடம் - இக்கருவி சிதரால் ஊரின் திருச்சாரணத்து மலை அடிவாரத்தில் குழித்துறை தாமிரபரணி ஆற்றங்கரையின் மேற்கு பகுதியில் கண்டுபிடிக்கப்பட்டது. இதன் நீளம் 10 செ.மீ. அடிப்பகுதியின் அகலம் 5 செ.மீ.

**முதுமக்கள் தாழிகள் :** இது இம்மாவட்டத்து மக்களால் கூனிப்பானை, கூனம்படாவு என்று அழைக்கப்படுகிறது. இவை கிடைக்குமிடங்கள்

ஊர் - வடக்கு கண்ணங்குளம் N 08° 09' 09.7" E 077° 27' 04.67"

வட்டம் - அகத்தீஸ்வரம்

இடம் - பறக்கையாற்றின் வலது கரையில் அமைந்துள்ளது.

செய்தி - இங்கு முதுமக்கள் தாழியுடன் இணைந்து வைக்கப்படும் ஒரு சிறிய மண்பாண்டம் மண்ணில் புதைந்த நிலையில்



காணப்பட்டது. இப்பகுதியில் முதுமக்கள் தாழியின் உடைந்த பகுதிகள் பல கண்டுபிடிக்கப்பட்டன

ஊர் - மங்காடு N 08° 17' 35.9" E 077° 10' 05.5"

வட்டம் - விளவங்கோடு

இடம் - இவ்வூர் மார்த்தாண்டம் பகுதியிலிருந்து தெற்காக 9 கி.மீ தொலைவில் அமைந்துள்ளது.

செய்தி - இவ்வூரில் சிறிய மண்பாண்டங்கள் இரண்டு அதன் அடிப்பகுதி மற்றும் சிறிது மண்ணில் புதைந்த நிலையில் இருந்தன இரும்பு காலத்தினைச் சேர்ந்த கருப்பு - சிவப்பு மண்பாண்டங்கள் உடைந்த நிலையில் கண்டுபிடிக்கப் பட்டன

இம்மாவட்டத்தில் கள ஆய்வில் பின்வரும் ஊர்களில் இரும்பு காலத் தினைச் சேர்ந்த கருப்பு - சிவப்பு மண்பாண்ட சான்றுகளும் மற்றும் சிவப்பு மண்பாண்டங்கள் கிடைத்ததன் மூலம் தொடக்ககால வரலாற்றுச் சான்றுகள் அறிய முடிகிறது

| வ எண். | இடம் | G.P.S. Point | வட்டம் | கிடைத்த பொருட்கள் |
|---|---|---|---|---|
| 1. | வடுகன்பற்று | N 08° 06' 35 8"<br>E 077° 31' 30 5" | அகத்தீஸ்வரம் | கருப்பு– சிவப்பு மண்பாண்டங்கள் உடைந்த நிலையில் |
| 2. | தெற்கு கண்ணாங்குளம் | N 08° 08' 40 2"<br>E 077° 26' 58 4" | ,, | கருப்பு– சிவப்பு மண்பாண்டங்கள் உடைந்த நிலையில் |
| 3. | அருமநல்லூர் (மேற்கு) | N 08° 19' 16 2"<br>E 077° 24' 20 4" | தோவாளை | கருப்பு– சிவப்பு மண்பாண்டங்கள் உடைந்த நிலையில் |
| 4. | அனுமகேதந நல்லூர் (தெற்கு) | N 08° 19' 23 5"<br>E 077° 24' 35 2" | ,, | கருப்பு– சிவப்பு மண்பாண்டங்கள் உடைந்த நிலையில் |
| 5. | குறண்டி | N 08° 10' 50 8"<br>E 077° 28' 24 4" | ,, | கருப்பு– சிவப்பு மண்பாண்டங்கள் உடைந்த நிலையில் |
| 6. | தாழக்குடி (மேற்கு) | N 08° 14' 18 9"<br>E 077° 26' 48.0" | ,, | கருப்பு– சிவப்பு மண்பாண்டங்கள் உடைந்த நிலையில் |

| | | | | |
|---|---|---|---|---|
| 7. | சீதப்பால் | N 08° 15' 15.5"<br>E 077° 27' 19.0" | கருப்பு– சிவப்பு<br>மண்பாண்டங்கள் | உடைந்த நிலையில் |
| 8. | பூலாங்குழி | N 08° 14' 50.6"<br>E 077° 27' 02.8" | ,, | கருப்பு– சிவப்பு<br>மண்பாண்டங்கள்<br>உடைந்த நிலையில் |
| 9. | குறத்தியறை | N 08° 17' 47.1"<br>E 077° 27' 02.3" | ,, | சிவப்பு<br>மண்பாண்டங்கள்<br>உடைந்த நிலையில் |
| 10. | புலியு+ர் குறிச்சி | N 08° 14' 45.9"<br>E 077° 19' 52.0" | கல்குளம் | கருப்பு– சிவப்பு<br>மண்பாண்டங்கள்<br>உடைந்த நிலையில் |
| 11. | வெள்ளிமலை | N 08° 10' 23.4"<br>E 077° 19' 18.9" | ,, | கருப்பு– சிவப்பு<br>மண்பாண்டங்கள்<br>உடைந்த நிலையில் |
| 12. | செம்மண் தேரி | N 08° 08' 09.0"<br>E 077° 19' 15.3" | ,, | கருப்பு– சிவப்பு<br>மண்பாண்டங்கள்<br>உடைந்த நிலையில் |
| 13. | திருநயினார்<br>குறிச்சி | N 08° 09' 38.4"<br>E 077° 18' 51.5" | ,, | கருப்பு– சிவப்பு<br>மண்பாண்டங்கள்<br>உடைந்த நிலையில் |
| 14. | கொக்குடி<br>குறிச்சி | N 08° 19' 53.3"<br>E 077° 11' 45.4" | விளவங்கோடு | கருப்பு– சிவப்பு<br>மண்பாண்டங்கள்<br>உடைந்த நிலையில் |



| 15. | தெங்குவிளை குறிச்சி | N 08° 19' 56.1"<br>E 077° 11' 57.6" | ,, | கருப்பு– சிவப்பு மண்பாண்டங்கள் உடைந்த நிலையில் |
|---|---|---|---|---|
| 16. | கோனம் குறிச்சி | N 08° 19' 59.1"<br>E 077° 12' 00.2" | ,, | கருப்பு– சிவப்பு மண்பாண்டங்கள் உடைந்த நிலையில் |
| 17. | மருதங்கோடு கொற்றச்சி விளை | N 08° 20' 02.8"<br>E 077° 12' 14.4" | ,, | கருப்பு– சிவப்பு மண்பாண்டங்கள் உடைந்த நிலையில் |
| 18. | பள்ளிச்சல் விளை | N 08° 19' 52.8"<br>E 077° 11' 41.2" | ,, | கருப்பு– சிவப்பு ண்பாண்டங்கள் உடைந்த நிலையில் |
| 19. | கறச்சி விளை | N 08° 18' 18.9"<br>E 077° 11' 02.0" | ,, | கருப்பு– சிவப்பு மண்பாண்டங்கள் உடைந்த நிலையில் |
| 20. | கனியன் விளை | N 08° 19' 11.1"<br>E 077° 10' 32.1" | ,, | கருப்பு– சிவப்பு மண்பாண்டங்கள் உடைந்த நிலையில் |



# 62. வந்தவாசிப் பகுதியில் தொல்லியல் இடங்கள்

கோ. சசிகலா, மதுரை

காஞ்சிபுரம் மாவட்டம், வந்தவாசிப் பகுதியில் தொல்லியல் மேற்பரப்பு களஆய்வில் தண்டரை, சேர்ப்பாக்கம், பெருநகர் ஆகிய ஊர்களில் தொல்லியல் சான்றுகளும், வரலாற்றுக் காலத்தைச் சார்ந்த கல்வெட்டுகளும் புதிதாகக் கண்டறியப்பட்டன.



காஞ்சிபுரம் மாவட்டம், வந்தவாசி வட்டத்தில் வந்தவாசியிலிருந்து சுமார் 17 கி.மீ. தூரத்தில் தண்டரை என்னும் ஊரின் மேற்கே ஏரியின் வடக்கே பெருங்கற் காலத்தைச் சார்ந்த கல்வட்டங்கள் காணப்படுகின்றன. இவை அழிந்த நிலையில் உள்ளன. மேலும் ஏரியின் கிழக்குப்புறத்தின் வாய்ப் பகுதியில் ஒரு நெடுங்கல்லும், ஒரு சில கல்வட்டங்களும் காணப்படுகின்றன. இவ்விடத்திலிருந்து சுமார் 100 மீட்டர் தொலைவில் இரும்பு உருக்கும் தொழிற்கூடம் காணப்படுகிறது. கருப்பு சிவப்பு மற்றும் கருப்பு பானை யோடுகளும் காணப்படுகின்றன.

பொ.ஆ. 15ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த அய்யனார், சப்தமாதர்கள், அம்மன் ஆகிய சிலைகள் இவ்வூரில் காணப்படுகின்றன. இவ்வூரின் ஏரிக்கரையில் அமைந்துள்ள மண்டபம் ஒன்றில் பொ.ஆ.16-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த தெலுங்கு கல்வெட்டு ஒன்று கண்டறியப் பட்டுள்ளது. மேலும் நாயக்கர் காலத்தைச் சேர்ந்த சிற்றின்பச் சிற்பங்களும் இங்கு தூண்களில் அமைந்துள்ளன.

வந்தவாசியில் இருந்து சுமார் 18 கி.மீ. தூரத்தில் சேர்ப்பாக்கம் உள்ளது. இங்கு பெருங்கற்காலத்தைச் சேர்ந்த கல்வட்டங்கள் அழிந்த நிலையில் காணப்படுகின்றன. நெடுங்கல் ஒன்றும் காணப்படுகிறது. இதன் உயரம் 2 மீட்டராகும். ஊருக்கு வடக்கே அழிந்துபட்ட சிவன்கோயிலுக்கு அருகே சிறிய செங்கல் தளி ஒன்றில் சமணத் தீர்த்தங்கரர் சிற்பம் காணப்படுகின்றது. பொ.ஆ. 13-14-ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது. இச்சிற்பத்தின் உயரம் 1.5 மீட்டராகும். மேலும் இங்கு எழுத்துப்பொறிப்பற்ற நடுகல் ஒன்று ஊன்றிய நிலையில் காணக்கிடக்கின்றது.

வந்தவாசியிலிருந்து சுமார் 16கி.மீ. தொலைவில் காஞ்சிபுரம் செல்லும் சாலையில் பெருநகர் அமைந்துள்ளது. இங்கு கல்வட்டங்கள் அழிந்த நிலையில் காணப்படுகின்றன. மற்றும் அழிந்த நிலையில் உள்ள ஈமத்தாழியின் வாய்ப்பகுதிகளும் கிடைக்கின்றன.

பெருநகரிலிருந்து 2 கி.மீ. தொலைவில் அமைந்துள்ள தேத்துறை ஊரில் சத்திரம் ஒன்றின் உத்தரத்தில் தெலுங்குக் கல்வெட்டொன்று காணப்படுகின்றது. மேலும் நாயக்கர் காலத்தைச் சேர்ந்த சிற்றின்பச் சிற்பங்களும் இங்கு தூண்களில் அமைந்துள்ளன.



# 63. நத்தம் வட்டாரத் தொல்லியல்

கோ. சசிகலா, மதுரை

*திண்டுக்கல் மாவட்டம், நத்தம் வட்டத்தில் கீழ்கண்ட ஊர்களில் கள ஆய்வில் தொல்லியல் எச்சங்கள் கண்டுபிடிக்கப்பட்டன.*

| வ. எண் | ஊர் | காலம் | குறிப்பு |
|---|---|---|---|
| 1. | கடவூர் (மதுரை யிலிருந்து நத்தம் செல்லும் சாலை | இரும்புக் காலம் | வாழ்விடப் பகுதி 3 ஏக்கர் இரும்புக்கால மட்கல ஓடுகள், இரும்புக் கழிவுகள் |
| 2. | பரளி (கடவூரிலிருந்து 5 கி.மீ. தொலைவு) | வரலாற்றுக் காலம் | வாழ்விடப் பகுதி |
| 3. | லிங்கவாடி (நத்தத்திலிருந்து 3 கி.மீ.) | பெருங்கற்காலம் | இரும்புக்கால மட்கல ஓடுகள் இரும்புக் கசடுகள் |
| 4. | வத்திப்பட்டி (கடவூரிலிருந்து 11 கி.மீ. தொலைவு) | – | 17 ஆம் நூற்றாண்டு நடுகல் திரிசூலக்கல் |
| 5. | ழி. புதுக்கோட்டை (நத்தத்திலிருந்து தெற்கே 7 கி.மீ.) | இரும்புக் காலம் | இரும்புக் கால பானை ஓடுகள் 2 ஏக்கர் வாழ்விடப் பகுதி |



| | | | |
|---|---|---|---|
| 6. | முடக்குச்சாலை (நத்தத்திலிருந்து தெற்கே 6 கி.மீ.) | இரும்புக் காலம் | வாழ்விடப் பகுதி இரும்புக்கால பானை ஓடுகள் |
| 7. | கோவில்பட்டி (நத்தத்திலிருந்து 4 கி.மீ.) | இரும்புக் காலம் வரலாற்றுக் காலம் | வாழ்விடப் பகுதி இரும்புக் கால வரலாற்றுக் கால பானை ஓடுகள் |
| 8. | கல்வேலிப்பட்டி (வல்லடியான் கோயில் அருகில், கோவில்பட்டிக்கு மேற்கே 1 கி.மீ.) | இரும்புக் காலம் | வாழ்விடப் பகுதி |
| 9. | பூலாமலை – குட்டுப்பட்டி (நத்தத்திலிருந்து 7 கி.மீ.) | இரும்புக் காலம் | 5 ஏக்கரில் வாழ்விடப் பகுதி ஈமக்காடு பானை ஓடுகள், |
| 10. | மலையூர் நத்தம் – அய்யனார் புரம் சாலையில் 7 கி.மீ. | நுண்கற்காலக் கருவிகள் அய்யனார் கோயில் | நுண்ணியக் கற்கருவிகள் |



# அறக்கட்டளைச் சொற்பொழிவுகள்

## 64. முற்கால பாண்டிய அரசு, ஆட்சி, பிரம்மதேயங்கள்

கு. சுவாமிநாதன், மைசூர்

*பாண்டியர் தமிழகத்தையாண்ட தொன்மையான மரபினராகும். பாண்டியர்கள் பொ ஆ.மு. மூன்றாம் நூற்றாண்டிலிருந்து பொ.ஆ. பதினைந்தாம் நூற்றாண்டு வரை தமிழகத்தை ஆண்டனர் என்பது அவர்களது கல்வெட்டுகளின் மூலம் அறியப்படுகிறது.[1] மௌரியப் பேரரசின் அசோக மன்னரது கல்வெட்டுகளில் பாண்டியர்கள் குறிப்பிடப்படு கின்றனர்[2] பாண்டிய அரசர்கள் பன்னிரண்டு செப்பேடுகளும், ஏறக்குறைய இரண்டாயிரம் கல்வெட்டுகளும் இதுவரை கண்டுபிடிக்கப்பட்டுள்ளது[3] இவை தமிழகத்தில் மட்டுமன்றி கேரளம்,[4] ஆந்திராவிலும்[5] கிடைக்கின்றன*

*பாண்டிய நாட்டின் எல்லை வடமேற்கே வெள்ளாறு வரையிலும், மேலூர், திருச்சிராப்பள்ளி வட்டங்கள் வடக்கேயும், மேற்குத் தொடர்ச்சி மலை மேற்கிலும், தெற்கிலும், கிழக்கிலும் கடல்களை எல்லைகளாக கொண்டிருந்தன இதில் மதுரை, இராமநாதபுரம், திருநெல்வேலி மாவட்டங்களும், தஞ்சை மாவட்டத்திலுள்ள அறந்தாங்கி வட்டத்தின் சில பகுதிகளும், புதுக்கோட்டை மாவட்டத்திலுள்ள ஆலங்குடி, திருமெய்யம் வட்டங்களும், கன்னியாகுமரி மாவட்டத்திலுள்ள அகத்திஸ்வரம், தோவலா வட்டப் பகுதிகளும், பழனி மாவட்டத்தின் கிழக்குப் பகுதிகளும் பாண்டிய நாட்டிலடங்கும்[6] இக்கட்டுரையில் முற்காலப் பாண்டியர் அரசு ஆட்சியில் பிரமதேயங்கள் பற்றி ஆய்வு செய்யப்பட்டுள்ளது*

*முற்காலப் பாண்டியர்கள் சுமார் பொ.ஆ.மு 300லிருந்து பொ.ஆ. 984 வரை ஆண்டனர் இவர்கள் வெளியிட்ட கல்வெட்டுகளின் எண்ணிக்கை சுமார் நூற்று முப்பது[7] முற்காலப் பாண்டிய அரசர்களே மிக முக்கியமான செப்பேடுகளை வெளியிட்டுள்ளனர் இவர்களது கல்வெட்டுகள் பாண்டிய நாட்டில் வட்டெழுத்திலும், சோழ நாட்டில் தமிழ் எழுத்திலும் கிடைக்கின்றன இவர்களது செப்பேடுகள் வடமொழி மற்றும் தமிழ் மொழியிலும் பொறிக்கப்பட்டிருக்கும் பாண்டியர்களின் செப்பேட்டில் தமிழ் நடை தூய செந்தமிழில் எழுதப்பட்டிருக்கும் இதேபோன்று வடமொழிப் பகுதியும் உயர்ந்த நடையில் பொறிக்கப்பட்டிருக்கும்*

*முற்காலப் பாண்டியரின் கல்வெட்டுகள் பொதுவாக அளவில் சிறியதாக இருக்கும் இவை பெரும்பாலும் கோயிலுக்கு அளிக்கப்பட்ட நிவந்தங்*

---

பத்மஸ்ரீ ஐராவதம் மகாதேவன் அவர்கள் நிறுவியுள்ள தி.நா. சுப்ரமணியன் அறக்கட்டளைச் சொற்பொழிவு எண் 14 நாள் 15.07.2012

களைத் தான் குறிப்பிடுகின்றன. இரண்டாம் வரகுண பாண்டியரின் திருச்செந்தூர் மற்றும் அம்பாசமுத்திரம் கல்வெட்டுகளைத் தவிர மற்ற கல்வெட்டுகள் எளிய முறையில் எழுதப்பட்டிருக்கும். சிவல்லப பாண்டியரின் எருக்கங்குடி கல்வெட்டு வெண்பா நடையில் எழுதப்பட்டுள்ளது. இதில் மன்னரிடம் இருப்பைக்குடி கிழவன் என்ற பட்டம் பெற்ற எட்டிச்சாத்தன் இருஞ்சோழ நாட்டிலுள்ள ஆறுகளை பழுது பார்த்தும், மதகுகளைச் செப்பனிட்டும், கோயில்களையும், அம்பலங்களையும் கட்டியும் ஆற்றிய அரும்பணிகளை செய்யுள் நடையில் விவரிக்கின்றது. செப்பேடுகளோ கற்றறிருந்த அந்தணர்களுக்கு நிலங்களையும், கிராமங்களையும் பிரம்மதேயங்களாக அளித்ததைக் கூறுகின்றன. மாறஞ்சடையனின் மானூர் கல்வெட்டு (பொ.ஆ 813) உள்ளூர் அவையில் மன்றாடும் அங்கத்தினரின் தகுதியைக் குறிப்பிடுகின்றது[10] இரண்டாம் வரகுணரின் (பொ.ஆ. 863-910) முப்பது கல்வெட்டுகளில் பதினோரு கல்வெட்டுகள் மன்னரே பல்வேறு சிவன் கோயில்களுக்கு அளித்த கொடைகளைப் பதிவு செய்கின்றன[11] இவரது திருச்செந்தூர் வட்டெழுத்து கல்வெட்டு பாண்டிய நாட்டின் உள்ளாட்சி, பொருளியல் நிலைகளை எடுத்துக்காட்டும் ஒரு வரலாற்றுக் கருவூலம். இதில் மன்னர் சுப்பிரமண்ணிய படாரரே வழிபட்ட இறைவனின்[12] நித்திய வழிபாடு, உணவு படையல்களுக்காக 1,400 காசுகள் தனது மூன்று அதிகாரிகளிடம் அளித்தும், அதனை அவர்கள் பல்வேறு உள்ளூர் அவையினரிடம் முதலீட்டாக வைத்தும், அதிலிருந்து வரும் பொலிசையைக் கோயிலுக்கு அளித்து வழிபாட்டு வைபவங்களை நடத்தியதையும் தெரிவிக்கின்றது. சோழன் தலைகொண்ட வீரபாண்டியரும்[13] (பொ.ஆ. 951) இளங்கோய்க்குடி திருப்போத்துடையாருக்கு உணவு படையலுக்காக நிலமளித்ததை அம்பாசமுத்திரம் கல்வெட்டுக் கூறுகிறது. பாண்டிய மன்னர்கள் தாங்கள் வெளியிடும் செப்பேடுகளின் மொழிநடை கம்பீரமாகவும், பொருள் பொதிந்துள்ளதாகவும் இருக்க வேண்டும் என்று கருதினர். சான்றாக வீரபாண்டியன் தனது செப்பேடுகளில் வடமொழி சுலோகத்தை வரைவதற்கு அநுஷ்டுப் என்ற சுலோகம் வரைவதில் வல்லவரான பீதாம்பர பட்டனுக்கு ஒரு கிராமத்தை சாசன மங்கலம் என்றே பெயரிட்டு அளித்ததை சிவகாசி செப்பேடு செப்புகிறது[14]

அரசன் : பாண்டிய அரசின் தலைமை உறுப்பு மன்னனே மன்னர்கள் சடையன், மாறன் என்ற பட்டங்களை மாறி மாறித் தரித்துக் கொண்டனர்[15] மேலும் இம்மன்னர்கள் கோ, பெருமானடிகள், பாண்டியதிராஜர், பாண்டிய குலபதி, மகாராஜர், பாண்டிய மகாராசர் என்றெல்லாம் அழைக்கப் பட்டனர்[16] இப்பட்டங்கள் எல்லாம் மன்னரின் இறையாண்மையையும், உன்னத நிலையையும் எடுத்துக் காட்டுகின்றன மன்னர்கள் அரசுரிமைக்கு இறைத் தன்மை உண்டு என்று நம்பினர்

மன்னர்கள் தங்களைச் சந்திரகுலத்தைச் சார்ந்தவர்கள் என்று செப்பேடுகளில் கூறிக் கொள்கிறார்கள்.[17] தங்களது குலம் புராண காலத்திலிருந்து வந்த தொன்மையான குலம் என்றும் அதனை உறுதிப் படுத்திக் கொள்ள பல புராண நிகழ்வுகளை தங்களது குலத்துடன் தொடர்புபடுத்திக் கொண்டு தங்களது அரசாட்சிக்கு அங்கீகாரமும் பெருமையும் சேர்த்துக் கொள்ள விழைந்தனர் இப்பாண்டியர்கள் சங்ககாலத்திலிருந்த பாண்டியரது வழித்தோன்றல்கள் என்பதனை வேள்விக்குடி, தளவாய்புரம் செப்பேடுகள் உறுதிபடுத்துகின்றன.[18] பாண்டிய மன்னர் பூமி தேவிக்கு கணவனாக அமைந்தது; அகத்தியரை ஆசனாகப் பெற்றது; மேருவின் உச்சியில் இரு மீன் உருவங்களைப் பொறித்தது இந்திரன் மாலையை அணிந்தது; அகத்திய முனிவருடன் தமிழாராய்ந்தது. அர்ச்சுனனுடைய சாபத்தைப் போக்கியது இராவணனுடன் சமாதானம் செய்தது போன்ற பெருஞ்சாதனைகள் செய்ததாகக் கூறிக் கொள்கிறார்கள்[19] இவையெல்லாம் மிகையானவை என்றாலும் இம்மன்னர்கள் இத்தகைய நிகழ்வுகளைக் குறிப்பிடுவதின்மூலம் தங்கள் குலம் தொன்மையும் புகழும் மிக்கது தாங்கள் அரசாள தகுதியுடையவர்கள் என்றும் பறை சாற்றிக் கொள்வதற்கே. இதற்குத் தகுந்தாற் போல் பல புராண புகழுரைகளைத் தங்களது குலத்திற்கு ஏற்றி கல்வெட்டுக்களில் அதனைப் பொறித்தனர் சான்றாக இம்மன்னர்கள் இரண்யகர்ப்பம், துலாபாரம் போன்ற மகாதானங்களைச் செய்தும் அக்கிரகாரங்கள் பல உருவாக்கியும், சீரும், சிறப்புமாகச் செங்கோலோச்சினர் என்றும் வைகைக் கரை கல்வெட்டும்,[20] இவர்கள் மநு நெறியில் நின்று அறங்காப்பவர்கள் என்றும் தளவாய்ப்புரம் செப்பேடுகள் கூறுகின்றன[21] சங்க காலத்திற்குப் பிறகு களப்பிரர்களால் தோற்கடிக்கப்பட்டு பல வருடங்கள் பாண்டியர்கள் ஒடுங்கி இருந்தனர் பின்னர் கடுங்கோனால் பாண்டியர்கள் மீண்டும் அரசாட்சியைப் பிடித்த பின்னர் தங்களது உரிமையை நிலைநாட்டிக் கொள்ளவும், தாங்கள் நாடிழந்து கரந்துறைந்த வாழ்வை மறைத்துக் கொள்ளவும் இத்தகைய புகழுரைகளைத் தங்களது செப்பேடுகளில் பொறித்து வைத்தனர் என்றும் ஊகிக்கலாம்.

முற்கூறியபடி பாண்டிய மன்னர்கள் பல பட்டங்களைத் தரித்துக் கொண்டனர் முதலாம் வரகுணான பராந்தக நெடுஞ்சடையன் (768 - 815) தென்னவன், வானவன், செந்தமிழ்க்கோன், செம்பியன், கொங்கர் கோமான் முதலிய தமிழ்ப் பெயர்களையும், பாண்டிய நாதன், பண்டித வத்சலன், வீரபுரோகன் போன்ற வடமொழி விருதுகளையும்[22] பெற்றிருந்தார். இராசசிம்ம பாண்டியனோ (910 - 927) விகடவாடன், மந்திர கௌரவன், இராஜசிகாமணி, உலோக சிந்தாமணி ஆகிய பட்டங்களைச் சூட்டிக் கொண்டான். இப்பெயர்களில் சில நிலங்களுக்கும், நாட்டுப்பிரிவுகளுக்கும், ஆறுகளுக்கும், நாணயங்களுக்கும் இடப்பட்டிருந்தன அதிகாரிகளும் மனனர்களின் பெயர்களையோ, பட்டப் பெயர்களையோ தரித்துக் கொண்டிருந்ததைக் கல்வெட்டுக்களின் மூலம் அறியமுடிகிறது.

பராந்தக வளநாடு[23] திருவழுதி வளநாடு[24], மானவீரவள நாடு, அரிகேசரி நல்லூர்[25] போன்றவை பாண்டிய மன்னர்களின் பெயரால் நாடுகளுக்கும், ஊர்களுக்கும் சூட்டப்பட்ட பெயர்கள் ஆகும் வீரபாண்டியரின் அதிகாரியின் பெயர் சோளந்தக பிரம்மராயர்[26] இது மன்னரின் விருதுப்பெயர்களான சோழன் தலைகொண்ட [27] சோளந்தகன் [28] போன்றவற்றின் அடிப்படையில் அமைந்தது மற்றொரு அதிகாரியின் பெயர் பாண்டி மார்த்தாண்ட பல்லவரையன் [29] இப்பெயரும் வீரபாண்டிய னின் பெயர்களில் ஒன்றாகும்.[30] அவ்வவ் ஆட்சிக்காலங்களில் ஆளும் அரசர்களின் பட்டப் பெயர்களைச் சூடிக்கொள்வது அவர்களின் கீழ் பணிபுரியும் அதிகாரிகளின் வழக்கமாக இருந்தன.

பாண்டிய மன்னர்கள் சமயப்பொறை மிக்கவர்களாக இருந்தனர். முதலாம் வரகுணர் பரம வைணவன் என்று அழைக்கப்படுகிறார்[31] இரண்டாம் வரகுணரோ சிவபெருமானை உள்ளத்தில் இனிது நிறுத்தியவர்[32] இம்மன்னரது ஐவர்மலைக் கல்வெட்டு சாந்திவீரக் குரவர் என்ற சமணமுனிக்கு அளிக்கப்பட்ட கொடையைக் குறிப்பிடுகிறது மேலும் இவர் பார்சவ பட்டாரரையும் இயக்கி அவ்வைகளையும் புதுக்கிய செய்திகளையும் இக்கல்வெட்டு குறிப்பிடுகின்றது. கழுகுமலையிலுள்ள சமணப்பள்ளி இக்காலத்தில் தழைத்தோங்கியதை அங்குள்ள கல்வெட்டுக்கள் தெரிவிக்கின்றன [34] பாண்டியமன்னர்கள் அனைத்து சமயங்களையும் புரந்தனர் சமயப்பொறையை கடைபிடித்தனர். அது அரசாட்சியின் ஒரு அங்கம் என்று கருதினர்

பிற அரச குலத்தைப் போலவே மூத்த மகனே பட்டத்திற்கு உரியவனாக இருந்தாலும் சில சமயங்களில் இம்முறை பின்பற்றப்படவில்லை. ஸ்ரீ வல்லப பாண்டியனுக்கு மூன்று மனைவிகள்[35] மூத்த அரசியின் மகன் வரகுணன். இளையவளின் மகன் வேறொருவன் மூன்றாம் அரசியின் மகன் பராந்தகன் வீர நாராயணன் பட்டத்து அரசியான மூத்தவளின் மகன் வரகுணன் வயதில் சிறியவனாகவும் இளையவனின் மகன் வயதில் பெரியவனாகவும் இருந்திருக்கலாம் பட்டத்து அரசியின் மகனே மூடி சூடவேண்டும் என்று தந்தை ஸ்ரீவல்லபன் கருதி வரகுணனுக்கு முடி சூட்டினான் இதே போன்று இரண்டாம் வரகுணன் அவரது இளவல் பராந்தகன் வீரநாராயணன் பட்டத்திற்கு வந்தார் இது ஏனெனில் இரண்டாம் வரகுணனுக்கு மக்கள் இல்லாமையால் அவரது தம்பி முடிசூடினார் எனக் கருதலாம். இரண்டாம் வரகுணன் சோணாட்டை இழந்த பிறகு சிவ சிந்தையில் மூழ்கிக் காலத்தைக் கழிக்க தனது தம்பிக்கு பட்டம் சூட்டினார் என்றும் கருதலாம்[36]

மன்னர்கள் காட்சிக்கெளியவராகவும் மக்களின் வேண்டுகோளை செவிமடுத்து அதனை நிறைவேற்றுபவர்களாகவும் இருந்தனர். முதலாம் வரகுணனான பராந்தக நெடுஞ்சடையன்[37] ஆளுகையில் நற்சிங்கன் என்பான் தன் மூதாதையருக்கு பல்யாக சாலை முதுகுடுமிப் பெருவழுதி என்ற சங்க

கால பாண்டியன் அளித்த கிராமத்தை இடையில் புகுந்த களப்பிரர்கள் கவர்ந்து கொண்டதை தனக்கு திருப்பியளிக்குமாறு விண்ணப்பித்ததற்குப் பாண்டிய மன்னன் அவன் அளித்த ஆவணங்களைப் பரிசீலித்து அக்கிராமத்தை அவனுக்கே திருப்பியளித்தான் என்று கேள்விக்குடி செப்பேடு செப்புகிறது. தனது அமைச்சர்களின் வேண்டுகோளின்படியும், கொடையை வேண்டுபவரின் விண்ணப்பத்தின் பேரிலும் பாண்டிய மன்னர்கள் அந்தணர்களுக்கு நிலபுலன்கள் வழங்கியதை செப்பேடுகளில் காண்கிறோம்

முற்காலப் பாண்டியர் கல்வெட்டுகளில் அரசியர்கள், இளவரசர்கள், இளவரசிகள் குறித்து மிக அருகியே குறிப்பிடப்படுகிறார்கள் பெண்கள் குறித்தும் மிகவும் குறைவான அளவில் தான் கல்வெட்டில் கூறப்பட்டுள்ளன தில்லைத் தானம் கல்வெட்டில்[38] இரண்டாம் வரகுண பாண்டியன் திருநெத்தானம் கோயிலுக்கு தனது அரசியார் கையில் இருநூறு காசும் தனது இளவல் கோன் பராந்தகன் கையில் நூறு காசும் அளித்தாகக் கூறிக் கொள்கிறார் திருப்புடைமருதூர் கல்வெட்டில்[39] இராஜசிம்மனின் மகன் வீரபாண்டியன் குறிப்பிடப்படுகிறார் தளவாய்புரம் செப்பேட்டில் மன்னர் பராந்தக வீர நாராயணர் தனது தமையனார் வரகுணன் எப்போதும் சிவபெருமானை உள்ளத்திலினிது நிறுவி ஆள்பவர் என்கிறார் சோழர் கல்வெட்டுகளோடு ஒப்பிடுகையில் பாண்டிய நாட்டு மகளீரோ அல்லது அரசு மகளீரோ கொடையாளிகளாகக் கல்வெட்டுகளில் அதிக அளவில் குறிப்பிடப்படவில்லை ஆனால் திருப்பரங்குன்றம் கல்வெட்டோ[40] அமைச்சர் சாத்தன் கணபதியின் மனைவியாரான நக்கன் கொற்றி என்பார், துர்க்கை கோயிலும், ஜேஷ்டை கோயிலும் எடுப்பித்ததாகக் கூறுகிறது முதலாம் பராந்தக சோழரின் திருவேய்ந்திபுரம் கல்வெட்டு[41] பாண்டிய மன்னர் இராஜசிம்மரின் மகளாரான வானவன் மாதேவி அளித்த கொடையைக் கூறுகின்றது. பாண்டிய நாட்டில் பெண்கள் கோயிலுக்குக் கொடையாளி களாகக் கல்வெட்டில் அதிக அளவில் பதிவு செய்யப்படாததற்கு காரணம் இங்கு பெண்கள் பொது வாழ்வில் அதிகமாக ஈடுபடாததும் காரணமாக இருக்கலாம்

## ஆட்சி முறை

சங்க காலத்தில் அரசனுக்கு ஆட்சியில் உதவி புரிய மேதைகளும், சான்றோர்களும் இருந்தனர். அரசன் நீதி தவறும்போது இடித்துரைத்து அவனை நல்வழிப்படுத்த புலவர்கள் இருந்தனர் பல்லவர் காலத்தில் அமைச்சர் இருந்தனர் என்பதனை செப்பேடுகள் தெரிவிக்கின்றன[42] முதலாம் மகேந்திரவர்மன் ஆட்சியில் அமைச்சர்கள் இருந்தனர் என்று சேக்கிழார் குறிப்பிடுகின்றார்[43] முற்காலப் பாண்டிய அரசர்களிடத்தில் பல்வேறு அதிகாரிகள் பணி புரிந்ததை அவர்களது கல்வெட்டுகளிலிருந்தும் செப்பேடுகளிலிருந்தும் அறியலாம்.

முதலாம் வரகுணனான பராந்தக நெடுஞ்சடையன் (768-815) அரசவையில் கரவந்தபுரத்தைச் சார்ந்த வைத்திய குலத்தினர் பலர் உத்திரமந்திரிகளாகி இருந்தனர்[44] இம்மன்னரின் திருப்பரங்குன்றம் கல்வெட்டு[45] இவரின் மகாசாமந்தனும் (முதலமைச்சர்) கரவந்தபுரத்தைச் சார்ந்தவனுமான சாத்தன் கணபதியான பாண்டி அமிர்தமங்கலவரையனைக் குறிப்பிடுகிறது. இவர் வைத்ய முக்ய என்று அழைக்கப்படுகிறார் இக்குடும்பதைச் சார்ந்த மற்றொருவர் மாறங்காரி இவர் ஆணத்தியாக வேள்விக்குடிச் செப்பேட்டில் குறிப்பிடப்படுகின்றார். இவர் மூவேந்த மங்கலப் பேரரையன் என்ற பட்டத்தைப் பெற்றுள்ளார் இவருக்குப் பிறகு இவரது பதவி பெற்ற மாறன் எயினன், உத்திரமந்திரி பதவி அடைந்து பாண்டி மங்கல விசையரையன் என்ற பட்டம் பெற்றுள்ளார் இதே குடும்பத்தைச் சார்ந்த மற்றொருவர் தீராதரன் மூர்த்தி எயினன். இவர் வேலங்குடி செப்பேட்டின்[46] ஆக்ஞப்தி மற்றும் அரசின் மகாசாமந்துனுமாவார். இவர் வீரமங்கலப் பேரரையன் என்ற விருது பூண்டுள்ளார்.

இவ்வாறு கரவந்தபுரத்தைச் சார்ந்த ஒரே குடும்பத்தினர் உயர் பதவிகளிலிருப்பது குறிப்பிடத்தக்கது. இவர்கள் தங்களது ஊரில் செல்வாக்கு மிக்க கல்விமான்களாகவும், பெரிய நிலவுடைமையாளர்களாகவம் இருந்ததினால் இவர்களைப் பாண்டிய மன்னர்கள் தேர்ந்தெடுத்து அமைச்சர்களாக நியமித்திருக்கலாம்.

இவர்களின் விருதுப் பெயர்களில் பயின்று வரும் மங்கலம் என்ற பின்னொட்டையும், இவர்கள் வைத்ய குலத்தைச் சார்ந்தவர்கள் என்பதனையும் கருதி, இவர்கள் வைத்திய குலத்தின் ஒரு பிரிவான நாவிதர்கள் பிரிவைச் சார்ந்தவர்கள் என்று பேராசிரியர் சுப்பராயலு கருதுகிறார்.[47] விஜய நகர அரசர்களின் தெலுங்குக் கல்வெட்டுகளில் பயின்று வரும் மங்கலி என்ற தொடர் நாவிதரைக் குறிக்கும்[48] தமிழிலும் மங்கலன் என்ற சொல் நாவிதனைத்தான் குறிக்கும்[49] ஆனால் பாண்டிய அரசின் அமைச்சர்கள். இக்குலத்தைச் சார்ந்தவர்கள் தானா? என்று ஆராய்தல் ஏற்புடைததாம்.

மங்கலம் அல்லது மங்கலி என்ற சொல்லுக்கு அம்பட்டன் என்ற பொருள் இருந்தாலும் அந்தப் பொருளை வைத்துக் கொண்டு இந்த முடிவுக்கு வருதல் பொருத்தமன்று மற்ற காரணிகளையும் ஆராய வேண்டும் மங்கலம் என்ற சொற்றொடரும், மங்களம் என்ற சொற்றொடரும் ஒரே பொருளைத் தரக் கூடியன திராவிட மொழியில் 'ள' என்பது 'ல'வாக திரியும். இரண்டு தொடர்களுமே மங்களகரமானது, நன்மை, சுபம், செழுமை போன்ற பொருள்களைத் தரும் மங்கலம் என்பது நாவிதத் தொழிலைச் செய்பவர் என்ற பொருளில் தெலுங்கு பகுதிகளில் காகதீய - விஜயநகர காலக் கல்வெட்டுகளிலிருந்துதான் பெரும்பாலும் பெறப்படுகிறது[50] தொன்மையான வடமொழிச் சமயச் செய்யுள் ஒன்றில் மங்கலம் என்ற சொல் மேற்கூறிய பொருளிலேயே கையாளப்படுகிறது இதுபோன்றே சமண

சமயச் செய்யுள் ஒன்றில் மங்கலம் பகவான் வீரோ, மங்கலம் கௌதமோ கணி, மங்கலம் குந்த குந்தாத்வயா, ஜைன தர்மோஸ்து மங்கலம் என்று வருகிறது. இதிலும் மங்கலம் என்ற சொல் நன்மை, வளமை என்ற பொருளிலேயே கையாளப்படுகிறது[51] இரண்டாவதாக, முற்காலப் பாண்டியர் கல்வெட்டுகளிலும் இடைக்காலப் பாண்டியர் கல்வெட்டுகளிலும் நாவிதரைப் பற்றியோ, அவர்கள் செலுத்திய வரிகளைப் பற்றியோ எந்த செய்திகளும் காணப்படவில்லை. மேலும் இப்பெயர்கள் முதலாம் வரகுணன் காலத்திற்கு பின்பு வரையப்பட்ட கல்வெட்டுகளில் காணப்படவில்லை. எனவே மங்கலி அல்லது மங்கலன் என்ற சொல் நாவிதன் என்ற பொருள் பெற்றது பிற்காலத்தில்தான் என்பது தெளிவு

எனவே மங்கலம் என்ற சொல் நன்மை, வளமை போன்ற பொருளிலிலேயே வருவதாகக் கொள்ள முடியும் கருநாடகத்தில் சுமார் நூறு வருடங்களுக்கு முன் மருத்துவத் தொழில் புரியும் அந்தணர்களுக்கும் அவர்களது குடும்பத்தைச் சார்ந்த ஆண்களுக்கும் பண்டித் என்ற பட்டம் கொடுக்கப்பட்டது இங்கு குறிப்பிடத்தக்கது.[52]

பத்தாம் நூற்றாண்டில் நிலவிய பாண்டியரின் ஆட்சி முறையை அறிந்து கொள்ள சாலைகிராமம்[53] மற்றும் கள்ளுமடை கிராமங்களிலுள்ள வட்டெழுத்துக் கல்வெட்டுகள்[54] உதவி புரிகின்றன சாலைக்கிராமம் பரமக்குடி வட்டத்திலும் கள்ளுமடைத் திருச்சுழியல் வட்டத்திலும் உள்ளன. ஒவ்வொரு கிராமத்திலும் இரண்டிரண்டு கல்வெட்டுகள் உள்ளன.

சாலைக்கிராமம் கல்வெட்டு சடையன் மாறனின் இரண்டாமாண்டின் எதிராமாண்டு துவ்வூர் கூற்றத்து தேவதான - பிரம்மதேயமான சாளகிராமத்து அவையாருக்கு மன்னர் அனுப்பிய திருமுகத்தைக் கூறுகிறது இதன்படி கோநேரியின்மை கொண்டான் என்று துவங்கும் இக்கல்வெட்டானது மன்னரது ஆணையை உள்ளூர் அவையாருக்குத் தெரிவிக்கின்றது முன்பு சாளை கிராமத்து ஸ்ரீ வரகுண ஈஸ்வரத்து பெருமானடிகளுக்கு ஸ்ரீ வல்லபதேவர் இக்கிராமத்திலுள்ள கோயிலுக்கு சாளை கிராமத்தை தேவதானமாக அளித்து குழுவானை ஏரியால் நீர்பாசன வசதிகள் செய்து கொடுத்த ஏற்பாட்டை உறுதிபடுத்துகிறது இம்மன்னரின் தற்போதைய ஆணை

கோநேரின்மை கொண்டான் என்ற அரசனது ஆணையைத் தெரிவிக்கும் தொன்மையான கல்வெட்டு இது இந்த சடையன்மாறன் இராஜசிம்ம பாண்டியன் என்றும் இத்தொடர் முதன்முதலில் இக்கல்வெட்டில்தான் பயன்படுத்தப்பட்டுள்ளது எனவும், இக்கல்வெட்டைத் திறனாய்வு செய்த ஆசிரியர் குறிப்பிடுகின்றார் அரசனின் ஆணையை மற்றவர்களுக்குத் தெரிவிக்கப் பாண்டியர் ஆட்சியில் ஏற்படுத்தப்பட்ட ஓர் உத்தி என்று இதனைக் கருதலாம்

கள்ளுமடை என்ற கிராமத்திலுள்ள கல்வெட்டு முற்காலப் பாண்டிய ஆட்சி வரலாற்றில் ஒரு திருப்புமுனையாகும் பத்தாம் நூற்றாண்டைச் சார்ந்த இவ்வட்டெழுத்துக் கல்வெட்டு சோழன் தலைகொண்ட வீரபாண்டியனுக்கு பின்பு ஆட்சி ஏற்ற சடையன் மாறன் என்ற பாண்டிய மன்னரின் கல்வெட்டு இவர் வீரபாண்டியரின் மகன் என்றும் இவர் சடையன் மாறன் விக்கிரம பாண்டியன் என்றும் நா சேதுராமன் கருதுகிறார்[55] இக்கல்வெட்டும் கோநேரின்மை கொண்டான் என்றே துவங்குகிறது. பாண்டிய நாட்டில் அரசாணை அதிகாரிகளால் எவ்வாறு நிறைவேற்றப்பட்டது என்பதனை இக்கல்வெட்டு விளக்குகிறது

இவ்வாணையை வெளியிட்ட மன்னன் சடையன் மாறன் இராசசிங்கக் குளக்கிழ் நாட்டின்கண் அமைந்துள்ள மங்கலபுரத்து அரண்மனையில் தங்கியிருந்தபோது இவ்வாணையை வழங்கியுள்ளான் கேரள சிங்க முத்தரையன் என்ற அதிகாரி திருப்பாலையூர் தேவர்க்கு பருத்திக்குடி நாட்டு மேன்குளத்தில் தனது காணிப்பற்றிலுள்ள நிலத்தை காராண்மை, மீயாட்சி உள்ளடங்க கொடையாக அரசனது ஒப்புதலை தந்தமையைக் கூறுகிறது.

இவ்வதிகாரியின் விண்ணப்பத்தை பருத்திக்குடி நாட்டு பாப்பார சான்றோர்க்கும், பாற்குடிகளுக்கும், பிரம்மதேயக் கிழவருக்கும் தெரிவித்து ஆணை வழங்க வேண்டும் என்று அரசனுக்குத் தெரிவித்தவன் மேலெழுத்துச் செய்கின்ற பாண்டித் தான் வேளான் பட்டாரகன் இவ்வாணையை முன்னின்று நிறைவேற்றிய ஆணத்தியாக அரசனின் கருமம் ஆராய்கின்ற பிரம்மாதிராயன் உத்தம பாண்டியன் மற்றும் பாண்டி மார்த்தாண்ட மூவேந்த வேளானாயின பட்டன் வேங்கடவன் என்ற இரு அதிகாரிகள். இதற்கு காவலாக நின்றவன் உத்திர மந்திரியான நக்கன் கணவதி ஓலையெழுத்தாக தென்னவன் உத்திரமந்திரி சூளாமணிக் கிழவன் வாய்க் கேள்வியாக மூவேந்திர பல்லவரையானயின படாரஞ் சோலையும், சீகரணப் பண்டாரப் பொத்தகமாக விசைய பாண்டிய மூவேந்தவேளானும், கண்காணியாக தீரன் சிந்தாமணி பல்லவரையனாயின பல்லன் நக்கன் இவ்வாணையை சரி பார்த்து அனுப்பி வைத்த அதிகாரி நிரம்பூர் வேளான்.

ஒன்பதாம் நூற்றாண்டைச் சார்ந்த செப்பேடுகளான வேள்விகுடி, வேலங்குடி, தளவாய்புரம் செப்பேடுகள் நிலக்கொடைகளைப் பற்றியதே ஆயினும், பெருமளவு அதிகாரிகள் நிருவாகத்தில் பங்கேற்றதாகக் கூறவில்லை சாலை கிராமம் இரண்டாம் கல்வெட்டில் சோழர் தலை கொண்ட வீரபாண்டியர் திருப்பாலையூர் என்ற கிராமத்திலிருந்தபோது தான் அங்குள்ள இறைவனுக்கு கொடையளித்தார் கள்ளுமடைக் கல்வெட்டிலோ அதிகாரி கேரள சிங்க முத்தரையர் இதே கோயிலுக்கு தனது காணிப்பற்று நிலத்தை அளிக்க அவர் மகன் சடையன் மாறனின் அநுமதியைப் பெற்றார் இக்கிராமமும் இதன் கோயிலும் இக்காலத்தில் புகழ் வாய்ந்ததாக இருத்தல் வேண்டும்

சோழர் தலை கொண்ட வீரபாண்டியரின் அம்பாசமுத்திரம் கல்வெட்டு[56] இம்மன்னரின் பன்னிரண்டாம் ஆட்சியாண்டில் இளங்கோய்க்குடி திருப்போத்துடைய படாரர்க்கு பத்து வேலி நிலம் காராண்மை, மீயாட்சி உள்ளடங்க அளித்ததற்கான அரசாணை வழங்கியதை இருபதாம் ஆட்சியாண்டில் கல்லில் வெட்டி வைத்ததை கூறுகிறது. இக்கல்வெட்டு சிதைந்துள்ள பல செய்திகளை அறிய முடியவில்லை இந்த அரசு நிலக்கொடையை பதிவு செய்ய பல அதிகாரிகள் இடம் பெற்றுள்ளனர் அவர்கள் எங்கருமம், ஆராய்ச்சி மேலெழுத்து, எவி முதல், ஓலை எழுத்து, வாய்க்கேழ்வி, பண்டாரப் பொத்தகம், அதிகாரம் செய்கிற - போன்ற அதிகாரிகள் பலர் இடம் பெற்றுள்ளார்கள்

பாண்டிய மன்னர் இராஜசிம்மன் (910-27) மற்றும் அவரது மகன் வீரபாண்டியன் காலத்திலேயும் பல மாறுதல்கள் ஆட்சித் துறையில் ஏற்பட்டன பல புதிய பதவிகள் உருவாக்கப்பட்டன அதிகாரிகள் நியமிக்கப்பட்டனர். அவர்கள் பின்வருமாறு:

மேலெழுத்து என்பவர் மன்னன் அருகிலிருந்து அவன் கூறுவதை ஓலையில் எழுதுபவர் கருமம் ஆராய்பவர் அரசனது அருகிலிருந்து அவன் அனுப்பும் இடங்களுக்குச் சென்று அரசனது சார்பாக அவனது பணிகளைச் செய்யும் அதிகாரி ஓலை எழுத்து என்பார் அரசர் வழங்கிய ஓலையில் எழுதுபவர் கண்காணி என்ற அதிகாரியின் பணி மன்னரது ஆணையை சரிபார்த்து அதனை கண்காணிப்பவர் காவல் என்பார் மன்னரது ஆணைக்குத் தீங்கு நேராதபடி பிழை நேராதபடி காவல் பணி செய்பவர் ஏவி முதல் என்ற அதிகாரி மற்ற சிறு பணியாட்களை ஏவும் பணி செய்பவர்

பாப்பார சான்றோர் கொடையாக அளிக்கப்பட்ட நிலத்தை அளந்து காணும் பணி புரிபவர்கள் இவர்கள் கிராமத்தில் செல்வாக்கு மிக்கவர்கள் இவர்கள் வேதமும், சாத்திரமும் அறிந்தவர்கள் நிலவுடைமையாளர்கள் இவர்களது இசைவும் நிலபரிவத்தனைக்குத் தேவையானது என்று கருதலாம்

சாளைகிராமம் கல்வெட்டு சீவல்லவ தேவ பாண்டியர் திருப்பாலை யூரிலுள்ள வரகுண ஈஸ்வரத்து பெருமானடிகளுக்கு அளித்த நிலக் கொடையை அவருக்குப் பின் வந்த இராஜசிம்ம பாண்டியர் உறுதி செய்ததைக் காட்டுகிறது இது முற்காலத் தமிழகத்தின் ஆட்சிமுறைக்கு ஓர் எடுத்துக்காட்டு

மேற்கண்டபடி பாண்டிய அரசில் பல அதிகாரிகளும் பணி மக்களும் நியமிக்கப் பட்டிருந்தனர் ஒன்பதாம் - பத்தாம் நூற்றாண்டுகளில் நிலத்தின் பயன்பாடு பன்மடங்கு அதிகரித்தன பக்தி இயக்கத்தின் காரணமாக ஏராளமான கோயில்கள் கட்டப்பட்டன கோயில்களில் பல நிவந்தங்களுக்கு வழி வகுக்கப்பட்டன மக்கட் தொகை பெருக்கம், வேளாண்மையில் ஏற்பட்ட மாறுதல்கள் போன்றவை நிலப் பயன்பாட்டை அதிகரிக்கச்

செய்தன. இது ஆட்சி முறையிலும் தாக்கத்தை உண்டு பண்ணியது. இதன் தாக்கம் அரசவையிலும், உள்ளூர் ஆட்சி முறைகளிலும் தெரிந்தது அவை அங்கத்தினருக்கும், மன்றாடுபவருக்கும் நிலவுடைமை தகுதி வலியுறுத்தப்பட்டது. நில பரிவர்த்தனைகளையும், நில வரி கணக்குகளையும் முறைப்படுத்தி, வரிகளை வசூலித்து, புர வரி கணக்குகளை நிருவகிக்க அதிகாரிகள் தேவைப்பட்டனர் இதனால் பல அதிகாரிகள் நியமிக்கப்பட்டு பணியாற்றி வந்ததை கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன ஆனால் சோனாட்டில் இவ்வதிகாரிகள் பின்பு அதாவது உத்தம சோழர் காலத்தில்தான் (971-987) நியமிக்கப்பட்டிருந்தனர்[57] ஆனால் பாண்டியர்கள் பொ.ஆ. ஐந்தாம் நூற்றாண்டு முதல் தங்களது நாட்டைத் தொடர்ந்து ஆண்டு வந்ததினால் அவர்களுக்குப் போதிய அவகாசமும் வாய்ப்பும் கிடைத்தன தங்களது அரசை சோழர்கள் ஒன்பதாம் நூற்றாண்டில் விரிவுபடுத்தும்போது பற்பல இடர்பாடுகளை சந்திக்க நேரிட்டது. பல போர்களிலும், அரண்மனை சூழ்ச்சி, குழப்பங்களிலும் சிக்கினர் அதனால் ஆட்சி முறையை சீர்படுத்த அவகாசம் கிடைக்காமல் போயிற்று பின்னர் ஓரளவுக்கு தங்களது ஆட்சியை நிலைநாட்டிய பிறகு நிலவருவாய்த் துறையில் பல பதவிகளை உருவாக்கினர். இதற்கு பாண்டியரின் ஆட்சி முறை முன்னுதாரணமாக அமைந்தது எனலாம்

## பிரம்மதேயங்கள்

பாண்டிய நாட்டில் அந்தணர் இருக்கைகளான பிரம்மதேயம் வரலாற்றுக் காலத்திலிருந்து உள்ளன பொ ஆ ஐந்தாம் நூற்றாண்டைச் சார்ந்த பூலாங்குறிச்சி கல்வெட்டு பிரம்மதாயத்தைக் குறிப்பிடுகின்றது.[58] இரண்டாம் வரகுண பாண்டியரின் திருச்செந்தூர் கல்வெட்டு கடுங்கோன் மங்கலம் என்ற பிரம்மதேயத்தைக் குறிப்பிடுகின்றது[59] இது ஆறாம் நூற்றாண்டில் களப்பிரர்களை வென்று மதுரையில் பாண்டியராட்சியை நிறுவிய கடுங்கோன் பாண்டியன் உருவாக்கியிருக்க வேண்டும் என்று ஊகிக்கலாம் அல்லது அவர் காலத்தில் அவர் பெயரில் அதிகாரிகள் ஏற்படுத்தியிருக்கலாம். சேந்தனின் வைகையாற்றுக் கல்வெட்டு[60] பலஅக்கிரகாரங்களை அரசர் நிர்மாணித்தவர் என்கிறது பாண்டிய நாட்டிலும் தொன்று தொட்டு பிரம்மதேயங்கள் இருந்தன. ஆனால் சோழ நாட்டைப் போல் பிரம்ம தேயங்கள் அடர்த்தியாக உருவாக்கப்படவில்லை. ஏனெனில் சோழ நாட்டைப் போல் பாண்டிய நாடு அவ்வளவு வளமானது அல்ல. மேலும் பகை மன்னர்களிடம் ஓயாமல் போரிட்டுக் கொண்டிருந்த பாண்டிய மன்னர்கள் பிரம்மதேயம் உருவாக்குவதில் அவ்வளவாக கவனம் செலுத்தவில்லை எனலாம். பல்லவ - சோழ நாட்டைப் போன்று அந்தணர்களும் மிகுதியாக பாண்டிய நாட்டில் வசிக்கவில்லை என்று ஊகிக்கலாம்[61] ஒன்பதாம் - பத்தாம் நூற்றாண்டுகளில் பாண்டிய நாட்டு செல்வந்தர்கள் சோழ நாட்டுக் கோயில்களுக்கு கொடைகள்

அளித்துள்ளதை கல்வெட்டுகள் காட்டுகின்றன[62] இதனால் பாண்டிய நாட்டில் இக்காலத்தில் கோயில்கள் சோழ நாட்டிலிருந்தது போல் மிகுதியாக இல்லை என்று கருதுவதும் தவறாகாது[63]

பாண்டிய நாட்டைப் பொறுத்தவரை மன்னன் மாறவர்மன் அரிகேசரி (624-674) அந்தணருக்கு நேரடியாக அளித்துள்ள நிலக்கொடையைப் பதிவு செய்யும் இளையான்புத்தூர் செப்பேடே முதல் சான்று[64] என்று கருதலாம். பாண்டிய மன்னர் சோழ நாட்டைச் சார்ந்த நாராயணபட்ட சோமாஜியாருக்கு பிரம்மதேயமாக ஊர் ஒன்றை வழங்கினார் இவ்வாறு ஒருவருக்கே அளிக்கப்பட்டு அவர் அதனைத் துய்ப்பது ஏக போக பிரம்மதேயம் ஆனால் ஒருவரே எவ்வாறு பிரம்மதேயத்தை நிருவகித்தார் என்பது தெரியவில்லை. நாளடைவில் இவரது வழித்தோன்றல்கள் பிரம்மதேயத்தை உருவாக்கி அதன் ஆளுகைக்குத் தேவையான வாரியங்களையோ அல்லது வேறு ஏதாவது ஆட்சிக் குழுவையோ தங்களுக்குள் ஏற்படுத்திக் கொண்டிருக்கலாம் ஆனால் உருவாக்கும் முறை சோழர், பல்லவர் பிரம்மதேயங்களைப் போன்றே உள்ளன ஒருவருக்கு நிலமோ அல்லது கிராமமோ பிரம்மதேயமாக அளிக்க வேண்டினால் அமைச்சரோ அல்லது அதிகாரியோ அல்லது கொடையைப் பெற விரும்பும் அந்தணரோ அரசனுக்கு வேண்டுகோள் விடுப்பர் இராஜசிம்ம பாண்டியனிடத்தில் நற்செய்கைப்புத்தூர் என்ற கிராமத்தைப் பராந்தகன் என்ற அந்தணனுக்கு அளிக்கும்படி விண்ணப்பம் செய்தவன் சோழ நாட்டுப் புள்ளமங்கலத்து சடையபிரான் பட்ட சோமயாஜி என்பவர்[65] அரசனது அதிகாரிகள் அரசரது ஆணையைக் கேட்டு ஓலையில் எழுதி, ஒப்பிட்டு, சரி பார்த்துப் பின்னர் அளிக்கப்பட்ட நிலம் அல்லது கிராமம் அமைந்துள்ள நாட்டு அதிகாரிகளுக்குத் தெரிவிப்பர் தளவாய்ப்புரம் செப்பேட்டில் ஆசி நாட்டு நாட்டாரும் தேச்சுர நாட்டு நாட்டாரும் கூடியிருந்து எல்லை காட்டிப் பிடி சூழ்ந்த எல்லையாக கொடையளித்த நிலம் குறிக்கப்பட்டுள்ளது அதாவது அளிக்கப்பட்ட நிலத்தைப் பெண் யானை மீது அதிகாரிகள் அமர்ந்து கொண்டு வலம் வருவர் ஏனெனில் அளிக்கப்பட்ட நிலங்கள் கரடுமுரடாக மேடு பள்ளத்துடன் இருக்கும் அதனைச் சுற்றி வந்து எல்லைக் கல் நாட்ட யானை மீது வருவதுதான் உகந்ததாக இருக்கும் இரண்டாவதாக யானை மீது வலம் வருவதனால் அந்நிலம் கொடையாக அளிக்கப்பட்டு விட்டது என்பதனை எல்லோரும் அறியவும் வகை செய்யப்பட்டது இதனை தளவாய்புரம் செப்பேடு சோமாசிக்குறிச்சியையும், திருமங்கலத்தையும் உடன் சேர பெண் யானையைக் கொண்டு சூழ்வித்து உலகறியக் கொடுத்தருளினான் என்கிறது இவ்வாறு அளிக்கப்பட்ட நிலத்தின் எல்லையை வலம் வருபவர்கள் யானைப் படைத் தலைவர்களும் அவர்களின் கீழ் பணிபுரியும் மற்ற அதிகாரிகளும் ஆவார்கள் என்பதனையும் சான்றுகள் சுட்டுகின்றன

பிரம்மதேயத்து அவை நிகழ்ச்சிகளில் பங்கேற்க சில நிபந்தனைகளும் விதிக்கப்பட்டிருந்தன இதனை மாறன் சடையனின் மானூர் கல்வெட்டு[66] தெரிவிக்கின்றது அவையில் பங்கேற்பவர்களுக்கு நல்ல ஒழுக்கமும் மந்திர பிராமண அறிவும், நிலப் பங்கும் இருக்க வேண்டும் என்று கூறுகிறது இந்நிலத்தை அன்பளிப்பாகவோ, வரதட்சணையாகவோ பெற்றிருந்தாலும் நன்நடத்தை உடையவராகவும், மந்திர பிராமணம் அறிந்தவராயும் இருத்தல் வேண்டும் பிரம்மதேய கிராமங்களிலுள்ள அவைகளில் அங்குள்ள அனைத்து அந்தணர்களும் உறுப்பினர்களாக இருந்தாலும் நிலவுடைமையும், வேத அறிவும் அவை நிகழ்ச்சிகளில் பங்கேற்க விழைபவர்களுக்கு வலியுறுத்தப்பட்டன ஏனெனில் பிரம்மதேயம் உருவாக்குங்கால் நிலப்பங்கு பெற்ற வேத அந்தணர்களின் வழித்தோன்றல்களுக்கு முக்கியத்துவம் அளித்து ஏனையவர்களை தவிர்க்கவே இவ்வேறுபாடு செய்யப்பட்டது என்று கருதலாம். இக்கொள்கை எல்லா பிரம்மதேயத்து அவை உறுப்பினர்களுக்கும் பொருந்தும் என்றும் துணியலாம்

ஒரு பிரம்மதேயம் உருவாக்குகையில் பல விளைவுகளும் நிகழ்ந்துள்ளன என்பதனைப் பாண்டியர் செப்பேடுகள் காட்டுகின்றன இளையான்புத்தூர் செப்பேடு[67] சோழ நாட்டு அந்தணர் நாராயணபட்ட சோமயாஜியார்க்கு பாண்டிய நாட்டில் ஆசி நாடு என்ற நாட்டுப் பிரிவில் இருந்த ஊர் ஒன்றை பிரம்மதேயமாக வழங்கினர் இந்நிலமானது முன்னர், ஆசி நாட்டில் ஆதிக்கம் செலுத்தி வந்த கம்பலை என்ற மறக்குடித் தலைவனை வென்று அவனுக்குரிய நிலத்தை அரசு உடைமையாக்கி அதனை விளைச்சலுக்கு கொண்டு வராமல் சிறிது காலம் காடாகவே வைத்திருந்து, பின்னர் அதனை மன்னர் காராண்மை, மீயாட்சி உரிமைகளோடு வழங்கினார் என்கிறது

பராந்தக நெடுஞ்சடையனின் வேள்விக்குடி செப்பேடு[68] பல்யாக சாலை முதுகுடுமிப் பெருவழுதி என்ற சங்க காலத்துப் பாண்டியன் கொற்கைக்கிழான் என்பவருக்கு வேள்விகள் இயற்றக் கொடையாக வேள்விக்குடி என்ற கிராமத்தை அளித்தார் கொடையாகப் பெற்ற ஊரை கொற்கைக்கிழான் வழிவந்தோர் நீண்ட காலம் அனுபவித்து வந்தனர் பிறகு களப்பிரர் என்னும் கலியரசன் பாண்டிய நாட்டைக் கைப்பற்றி அக்கொடையை பறிமுதல் செய்து விட்டான் பின்னர் கடுங்கோன், களப்பிரரை வென்று பாண்டியராட்சியை நிறுவினார் இதன் பின்னர் ஏழாவது அரசரான பராந்தகன் நெடுஞ்சடையன் ஆட்சியில் முன்பு கொடையைப் பெற்ற கொற்கைக்கிழான் வழித் தோன்றலான நற்சிங்கன் களப்பிரரால் கவரப்பட்ட கிராமத்தைக் கேட்க மன்னனும் அவன் அளித்த ஆதாரங்களைப் பரிசீலித்து அதே கிராமத்தைத் திரும்பவும் வழங்க உத்தரவிட்டான்.

இதேபோன்று பராந்தக வீரநாராயணரின் தளவாய்புரம் செப்பேடும்[69] கூறுகிறது ஆசி நாட்டிலுள்ள பிரம்மதேயமான திருமங்கலம் என்ற காடுகள் நிறைந்த கிராமத்தை மன்னர் கடுங்கோன் பன்னிரண்டு அந்தணர்களுக்கு ஈந்தான் மற்றும் கழுதூரில் உயிர் நீத்த பாண்டியன் ஒருவன் சோமாசிக்குறிச்சி என்ற ஊரைக் காடக சோமாசியார் என்ற அந்தணருக்கு ஏக போகமாக அளித்தான் பின்னர் இவ்விரண்டு ஊர்களின் சாசனம் பகைக் கேட்டால் தொலைந்து போயிற்று சோமாசிக் குறிச்சியின் செழிப்பான நிலத்தை கடற்றிருக்கைக் கிழவன் பெரிய நான்கு எல்லையாக அமைத்துக் கொண்டு, மற்றதை மதுரதரநல்லூரென்று பெயரிட்டுக் குடிநிலமாகச் செய்தான். அந்நிலமும் மற்ற வளமான நிலத்தையும் முன்பு இருந்தது போன்றே சோமாசிக் குறிச்சி என்று ஒரே கிராமமாக்கி அதனை இறையிலி நிலமாகச் செய்து தனக்கு அளித்து அதற்கு சாசனமும் எழுதித் தரவேண்டும் என்று திருமங்கலத்தில் வாழும் அந்தணனாகிய நாராயணன் கேசவன் மன்னனிடத்தில் விண்ணப்பிக்கவும், மன்னனும் அதற்கு ஒப்புதலளித்தார்

ஒரு கிராமத்தையோ அல்லது நிலத்தையோ அந்தணர்களுக்கு அளிக்குங்கால் அதில் வாழ்ந்து வரும் குடிமக்களும் மற்றும் முன்பு உழுது பயிர் செய்து கொண்டிருந்த குடிமக்களும் பாதிக்கப்பட்டனர் இது பொருளாதார - சமூக பிரச்சனைகளுக்கு வழிவகுத்தது இவை பயிர் நிலங்களாகவும் இருந்ததனால் அங்கு பன்னெடுங்காலமாக வசித்து, உழவு செய்து அந்தணர்களுக்கு அளித்தது குடிகளின் வாழ்வாதாரத்தை பாதித்தது மேலும் இக்கொடைகளைப் பெற்ற அந்தணர்கள் வெளியிலிருந்து வந்தவர்கள் இளையாத்தான்குடி செப்பேடு[70] சோழ நாட்டைச் சார்ந்த நாராயணபட்ட சோமயாஜியாருக்கும், வேலங்குடி செப்பேட்டில் நெடுந்தொலைவிலுள்ள மகத நாட்டைச் சார்ந்த ஸுபூ$_3$மிச்ர பட்டருக்கும் அளித்தது மண்ணின் மைந்தர்களான மறக்குடிகளுக்கு சினமூட்டியது நாராயண பட்டரும், ஸுபூ$_3$மிச்ர பட்டரும் அளிக்கப்பட்ட நிலங்களை எவ்வாறு உழுது பயிரிட்டார்கள் என்று தெரியவில்லை தளவாய்புரம் செப்பேட்டில் அந்தணர்களுக்கு அளித்த நிலத்தை கடற்றிருக்கை கிழவன் கைப்பற்றி விளை நிலமாக மாற்றியுள்ளதை, அவனிடத்தில் பறிமுதல் செய்து நாராயணங்கேசவனுக்கு அளித்ததும், வேளாண்மை செய்து கொண்டிருந்த நிலத்தை அரசாங்கமே பிடுங்கி அதனைப் பயிரிடாமல் காடாய் வைத்திருந்து பின்னர் அதனை நாராயணபட்ட சோமாஜியாருக்கு அளித்ததும் பாண்டிய நாட்டின் பொருளாதாரப் பின்னடைவுகளே நிலமிழந்த மறக்குடிகளுக்கோ, அங்கு வேளாண்மை செய்து கொண்டிருந்த உழு குடிகளுக்கோ இழப்பீடாக எதுவும் பாண்டிய அரசு அளித்ததாகத் தெரியவில்லை

வேள்விக்குடி செப்பேட்டிலும்[71] பல்யாகசாலை முதுகுடுமிய பெருவழுதி மறவர்களின் விளை நிலத்தை வேள்வி இயற்றுவதற்காக கொற்கைக் கிழானுக்கு அளித்திருத்தல் வேண்டும் பின்னர் வந்த களப்பிரரிடத்தில்

*நிலமிழந்த வேளாண் குடிகள் முறையிட்டு அதனைத் திரும்பவும் பெற்று வேளாண்மை செய்திருக்க வேண்டும் முதுகுடுமிப்பெருவழுதியிடம் பெற்ற நிலத்தின் தன்மையைப் பற்றி வேள்விக்குடி செப்பேடு எதுவும் குறிப்பிடவில்லை பின்னர் பல்லாண்டுகள் கழித்து நற்சிங்கனுக்கு அதனை திருப்பியளிக்கும்போது அந்நிலத்தின் தரத்தின் பற்றியும் எந்த தகவலுமில்லை சுருங்கக் கூறின் வளமை அருகியிருக்கும் பாண்டிய நாட்டிலுள்ள செழுமையான நிலங்களைப் பல காலமாக உழுது வந்த மறக்குடிகளை விலக்கிவிட்டு எங்கிருந்தோ வந்த அந்தணர்களுக்கு காராண்மை, மீயாட்சி உள்ளடங்க ஏக போக பிரம்மதேயங்களாகவும் பெரும்பாலும் இறையிலியாகவும் அளித்ததை மறக்குடிகள் எதிர்த்தமை விந்தையல்ல.*[72] *இம்மறவர்கள் தனிப்பட்ட அந்தணர்கள் துய்த்துக் கொண்டிருந்த ஏகபோக பிரம்மதேயங்களை மட்டும் எதிர்த்தனர் ஏனெனில் தனிப்பட்ட அந்தணருக்கு இவ்வளவு நில புலன்கள் எதற்கு என்று அதனால் இதனை எதிர்த்திருக்கலாம் நிலத்தை இழந்த அந்தணர்களால் மறக்குடி மக்களை எதிர்த்து நிற்க முடியவில்லை எனவே அவர்கள் அரசனின் உதவியை நாடினர் பிரம்மதேயத்தை உருவாக்குவதும், காப்பாற்றுவதும் அரசனின் கடமைகள் என்று செப்பேடுகள் கூறுகின்றன*[73]

## அடிக்குறிப்புகள்

1. தி.வை. சதாசிவ பண்டாரத்தார், *பாண்டியர் வரலாறு*
2. CII. Vol I, pa. 66-70
3. கல்வெட்டு ஆண்டறிக்கைகள் 1905–1998
   கல்வெட்டு இதழ்கள்
   ஆவணம் இதழ்கள்
   வரலாறு இதழ்கள்
   *தென்னிந்தியக் கல்வெட்டுகள் தொகுதிகள்* (இனி தெ.க.)
4. *Travancore Archacological Series*
5. தெ.க. 23, எண்கள் 600–623
6. Y Subbavayalu, Some reflections on Pandianandalan
7. தெ. க. 5, 6, 8, 14
   K.G Krishnan, *Inscriptions of the Early Pandyas* (From 300 B C. 984AD)
   *Journal of the Epigraphical Society of India*, 15, pa 92
8. தெ. க. 14, எண் 16
   *Epigraphia Indica* 9, பக். 84–93 (இனி E.I.)
9. தெ. க. 14 எண் 44
10. E.I 22, பக். 5–11

11. இரண்டாம் வரகுணரின் சிவ கொடைகள் (அச்சில் வராதது)

12. கே.ஜி. கிருஷ்ணன், வரகுணனும் வரதவூராரும், வெள்ளைச் சாமி நாடார் உயர்நிலைப் பள்ளி ஆண்டு மலர் (1962)

13. E.I. 25, pa. 35-41

14. *பாண்டியர் செப்பேடுகள்,* பக். 181 (இனி பா.செ.)

15. தெ.கல். 14, எண்கள் 2, 3, 4

16. மேலது எண்கள் 12பி, 12, 14, 15, 21, 24

17. பா.செ. பக். 85

18. மேலது, பக். vii-ix

19. பா.செ.

20. E.I. 38, Pa. 27–32

21. பா.செ. பக். 136

22. மேலது, பக். 43, 45

23. தெ. க. 14, எண். 16ஏ

24. மேலது எண் 47

25. மேலது எண்கள் 52, 54

26. E.I. 25, பக். 41

27. தெ. க. 14, எண்கள் 91–96

28. E.I. 25, பக். 39

29. தெ. க. 14, எண் 93

30. மேலது

31. பா.செ. பக். 55

32. மேலது, பக். 93

33. தெ.க. 14, எண் 22

34. தெ.க. 5, எண்கள் 308–406

35. நா. சேதுராமனின் ஆய்வுக் கட்டுரைகள், பக். 61

36. மேலது, பக். 61–62

37. பா.செ. பக். 28–29

38. தெ.கல். 5, எண் 608

39. மேலது, 14, எண் 68

40. E.I. 36, பக். 114–116

41. கல்வெட்டு ஆண்டறிக்கை 1995–96, எண் 91

42. *பல்லவர் செப்பேடுகள் முப்பது*
R. Gopalan, History of the Pallavas of Kanchi, ப. 38

43. மா. இராசமாணிக்கனார், *தமிழக ஆட்சி*, பக். 51

44. தெ.க. 14, எண் 1

45. E.I. 36, பக். 114–116

46. பா.செ. பக். 69

47. Y Subbarayalu, *South India Under the Cholas*, pp. 49-53

48. Telugu dictionary by C P. Bram

49. Tamil Dictionary

50. தெ.க. 16, எண்கள் 135, 136

51. இந்த செய்திகளை தந்துவிய கன்னட கல்வெட்டாய்வாளர் திரு. ஜாகீர்தார் அவர்களுக்கு நன்றி.

52. இதேபோன்றே மகாராட்டிரம் மாநிலத்தில் மருத்துவத் தொழில் புரியும் அந்தணர்களுக்கு வைத்ய என்ற பட்டம் அளிக்கப்பட்டது.

53. E.I. 28, பக். 89–93

54. கல்வெட்டு ஆண்டறிக்கை 1978, எண் 291, வே. வேதாசலம், கள்ளுமடைக் கல்வெட்டுகள்

55. நா. சேதுராமன், *பாண்டியர் வரலாறு*, பக். 17–18

56. தெ.க. 14, எண் 75

57 P Shanmugham, Chola royal records a study, pp. 5-6

58. *ஆவணம்*, இதழ் 1, பக். 68

59. தெ.க. 14, பக். 17

60. E I. 38, பக். 28

61. இளையாத்தான்குடி செப்பேடு சோணாட்டைச் சார்ந்த நாராயணபட்ட சோமயாஜியாருக்கு அளிக்கப்பட்ட நிலக் கொடையைக் கூறுகிறது. வேலங்குடி செப்பேட்டில் மகத நாட்டைச் சார்ந்த அந்தணருக்கு அளிக்கப்பட்ட கிராமத்தைக் கூறுகின்றது. இதை வைத்துக் கொண்டு வேதத்தை நன்கு கற்றறிருந்த அந்தணர்கள் பாண்டிய நாட்டில் மிகவும் குறைவாகவே இருந்தனர் எனவும், அவர்களின் எண்ணிக்கையைப் பெருக்கவே, பாண்டிய மன்னர்கள் இத்தகைய நிலக் கொடைகளை அந்தணர்களுக்கு அளித்தனர் எனவும் ஊகிக்க வாய்ப்புண்டு.

62. தெ. க 17, எண்கள் 475, 522
மேலது 8, எண் 734
மேலது 22, எண் 314
கல்வெட்டு ஆண்டறிக்கை 1921, எண் 248 1943–44 எண் 252

63. பாண்டிய நாட்டில் சோணாட்டைப் போல் மிகுதியாகக் கோயில்கள் இல்லை. மதுரை, குற்றாலம், அம்பாசமுத்திரம், திருப்பரங்குன்றம், ஆனைமலை, திருப்பத்தூர், திருச்செந்தூர், திருநெல்வேலி, மானூர், விஜயநாரணம் போன்றவைகளே புகழ் வாய்ந்த தொன்மையான திருத்தலங்கள். இக்காலத்தில் எழுப்பப்பட்ட ஒரே பள்ளிப்படைக் கோயில் பள்ளிமடத்திலுள்ள சுந்தரபாண்டிய ஈஸ்வரம்; சோணாட்டு சிவன் கோயில்களைப் போன்று அன்றி பாடல் பெற்ற பாரம்பரியம் மிக்கக் கோயில்கள் பாண்டிய நாட்டில் சிலவே. பாண்டிய நாட்டில் பாடல் பெற்ற பதினான்கு திருக்கோயில்களில் ஒருசிலவற்றில் மட்டுமே கல்வெட்டுகள் உள்ளன.

64. *ஆவணம்* 18, பக். 1–15

65. பா.செ. பக். 143, 144

66. E.I. 22, பக். 7–11

67. *ஆவணம்* 18

68. பா.செ. பக். 8

69. மேலது, பக். 134

70. *ஆவணம்* 18

71. பா.செ. பக். 8

72. சோழ நாட்டில் இவ்வாறு பிரம்மதேயங்கள் உருவாக்கப்படுங்கால் நிலமிழந்த வெள்ளாளர்களிடமிருந்து எதிர்ப்பு இருந்ததாகத் தெரியவில்லை. ஏனெனில் வலிமையான கிராம ஆட்சியும், பலமும் வாய்ந்த சோழ அரசர்களிடம்

நிலமிழந்தவர்கள் எதிர்ப்பு தெரிவிக்கவும் விரும்பவில்லை. இயலவுமில்லை. ஆனால் வலிமையற்ற எப்போதும் மாற்று அரசர்களிடம் போரிட்டுக் கொண்டிருந்த பாண்டிய அரசின் நிலக் கொடைகளை வீர மறவர்கள் எதிர்த்தனர். மேலும் சோழ நாடு போன்று பாண்டிய நாடு வளமிக்கதன்று. அதனாலும் புதிதாக பிரம்மதேயங்கள் உருவாக்குவதற்கு நிலமிழந்த மண்ணின் மைந்தர்களிடமிருந்து பாண்டிய அரசுக்கு எதிர்ப்பு இருந்தது எனலாம்.

73. *ஆவணம்* 18, பக். 3

# 65. பிற்காலப் பாண்டியர் கோயில்கள்

வெ. வேதாசலம், மதுரை

*பாண்டியர் கோயில்களை, முற்காலப் பாண்டியர்காலக் கோயில்கள் (பொ.ஆ 575-985), இடைக்காலப் பாண்டியர்காலக் கோயில்கள் (பொ.ஆ. 985-பொ.ஆ 1190), பிற்காலப் பாண்டியர்காலக் கோயில்கள் (பொ.ஆ 1190-1371), திருநெல்வேலி, தென்காசிப் பாண்டியர்காலக் கோயில்கள் (பொ.ஆ. 1371-1650) என்று நான்கு கால கட்டங்களாகப் பகுத்து ஆய்வு செய்யலாம். பிற்காலப் பாண்டியப் பேரரசின் ஆட்சிப்பரப்பு தெற்கே கன்னியாகுமரி முதல் வடக்கே நெல்லூர் வரை பரவியிருந்தது. ஆனால் தொன்றுதொட்டு பாண்டியநாட்டின் ஆட்சிப்பரப்பாக விளங்கிவரும் புதுக்கோட்டைப் பகுதியில் ஓடும் வெள்ளாற்றிற்குத் தெற்கேயும், கன்னியாகுமரிக்கு வடக்கேயும் உள்ள நிலப்பரப்பில் காணப்படும் கோயில்களே இக்கட்டுரையில் ஆய்விற்கு எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளன*

*பாண்டியர்காலக் கோயில்கள் பற்றிய ஆய்வுகள் மிகக் குறைவாகவே நடைபெற்றுள்ளன[1] இதிலும் முற்காலப் பாண்டியர்காலக் கோயில் ஆய்வோடு ஒப்பிடும்போது பிற்காலப் பாண்டியர்காலக் கோயில் ஆய்வு மிக மிகப் பின்தங்கிய நிலையிலேயே உள்ளது பாண்டியநாட்டில் காணப்படும் கோயில்கள் குறித்து தனிநிலை ஆய்வுகள் நடைபெற்றுள்ளன இவற்றில் ஒரு சில தரமான ஆய்வுகள், நூலாக வெளிவந்துள்ளன[2] இடைக்கால மற்றும் பிற்காலப் பாண்டியரது கட்டுமானக் கோயில்கள் அனைத்தையும் அடையாளம் கண்டு அவற்றைத் தொகுத்தும் வகைப்படுத்தியும் அவற்றின் பண்புகளை எடுத்துக்கூறும் ஆய்வு முயற்சிகள் இதுவரை நடைபெற வில்லை ஆனால் மதுரைப் பல்கலைக்கழக கலை வரலாற்றுத்துறையில் டாக்டர் எஸ் கண்ணன் அம்பாசமுத்திரம் வட்டத்தில் காணப்படும் கட்டுமானக் கோயில்களை ஆய்வு செய்து முனைவர்பட்டம் பெற்றிருப்பது குறிப்பிடத்தக்கது பாண்டியநாட்டில் கோயில்களைக் களஆய்வு செய்யும் பணி கடினமாக இருப்பதால் ஆய்வாளர்கள் இதில் தீவிர முனைப்புக் காட்டவில்லை. பாண்டியரது வரலாறும் கலை வரலாற்றாய்வாளர்களுக்குச் சோழரது வரலாற்றைப் போன்று தெளிவாகத் தரப்படவில்லை இந்நிலையில் பிற்காலப் பாண்டியரது கட்டுமானக் கோயில் ஆய்வில் காணப்படும் தேக்க நிலையை ஓரளவு போக்கும் முறையில் இக்கட்டுரை எழுதப்பட்டுள்ளது கட்டடக்கலை, கல்வெட்டு இரண்டையும் அடிப்படையாகக் கொண்டு கள ஆய்வில் கண்ட முடிவுகளை இது தருகிறது*

---

கோவிலூர் ஆதினத் தலைவர் தவத்திரு நாச்சியப்பன் ஞான தேசிக சுவாமிகள் கோவிலூர் ஆண்டவர் பெயரில் நிறுவியுள்ள அறக்கட்டளைச் சொற்பொழிவு வரிசையில் 12ஆவது சொற்பொழிவு, நாள் 15-07-2012

பொ.ஆ.1190க்கும் பொ.ஆ 1371க்கும் இடைப்பட்ட காலத்தில் பாண்டிய நாட்டில் பிற்காலப் பாண்டியர் பலர் ஆட்சிபுரிந்துள்ளனர். அவர்களில் குறிப்பிடக்கத்தக்கவர்கள் முதலாம் சடையவர்மன் குலசேகரபாண்டியன் (பொ.ஆ.1190-1218) முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் (பொ.ஆ 1216-1244), இரண்டாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் (பொ.ஆ 1238-1255), இரண்டாம் மாறவர்மன் விக்கிரமபாண்டியன் (பொ.ஆ 1250-76) முதலாம் சடையவர்மன் சுந்தரபாண்டியன் (பொ ஆ. 1250-1285), முதலாம் சடையவர்மன் வீரபாண்டியன் (பொ.ஆ 1253-1283), முதலாம் மாறவர்மன் குலசேகரபாண்டியன் (பொ.ஆ. 1268-1318) முதலியோர் ஆவார்கள். இவர்களுக்குத் துணையாகப் பல பாண்டியர்கள் ஆங்காங்கே இருந்து ஆட்சி புரிந்துள்ளனர் இவர்களது காலத்தை அடிப்படையாக வைத்துப் பின்வரும் மூன்று காலகட்டங்களில் பிற்காலப் பாண்டியர் கோயில்களை அடக்கிக் கூறலாம்

1. முதல் காலகட்டம் - பொ.ஆ.1190-1250

2 இரண்டாம் காலகட்டம் - பொ.ஆ.1250-1300

3 மூன்றாம் காலகட்டம் - பொ.ஆ 1300-1371

மேற்கண்ட காலகட்டங்களில் முதல் காலகட்டத்திலேயே அதிகளவில் 103 கோயில்கள் எடுப்பிக்கப்பட்டுள்ளன இரண்டாம் காலகட்டத்தில் 51 கோயில்கள் எடுப்பிக்கப்பட்டுள்ளன மூன்றாம் காலகட்டத்தில் பாண்டியரது வீழ்ச்சியின் காரணமாக ஒருசில இடங்களிலேயே புதியதாகக் கோயில்கள் கட்டப்பட்டுள்ளன. பாண்டிய நாட்டில் முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் காலத்திலேயே அதிக அளவில் கோயில்கள் தோன்றியுள்ளன இம்மன்னன் சோழநாட்டின் மீது கண்ட வெற்றியில் குவித்த செல்வமே ஏராளமான கோயில்கள் பாண்டிய நாட்டில் தோன்றுவதற்குக் காரணமாக அமைந்தது மன்னர்கள், அதிகாரிகள், செல்வந்தர்கள், வணிகர்கள் என்று பலர் இக்காலத்தில் கோயில்களைக் கட்டியுள்ளனர்

பிற்காலப்பாண்டியர்காலக் கோயில் ஆய்விற்காகப் பாண்டிய நாட்டில் 135 ஊர்களில் காணப்படும் 156 கட்டுமானக் கோயில்கள் எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளன இவற்றைக் கீழ்க்கண்டவாறு பிரித்துக் கூறலாம்

1 முற்காலப் பாண்டியர் காலத்தில் எடுக்கப்பட்டுக் காலப்போக்கில் அழிவுபட்ட நிலையில் பிற்காலப்பாண்டியர் காலத்தில் முழுவதுமாகத் திருத்திக் கட்டப்பட்ட கோயில்கள்

2 பிற்காலப் பாண்டியர் காலத்தில் புதியதாக எடுக்கப்பட்ட கோயில்கள்

பிற்காலப்பாண்டியர் கோயில்கள் பாண்டியநாட்டில் விசயநகர, நாயக்கர் காலத்தில் திருப்பணியின்போது புதுப்பிக்கப்பட்ட நிலையில் அவற்றை அடையாளங் காண்பதில் கவனம் செலுத்த வேண்டியுள்ளது. சில

இடங்களில் பிற்காலப் பாண்டியர் கோயில்கள் முற்றிலுமாக அழிக்கப்பட்டுப் பிற்காலப் பாணியில் கோயில்கள் கட்டப்பட்டுள்ளன. அவ்விடங்களில் பிற்காலபாண்டியரது சிற்பங்கள், சிதைந்துபோன கட்டடப்பகுதிகள் மட்டும் எஞ்சியுள்ளன. இவற்றைக் கொண்டு அவ்விடங்களில் பிற்காலப்பாண்டியர் கோயில்கள் இருந்தன என்ற முடிவுக்கு வர முடிகிறது. பாண்டியரது கோயில்கள் சோழர்களது கோயில்களை மிகுந்த அழிவிற்கும் மாற்றத்திற்கும் உள்ளாக்கியுள்ளன. பிற்காலப் பாண்டியர் காலத்திற்குப் பின்னர் ஏற்பட்ட அரசியல், சமூக மாற்றங்களும் இதற்குக் காரணமாக அமைந்தன

பிற்காலப் பாண்டியர் கோயில்களை மற்றொரு முறையிலும் வகைப்படுத்தலாம்

1 முதலாவதாக அவை எடுக்கப்பட்ட காலத்தினைத் திட்டவட்டமாகத் தெரிவிக்கும் கல்வெட்டுகள் உள்ள கோயில்கள் என்று கூறலாம்

2 இரண்டாவதாக அவற்றின் கட்டடப்பணி, அவற்றில் காணப்படும் பழமையான கல்வெட்டுகளை அடிப்படையாக வைத்து அவை பிற்காலப் பாண்டியர்காலக் கலைப்பாணியில் உதித்தவை என்று வகைப்படுத்தலாம்

### கால வரையறையுடன் கூடிய கோயில்கள்

மதுரை மாவட்டத்தில் கருங்காலக்குடி, கீழடி, கள்ளங்காடு முதலிய இடங்களில் பிற்காலப்பாண்டியர் காலத்தில் எடுப்பிக்கப்பட்டதைத் தெரிவிக்கும் கல்வெட்டுகளுடன் கூடிய கோயில்கள் காணப்படுகின்றன திருச்சுனைக்கும் கருங்காலக்குடிக்கும் இடையில் முதலாம் சடையவர்மன் சுந்தரபாண்டியன் காலத்தில் பொ.ஆ 1264ல் அழகப்பெருமாள் விண்ணகரம் என்ற பெயரில் பெருமாள் கோயில் ஒன்று கட்டப்பட்டுள்ளது[3] தற்போது இக்கோயில் முத்தாயியம்மன் கோயிலாக மாறி வழிபாட்டில் உள்ளது மதுரைக்குக் கிழக்கே உள்ள கீழடி கிராமத்தில் முதலாம் மாறவர்மன் குலசேகர பாண்டியன் காலத்தில் பொ.ஆ 1291ல் முசுகுந்தீசுவரமுடையார் கோயில் என்ற பெயரில் சிவன்கோயில் ஒன்று தோற்றுவிக்கப்பட்டுள்ளது4 இக்கோயிலின் அதிட்டானத்திற்கு மேலேயுள்ள பகுதி முற்றிலுமாகப் புதுப்பிக்கப்பட்டுள்ளது கருங்காலக்குடிக்கு அருகிலுள்ள வஞ்சிநகரம் பகுதியிலுள்ள கள்ளங்காடு என்ற பகுதியில் (அதிகரம்) பொ.ஆ 1324ல் அகளங்க ஈஸ்வரமுடையார் கோயில் என்ற பெயரில் மாவலிவாணாதிராயர் அவனி நாராயணதேவர் என்னும் வழுதிநாராயணதேவரால் சிவன்கோயில் ஒன்று கட்டப்பட்டுள்ளது[5] இக்கோயில் தற்போது அதிட்டானத்துடன் மட்டும் காட்சியளிக்கிறது தேனி மாவட்டம் கம்பத்திலுள்ள சுப்பிரமணிய சுவாமி கோயில் முதலாம் சடையவர்மன் வீரபாண்டியன் காலத்தினைச் சார்ந்ததாகும். இதனை இப்பகுதியின் அலுவலராக விளங்கிய திருநீலகண்டன் தொண்டைமானார் உருவாக்கியுள்ளார்.[6]

இரண்டாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் காலத்தில் பாண்டிய நாட்டிற்குப் போகையதண்டநாயக்கன் என்ற போசளர் படைத்தலைவன் வந்தான். இவனது முயற்சியால் இராமநாதபுரம் மாவட்டத்துத் தேவிபட்டினம் திலகேசுவரர் கோயில் தோற்றுவிக்கப்பட்டுள்ளது இவனது பெயரால் இக்கோயில் போகீசுவரமுடைய நாயனார்கோயில் என்று அழைக்கப்பட்டுள்ளது.[7] சிவகங்கை மாவட்டத்தில் இடைக்காட்டூர், இளையாத்தங்குடி, பிரான்மலை போன்ற இடங்களில் பிற்காலப்பாண்டியர் கோயில்கள் கட்டப்பட்டுள்ளன. இடைக்காட்டூரில் இடைக்காலப் பாண்டியர் காலத்தில் உருவாகி முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் காலத்தில் பழுது பட்ட சிவன்கோயில் ஒன்று இருந்தது. இதனை முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியனின் ஆணைப்படி ஊரவையினர் பொ.ஆ 1238ல் முற்றிலுமாகப் புதுப்பித்துக் கட்டியுள்ளனர். இதற்காகப் பழைய கோயிலில் இருந்த கல்வெட்டுகள் படியெடுக்கப்பட்டு மீண்டும் புதிய கோயில் விமானத்தில் வெட்டப்பட்டுள்ளன.[8] முதலாம் மாறவர்மன் குலசேகரபாண்டியன் காலத்தில் பிரான்மலைய அடிவாரத்தில் தென்னிந்தியாவில் புகழ்பெற்று விளங்கிய பதிணென் விசையத்தார் திசையாயிரத்து ஐநூற்றுவர் என்ற வணிகர் குழுவினரால் சிவன்கோயில் ஒன்று எடுக்கப்பட்டுள்ளது இக்கோயில் இறைவன் மாற்கவகைதீர்த்த முதலியார் நாயனார் அழகிய திருச்சிற்றம்பலமுடைய நாயனார் என்று அழைக்கப்பட்டுள்ளார்[9] பாண்டியர் காலத்தில் வணிக நகரமாக விளங்கிய இளையாத்தங்குடியில் பொ.ஆ 1302ல் கட்டியதுறகண்டன் ஓமமழகியான் ஆன கலிங்கத்தரையன் என்ற அதிகாரியால் பெருமாள்கோயில் ஒன்று கட்டப்பட்டுள்ளது[10] தற்போது இது ஆதிகேசவப் பெருமாள்கோயில் என்ற பெயரில் வழங்கி வருகிறது. காளையார்கோவிலில் இருந்து திருவாடானை செல்லும் வழியில் திருவேகம்பத்து அமைந்துள்ளது இவ்வூர்ப்பகுதியில் பொ.ஆ 13ஆம் நூற்றாண்டில் இரண்டு கோயில்கள் எடுப்பிக்கப்பட்டுள்ளன. அவற்றில் ஒன்று இரண்டாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் காலத்து நடராஜீச்சுவரமாகும். இதனை எடுப்பித்தவர் அரசனின் குருவாக விளங்கிய சோமநாததேவர் ஆவார் காலப்போக்கில் இக்கோயில் அழிந்த நிலையில் அதிலிருந்த கல்வெட்டுள்ள கட்டடப்பகுதிகள் திருவேகம்பத்துச் சிவன்கோயில் கட்டுவதற்குப் பயன்படுத்தப்பட்டுள்ளன.[11]

விருதுநகர் மாவட்டத்தில் சேத்தூர், மங்கலம், திருத்தங்கல், ஈஞ்சார், செங்குன்றாபுரம், சோழபுரம், வடக்கு வெங்காநல்லூர் போன்ற இடங்களில் பிற்காலப்பாண்டியர் காலக்கோயில்கள் உள்ளன சேத்தூர் பெருமாள் கோயிலைக் கட்டியவர் முதலாம் சடையவர்மன் குலசேகரபாண்டியனின் மைத்துனன் விரதமுடித்த பெருமாள் ஆவான் இதனைச் சேரநாராயண விண்ணகர ஆழ்வார்கோயில் என்ற பெயரில் கட்டி முடித்தான்[12] மங்கலம் சிவன்கோயிலான ஆயிரத்தெண்மீசுவரர் கோயிலும் பெருமாள்கோயிலான ஸ்ரீவல்லபவிண்ணகரமும் முதலாம் சடையவர்மன் குலசேகரபாண்டியன்

காலத்தவையாகும் இவ்வூருக்கு அண்மையில் அமைந்த பரிநிறை கொண்டான் என்ற ஊரில் வீரபண்டிதவிண்ணகர எம்பெருமான் கோயில் என்ற பெயரில் கண்டியத்தேவரால் பெருமாள் கோயில் ஒன்று எடுப்பிக்கப்பட்டுள்ளது.[13] முற்காலப்பாண்டியர் காலத்தவையாக இருந்த திருத்தங்கல் பெருமாள்கோயில், சிவன்கோயில் விமானங்கள் அடி முதல் முடி வரை முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியனின் அமைச்சனாக விளங்கிய தடங்கண்ணிச் சிற்றூருடையான் சோறன் உய்யநின்றாடுவானான குருகுலத்தரையன் என்பவனால் முற்றிலுமாகத் திருத்திக் கட்டப்பட்டுள்ளன இவனே திருத்தங்கல்லிலிருந்து ஸ்ரீவில்லிபுத்தூர் செல்லும் வழியில் அமைந்த தனது ஊர்ப்பகுதியான ஈஞ்சாரில் (தடங்கண்ணி) அழகிய சிவன்கோயில் ஒன்றை உருவாக்கியுள்ளான்[14] செங்குன்றாபுரம் பெருமாள்கோயிலை பொ.ஆ 1246இல் கட்டியவன் இரண்டாம் மாறவர்மன் சுந்தரபாண்டியனின் அதிகாரியான மலை மண்டலத்து வாமனபுரத்து கேரளன் நாராயணனான சேரபாண்டிய தேவர் ஆவார்.[15] இராசபாளையம் பகுதியிலுள்ள சோழபுரம் பெருமாள்கோயிலின் வளாகத்தில் சுந்தரபாண்டியனின் பட்டத்தரசி சுந்தரபாண்டிய விண்ணகராழ்வார் கோயில் என்ற பெயரில் சிறியகோவில் ஒன்றினைக் கட்டியுள்ளார்[16] வடக்கு வெங்காநல்லூரில் இரண்டாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் காலத்தில் நாராயணபட்டன் என்பவன் சேர நாராயண விண்ணகரம் என்ற பெயரில் பெருமாள்கோயில் ஒன்றைக் கட்டியிருப்பது குறிப்பிடத்தக்கது[17]

திருநெல்வேலி மாவட்டத்தில் கல்லிடைக்குறிச்சி, இடைகால், வடக்கு அரியநாயகிபுரம், கரிசூழ்ந்தமங்கலம், ஊர்க்காடு, மன்னார்கோயில், சுகன்தலை, மணப்படைவீடு, பகவதிமலை, கீழச்செவல், பத்தமடை போன்ற ஊர்களில் பிற்காலப்பாண்டியர் காலத்தில் புதியதாகக் கோயில்கள் எடுத்தமை பற்றிய கல்வெட்டுக் குறிப்புகள் கிடைக்கின்றன இன்று கல்லிடைக்குறிச்சியில் கிரிகிருஷ்ணன்கோயில் என்றழைக்கப்படும் பெருமாள்கோயிலை முதலாம் சடையவர்மன் குலசேகரபாண்டியன் காலத்தில் நாலாயிர விண்ணகராழ்வார் கோயில் என்ற பெயரில் கருமாணிக்க ஆழ்வான் வேணாவுடையான் என்ற பாண்டிய அரசின் அலுவலன் எடுப்பித்துள்ளான்[17அ] இம்மன்னன் காலத்திலேயே இடைக்கால் கரிய மாணிக்கப்பெருமாள் கோயில் படையணி பகவதியான கண்டியத்தேவன் என்பவரால் மணவாள ஆழ்வாரான நிலைமையழகிய விண்ணகரம் என்ற பெயரில் கட்டப்பட்டுள்ளது.[18] வடக்கு அரியநாயகிபுரத்துக் கைலாசநாதர்கோயிலை இம்மன்னன் காலத்திலேயே வென்று முடிசூடிய பாண்டிய ஈஸ்வரமுடையார்கோயில் என்ற பெயரில் எடுப்பித்தவன் குலசேகரனான கண்டியத்தேவன் ஆவான்[19]

கரிசூழ்ந்தமங்கலம் சுந்தரேசுவரர் கோயிலை மதுரை உதைய ஈசுவரமுடையார்கோயில் என்று திருநெல்வேலி கயிலாசமுடையான்

என்பவன் முதல் மாறவர்மன் சுந்தரபாண்டியன் காலத்தில் எடுப்பித்துள்ளான்.[20] இம்மன்னன் காலத்திலேயே மலைமண்டலத்துப் பள்ளிவிக்கிரமன் ஆதிச்சதேவனான அகோரதேவன் ஊர்க்காடு சிவன்கோயிலைக் கட்டியிருக்கின்றான்[21] மாறவர்மன் சுந்தரபாண்டியன் காலத்திலேயே மன்னார்கோயிலின் உள்ளே குலசேகரஆழ்வார்கோயிலும் சுகன்தலை இடைவினைதீர்த்த பெருமாள்கோயிலும் கட்டிமுடிக்கப் பெற்றுள்ளன குலசேகர ஆழ்வார்கோயிலை பொ ஆ 1230இல் மலைமண்டலத்து முல்லைபள்ளியைச் சார்ந்த வாசுதேவன் கேசவனான செண்டலங்காரதாசர் என்பவர் கட்டி முடித்தார்.[22] சுகன் தலையில் திருநாராயண விண்ணகரம் என்ற பெயரில் அரசனே கட்டி முடித்தான்[23]

திருநெல்வேலி மாவட்டத்தில் இரண்டாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் காலத்தில் சில கோயில்கள் கட்டப்பட்டுள்ளன மணப்படை மூன்றீசுவரமுடையநாயனார் கோயில் கண்டியத்தேவரால் கட்டப்பட்டது[24] கீழச்செவல் காணவினிய பெருமாள் கோயில் திருப்புல்லாணிதாசரால் தோற்றுவிக்கப்பட்டது[25] நாங்குனேரி வட்டத்தில் இன்று பகவதிமலை என்றும் பண்டைய நாளில் ஜீனகிரிமலை என்றழைக்கப்பட்ட குன்றின் மீது புகலோகநாதநல்லூரைச் சார்ந்த மதிசாகரன் ஆதிபட்டாரகன் என்பவன் இராஜவல்லிபுரத்து ஒருவாருணர்ந்தான் எனக்கு நல்லபெருமாள் அண்ணன் தமிழப்பல்லவரையன் பெயரால் தீர்த்தங்கரர்க்குக் கோயில் ஒன்றைத் தோற்றுவித்தான் இது கல்வெட்டில் நியாயபரிபாலனப் பெரும்பள்ளி என்று குறிப்பிடப்படுகிறது[26] பதிமூன்றாம் நூற்றாண்டில் மணப்படை ஆனைகாத்தபெருமாள் கோயிலானது காணவினிய விண்ணகராழ்வார் கோயில் என்ற பெயரில் செய்யாண்டு மாமணியான குலசேகரவர்மனால் தோற்றுவிக்கப்பட்டது[27] இந்நூற்றாண்டிலேயே பத்தமடை பில்லநாதர் கோயில் பெம்மான் நாயகனார் இருங்கோளன் செல்வனால் ஸ்ரீவல்லப ஈசுவரமுடையார் கோயில் என்ற பெயரில் கட்டப்பட்டது.[28]

தூத்துக்குடி மாவட்டத்தில் அங்கமங்கலம், பசுவந்தனை முதலிய இடங்களிலுள்ள சிவன்கோயில்கள் பதிமூன்றாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் கட்டப்பட்டுள்ளன முதலாம் சடையவர்மன் வீரபாண்டியன் காலத்தில் அங்கமங்கலத்து நரசிங்கேசுவரமுடையார் கோயில் எடுப்பிக்கப்பட்டுள்ளது[29] பசுவந்தனை வலங்கை மீகாமீசுவரமுடைய நாயனார் கோயில் பொ.ஆ 1245இல் கற்றளியாக்கப்பட்டுள்ளது[30] இதே போன்று கன்னியாகுமரி மாவட்டத்துச் சோழபுரம் சிவன்கோயில் சடையவர்மன் பராக்கிரமபாண்டியனால் பொ ஆ. 1371இல் புதுக்கிக் கட்டப்பட்டுள்ளதைக் கல்வெட்டு தெரிவிக்கிறது[31] மேற்கண்ட முப்பது கோயில்களில் சில அழிவுற்றும், சில பிற்காலத் திருப்பணிகளின்போது மாற்றம் பெற்றும் உள்ளன இருந்தபோதிலும் பழமை மாறாது எஞ்சியிருக்கும் பல கோயில்கள் பிற்காலப்பாண்டியர் கட்டடக்கோயில்கள்

கட்டுமானக் கலைப் பணியைத் திட்டவட்டமாக வரையறை செய்ய பெரிதும் துணைசெய்யும் சான்றுகளாக விளங்குகின்றன

## திருக்காமகோட்டங்கள்

பாண்டியநாட்டில் சிவன்கோயில்களில் உமையம்மனுக்குரிய அம்மன் கோயில்களும் பெருமாள் கோயில்களில் ஸ்ரீதேவி, பூதேவிக்குரிய நாச்சியார் கோயில்களும் பன்னிரண்டாம் நூற்றாண்டின் இறுதியிலிருந்து தொடங்கி பதிமூன்றாம் நூற்றாண்டில் முற்பகுதியிலிருந்து திட்டவட்டமாக வழக்கத்திற்கு வந்துவிட்டதைக் கல்வெட்டுகள் காட்டுகின்றன சிவன்கோயில்களில் தொடக்கத்தில் சுவாமிகோயிலின் மகாமண்டபத்தில் தெற்குநோக்கிய நிலையில் சிறியகோயிலாகவும் பின்னர் மகா மண்டபத்தில் நடராசர் சன்னதி அமைக்கப்பட்ட பின்பு முன் மண்டபத்தில் தெற்கு நோக்கிய நிலையில் தனிப்பெருங்கோயிலாகவும் அம்மன்கோயில்கள் கட்டப்பட்டன மூன்றாவது நிலை வளர்ச்சியாக சுவாமிகோயில் விமானத்தின் இடப்புறமாக தனித்த நிலையில் கிழக்குநோக்கிய முறையில் அம்மன்கோயில் அமைக்கப்பட்டுள்ளது. அதற்கும் பின்னராக நான்காவது கட்ட வளர்ச்சியாக சுவாமிகோயில் விமானத்தின் வலப்புறமாக தனித்தநிலையில் சுவாமிக்கு இணையாகக் கிழக்கு நோக்கிய நிலையில் அம்மன்கோயில் கட்டப்பட்டது இந்நான்கு கட்டட வளர்ச்சி நிலைகளையும் பிற்காலப் பாண்டியர் கட்டடக்கோயில் வரலாற்றை ஆய்வு செய்வார் அறியலாம்

சிவன்கோயில்களைப் போன்று பெருமாள் கோயில்களிலும் இவ்வளர்ச்சியைச் சிறுமாற்றங்களுடன் காண முடிகிறது. பெருமாள்கோயில்களில் மகாமண்டபத்தில் தெற்கு நோக்கிய நிலையில் ஸ்ரீதேவிக்குரிய நாச்சியார் சன்னதி இடம் பெற்றன பின்னர் மரபுப்படி பெருமாளின் வலப்புறமாக எப்போதும் இருக்கும் ஸ்ரீதேவிநாச்சியார்க்கு, திருமாலின் விமானத்திற்கு வலப்புறத்தில் கிழக்கு நோக்கிய நிலையில் தனிக்கோயில் பாண்டிய நாட்டில் கட்டப்பட்டது பூதேவியின் அவதாரமான ஆண்டாளுக்குப் பெருமாள்கோயில் விமானத்தின் இடப்புறமாகச் சன்னதி அமைக்கும் வழக்கம் பொ.ஆ 13ஆம் நூற்றாண்டில் காணப்படவில்லை ஸ்ரீவில்லிப்புத்தூர் ஆண்டாள்கோயில் இதற்கு விதிவிலக்காகப் பெருமாள் கோயிலின் வெளிப்புறம், வலப்புறத்தில் கிழக்கு நோக்கிய நிலையில் அமைக்கப்பட்டு இன்று தனிப்பெருங்கோயிலாக விளங்கி வருகிறது

பிற்காலப்பாண்டியர் கல்வெட்டுகளில் சிவன்-பெருமாள் கோயில்களுக்குரிய அம்மன்-தாயார் சன்னதிகள் திருக்காமக்கோட்டம் என்றும் திருக்காமகோட்டமுடைய நாச்சியார்கோயில் என்றும் குறிப்பிடப்படுகின்றன இடத்திற்குத் தக்கவாறு பல்வேறு இடங்களிலுள்ள திருக்காமகோட்ட நாச்சியார்க்கு அருகிய அளவில் பெயரிட்டு அழைக்கும்

வழக்கத்தையும் பிற்காலப்பாண்டியர் கல்வெட்டுகள் உணர்த்துகின்றன பிற்காலப்பாண்டியர் கல்வெட்டுகளில் சிவன்கோயில் அம்மனின் பெயர்கள், அருந்தவஞ்செய்த நாச்சியார், சிவனேசவல்லி நாச்சியார், சிவனை முழுதுடையநாச்சியார், நல்லதவம் செய்தார். நாச்சியார் போகமதிபூமலையாள், நாச்சியார் தண்மென்முலையார் எனக்கு நல்லபெருமாள் நாச்சியார் என்று பலவாறாகக் குறிப்பிடப்படுகின்றன.[32] மூன்றாம் குலோத்துங்கசோழன் மெய்க்கீர்த்தியில் மதுரைக்கோயிலிலுள்ள மீனாட்சியம்மன் திருக்காமகோட்டமுடைய நாச்சியார் என்று குறிப்பிடப்படுகின்றார்

பிற்காலப்பாண்டியர் கல்வெட்டுகளில் காலமுறையினைக் கண்டறியும் முறையில் திருக்காமகோட்டமுடைய நாச்சியார் கோயில்கள் கட்டப்பட்டதைத் தெரிவிக்கும் பிற்காலப்பாண்டியர் கல்வெட்டுகள் கிடைக்கின்றன பொ ஆ 13ஆம் நூற்றாண்டில் சேத்தூரிலுள்ள பெருமாள்கோயிலில் காமகோட்டமான அழகியநாச்சியார் கோயிலை மலைமண்டலத்துக் கீழ்குளத்தைச் சார்ந்த சாத்தன்ரவி என்பவன் எடுப்பித்துள்ளான்[33] இதே காலத்தில் இளான்குடி (இளையான்குடி) கங்கை கொண்ட சூரியத்தேவன் வாணாதிராயனான காலிங்கராயன் அழகர் கோயிலில் சிறுகோயில் எடுப்பித்துச் சுந்தரவல்லி நாச்சியாரைப் பிரதிட்டைச் செய்துள்ளான்[34] திருமால் கோயில்களைவிட சிவன்கோயில் வளாகத்தில் காமகோட்டம் கட்டியது குறித்த கல்வெட்டுகள் பல கிடைக்கின்றன முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் காலத்தில் திருக் கோளக்குடியில் இராசவல்லிபுரத்தைச் சார்ந்த ஒருவன் திருக்காமகோட்ட முடைய நாச்சியார் கோயிலைக் கட்டியுள்ளான்[35] பொ.ஆ. 13ஆம் நூற்றாண்டில் திருப்பரங்குன்றத்தில் சேந்தப்பிள்ளையும், இளையான்குடி யில் காலிங்கராயரும் சோழவந்தான் தென்கரையில் நரசிங்கதேவரும் காமகோட்டமுடைய நாச்சியார் கோயில்களைக் கட்டியுள்ளனர்[36]

## சிற்றாலயங்கள்

பிற்காலப்பாண்டியர் கோயில் வளாகத்தில் சிறிய ஆலயங்கள் கட்டியதைத் தெரிவிக்கும் பிற்காலப்பாண்டியர் கல்வெட்டுகள் பல உள்ளன மதுரைக் கோயிலில் இரண்டாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் காலத்தில் வாணாதிராயரால் விரத முடித்த ஈஸ்வரமுடையார் கோயில் என்று சிறு சிவன்கோயில் எடுக்கப்பட்டுள்ளது[37] ஆளுடையபிள்ளையார்கோயில் என்ற சிற்றாலயம் திருக்கோளக்குடி சிவன்கோயிலில் கட்டப்பட்டுள்ளது[38] மலைமண்டலத்து மத்திக்கோட்டு நாராயணன் நாராயணனான வீரமழகிய பாண்டியதேவர் நெல்லையப்பர் கோயிலில் விக்கினேஸ்வரர்கோயில் மண்டபத்தைக் கட்டுவித்துள்ளார்[39] அருவியூர் அழகாபுரி வணிகர்கள் அரண்மனை சிறுவயல் கோயில் வளாகத்தில் இளையநாயனார் சிற்றாலயத்தை எடுப்பித்துள்ளனர்[40]

## மண்டபங்கள்

பிற்காலப்பாண்டியர் காலத்தில் பாண்டியநாட்டில் தனித்த நிலையில் எடுப்பித்த பெரிய மண்டபங்கள் குறித்த சான்றுகளைக் காண்பது அரிது ஆனால் கருவறைக்கு முன்புள்ள மகாமண்டபத்தையும் முன்மண்டபத்தையும் எடுப்பான முறையில் எடுப்பித்துள்ளமைக்குக் கல்வெட்டுச் சன்றுகள் உள்ளன. அவை கல்வெட்டுகளில் பல பெயர்களில் அமைந்த மண்டபங்களாகக் குறிப்பிடப்படுகின்றன திருமயம் வட்டத்தில் பதிமூன்றாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் காரமங்கலம் அகத்தீஸ்வரர் கோயிலிலும் குருங்களூர் அகத்தீஸ்வரர்கோயிலிலும் சுந்தரபாண்டியன் திருமண்டபம் என்ற பெயரில் மண்டபங்கள் கட்டப்பட்டுள்ளன[41] காரமங்கலத்திலுள்ள மண்டபம் ஆட்கொண்டதேவனான தன்மராயன் திருப்பணியாகும் மதுரை மாவட்டம் அழகர்கோயிலில் 'கோயில் பொன்வேய்ந்த பெருமாள் திருமண்டபம்', முனையதரையன் திருமண்டபமும், சாக்கோட்டைக் கோயிலில் மாளவசிங்கன் திருமண்டபமும், இளையாங்குடியில் திகையாதித்தன் திருமண்டபமும் பிற்காலப்பாண்டியர் காலத்தில் எடுக்கப்பட்டுள்ளன[42] திருப்பத்தூர் திருத்தளிநாதர் கோயிலில் திருத்தொண்டத்தொகையான் திருமண்டபம் என்ற பெயரில் மண்டபம் ஒன்று உருவாக்கப்பட்டுள்ளது[43] திருமலையில் ஐநூற்றுவன் திருக்காவணம் என்று வணிகர்கள் குழுவினரால் மண்டபம் கட்டப்பட்டுள்ளது[44] பிரான்மலையில் சைவக்குரவர் பெயரால் திருநாவுக்கரசர் திருமண்டபம் என்று ஒரு மண்டபம் எடுக்கப்பட்டுள்ளது45. விருதுநகர் மாவட்டம் சோழபுரம் பெருமாள்கோயிலில் அர்த்தமண்டபம், மகாமண்டபம், சோபனமண்டபம் ஆகியவற்றை முதலாம் மாறவர்மன் குலசேகரபாண்டியன் காலத்தில் (பொ.ஆ 1302) கட்டியவன் களாத்தூருடையான் கோலங்கரியானான வேணாவுடையான் ஆவான்[46] முதலாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் பெயரால் தென்திருப்பேரை மகரக்குழைக்காதர்கோயிலில் ஞானசமுத்திரன்மண்டபம் என்ற பெயரில் மகாமண்டபத்தைக் கட்டியவன் ஆராஅமுதன் என்பனாவான்.[47] குலசேகரன் திருமண்டபம் என்ற பெயரில் நெல்லையப்பர்கோயிலில் மண்டபம் ஒன்று கட்டப்பட்டுள்ளது.[48] ஆத்தூர், திருவாலீசுவரம், திருக்கோளூர், தீர்த்தாண்டதானம் ஆகிய இடங்களிலுள்ள சிவன்கோயில்களில் பிற்காலப் பாண்டியர் காலத்தில் மண்டபங்கள் எடுப்பிக்கப்பட்டுள்ளன.[49]

சன்னவனம் சாலையவனேசுவரர் கோயிலில் பொ.ஆ 1274இல் பூக்களைத் தொடுப்போர்க்குத் திருப்பூமண்டபம் என்ற பெயரில் மண்டபம் ஒன்று கட்டப்பட்டுள்ளது[50] சோழபுரத்தில் ரிஷபதேவர்மண்டபம் என்ற பெயரில் மண்டபம் எடுப்பிக்கப்பட்டுள்ளது.[51] சுவாமி நீராடுவதற்காக இளான்குடி கங்கைகொண்ட சூரியதேவன் வாணாதிராயனால் மதுரையில் வைகையாற்றங்கரையில் மண்டபம் ஒன்று கட்டப்பட்டுள்ளது.[52]

இதுபோன்று கல்வெட்டுக்களில் காணப்படும் மண்டபங்களை கள ஆய்வு செய்வதன் மூலம் பிற்காலப்பாண்டியர் மண்டபக் கலைப்பாணியை அறியலாம் இவற்றில் சில பிற்காலத்தில் திருப்பணியால் மாற்றம் அடைந்துள்ளதையும் காணலாம்

## திருமதில் – திருச்சுற்றுமாளிகை கோயில்

விமானம், சிற்றாலயங்கள் ஆகியவற்றைச் சுற்றித்திருமதிலும் பல தூண்கள் கொண்ட திருச்சுற்றுமாளிகையும் பிற்காலப்பாண்டியர் காலத்தில் கட்டப்பட்டுள்ளதைக் கல்வெட்டுகள் புலப்படுத்துகின்றன. நாலுகவி பெருமாள்தாசர் சடையவர்மன் வீரபாண்டியன் காலத்தில் திருக்கோட்டியூர் சௌமியநாராயணப் பெருமாள் கோயிலைச் சுற்றிக்கட்டிய திருமதில் கோதண்டராமன் திருமதில் என்றழைக்கப்பட்டது [53] நெல்லையப்பர் கோயில் திருச்சுற்றுமதில் குலசேகரபாண்டியன் காலத்தில் எடுக்கப்பட்டுள்ளது [54]

திருமதிலையொட்டி கோயிலின் உட்புறம் பல தூண்களைக் கொண்ட திருச்சுற்று மண்டபம் பிற்காலப்பாண்டியர் கோயில்களில் கட்டப்பட்டன இவை திருச்சுற்றுமாளிகை, திருநடைமாளிகை என்று அழைக்கப்பட்டன. விக்கிரமபாண்டியன் காலத்தில் சிவகிரி சிவன்கோயிலின் திருச்சுற்றுமண்டபம் கொடுமளூர் தேவன் அழகப்பெருமாளான பல்லவராயரால் கட்டப்பட்டது55 திருத்தங்கல் பெருமாள்கோவிலில் விமானத்தினைச் சுற்றி முதலாம் மாறவர்மன் குலசேகரபாண்டியன் காலத்தில் திருவரங்கதேவன்மண்டபம் என்ற பெயரில் திருச்சுற்றுமாளிகை கட்டப்பட்டுள்ளது.[56] நெல்லையப்பர் கோயிலில் விக்கிரமபாண்டியன் திருமாளிகை என்ற பெயரில் அரசனே திருச்சுற்று மண்டபத்தினைக் கட்டியுள்ளான்.[57] திருநெல்வேலி மாவட்டத்தில் பிற்காலப்பாண்டியர் காலத்தில் நம்பன்தட்டை கபிசுவரம் உடையார் கோவிலின் ஐகதோபகண்டர் திருமாளிகையை ஐகதோபகண்டரும் சிங்கிக்குளம் கைலாசநாதர்கோவிலின் திருச்சுற்று மாளிகையை சௌந்தரபாண்டியனும், தென்திருப்புவனம், புஷ்பவனேசுவரர்கோயில் திருநடைமாளிகையை வித்யாபரணனும் கட்டுவித்துள்ளனர் [58] இதுபோன்ற காலவரையறையைச் செய்ய உதவும் கல்வெட்டுகள் உள்ள திருச்சுற்று மண்டபங்கள், பிற்காலப் பாண்டியர் தூண்கள், போதிகை ஆகியவற்றின் அமைப்பை நன்கு அறிய உறுதுணை புரிகின்றன

## கோபுரங்கள்

மதுரை, திருநெல்வேலி போன்ற பல பெருங்கோயில்களில் பிற்காலப் பாண்டியர் காலத்தில் சிறியகோபுரம் முதல் பெரியகோபுரங்கள் வரை கட்டப்பட்டுள்ளன இவற்றில் சில இடங்களில் அவற்றின் காலத்தைத் திட்டவட்டமாகத் தெரிவிக்கும் முறையில் அமைந்த கல்வெட்டுகள்

காணப்படுவது குறிப்பிடத்தக்கது. பிற்காலப்பாண்டியர் காலத்தில் இராசராசசோழனைப் போன்று விமானத்தின் முன்பாக இரண்டு கோபுரங்களையும் பிற்காலச்சோழர்களைப் போன்று கோயிலின் நான்கு வாயில்களிலும் நான்கு கோபுரங்கள் எடுக்கும் வழக்கத்தைக் காணமுடிகிறது. விருதுநகர் மாவட்டத்து சோழபுரம் கோயிலின் விமானத்தின் முன்பாக பொ.ஆ.13ஆம் நூற்றாண்டின் மையப்பகுதியில் ஆட்சிபுரிந்த அரசர்களின் பெயரால் சுந்தரபாண்டியன் திருக்கோபுரம், தம்பிக்கு நல்லான் திருக்கோபுரம் என்று இரண்டு கோபுரங்கள் எடுக்கப்பட்டுள்ளன.[59] மதுரைக் கோயிலில் சொக்கர் சன்னதியின் முன்பாக கிழக்கு வாயிலில் வெளிச்சுற்று மதிலில் பொ.ஆ. 13ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் அவனிவேந்தராமன் என்றழைக்கப்பட்ட சுந்தரபாண்டியனால் மிகப்பெரிய கோபுரம் ஒன்று கட்டப்பட்டுள்ளது. இதன் உட்புறம் நிலைவாயிலின் இருபுறமும் சுந்தரபாண்டியன் திருக்கோபுரம் அவனிவேந்தராமன் திருக்கோபுரம் என்று குறிப்பிடும் கல்வெட்டுகள் காணப்படுகின்றன.[60] அழகர்கோயிலில் கம்பத்தடி மண்டபத்திற்கு முன்பாகவுள்ள பெரிய கோபுரத்தினைச் செழுவத்தூர் தொண்டைமான் காலிங்கராயனின் மகன் கட்டியுள்ளான்.[61] இக்கோபுரம் தொண்டைமான் கோபுரம் என்று அழைக்கப்பட்டுள்ளது. சின்னமனூர் சிவன்கோயில் கோபுரத்தை வணிகர் குழுவினர் கட்டியுள்ளனர். இதனால் இது பதினெண்விசையத்திருக்கோபுரம் என்றழைக்கப்பட்டுள்ளது.[62]

## கட்டடப்பகுதிகள்

பிற்காலப்பாண்டியர்காலக் கலைப்பாணியை வரையறை செய்ய உதவும் கல்வெட்டுகளுடன் கூடிய கோயில் கட்டடப்பகுதிகள் - கட்டட



உறுப்புக்கள் பாண்டிய நாடெங்கும் காணப்படுகின்றன. திருவாசல், திருநிலைக்கால், தூண், போதிகை, கோமுகம் (பிரநாளம்) பலிபீடம், பூப்பலகை, சாளரம் என்று பல கட்டடப்பகுதிகளைச் செய்வித்தோர் பெயர்கள் அவற்றிலேயே கல்வெட்டுகளாகப் பொறிக்கப்பட்டுள்ளன.[63]

## விமானச்சிற்பங்கள்

பிற்காலப்பாண்டியர் கோயில்களில் சோழர் கட்டடக்கலைப் பாணியைப் பின்பற்றி விமானங்களில் தேவகோட்டங்களில் சிற்பங்கள் செய்து வைக்கும் முறை அருகிய அளவில் வழக்கத்திற்கு வந்துவிட்டது என்பதைக் கல்வெட்டுகள் தெரிவிக்கின்றன. அருப்புக்கோட்டை பிற்காலப்பாண்டியர் சிவன்கோயில் விமானத்தில் கருவறை தேவகோட்டங்களில் துர்க்கை, இலிங்கபுராணதேவர் உருவங்களைச் செய்வித்தோரின் பெயர்கள் கல்வெட்டுப் பொறிப்புகளாக உள்ளன இடைக்காலப்பாண்டியர் காலத்திலிருந்து விமானத்தின் தென்புறமுள்ள தட்சிணாமூர்த்தி தேவகோட்டத்திற்கு முன்பாகச் சிறுமண்டபம் கட்டப்பெறும் வழக்கம் வந்துள்ளது இக்காலத்திலிருந்து தட்சிணாமூர்த்திக்கு மிகுந்த முக்கியத்துவத்தைப் பாண்டியர் அளித்துள்ளனர் இடைக்காட்டூர் பிற்காலப்பாண்டியர் சிவன்கோயில் கருவறை தேவகோட்டத்திலுள்ள தட்சிணாமூர்த்தி சிற்பத்தை அழகிய பாண்டிய தட்சிணாமூர்த்தி என்ற பெயரில் அரும்புகலழித்த பாண்டியதேவர் என்பவர் எழுந்தருளு வித்துள்ளார்[64]

## பிற்காலப்பாண்டியர் கோயிலின் பண்புகள்

பிற்காலப்பாண்டியர் கட்டுமானக் கோயில்கள் குறைவான உயரமுடைய விமானத்துடன் கட்டடக்கோயில்களாக உள்ளன திருப்பரங்குன்றம், மூவரைவென்றான் போன்ற இடங்களிலுள்ள முற்காலப்பாண்டியர் குடைவரைக்கோயில்கள் பதிமூன்றாம் நூற்றாண்டில் திருத்தியமைக்கப் பட்டன அவற்றில் பிற்காலப்பாண்டியர் சிற்பங்கள் செய்விக்கப்பட்டன. தென்பரங்குன்றத்தில் சமணருக்குரிய முற்காலப்பாண்டியர்கோயில் பிரசன்னதேவர் என்ற சைவத்துறவியால் சிவன்கோயிலாக மாற்றியமைக்கப் பட்டது

சைவ, வைணவக் கட்டடக்கோயில்கள் கருவறை, அர்த்தமண்டபம், மகாமண்டபம், முகமண்டபம் ஆகியவற்றோடு அவற்றைச் சுற்றிச் சிற்றாலயங்கள் திருச்சுற்றுமாளிகையோடு காணப்படுகின்றன. வாயிலில் ஒன்று முதல் இரண்டு சிறிய கோபுரங்கள் காணப்படுகின்றன. சில இடங்களில் மகாமண்டபத்தின் தென்புறம் சோபன மண்டபமும் உள்ளது. மகாமண்டபம் அல்லது முன்மண்டபத்தின் பக்கவாட்டில் தெற்கு நோக்கிய நிலையில் அம்மன், தாயார் சிற்றாலயங்கள் தோற்றுவிக்கப்பட்டன.

சைவக்கோயில்களில் கணபதி, முருகன், சண்டிகேசுவரர், சூரியன், சந்திரன், பைரவர் ஆகியோர்க்குத் தனிச்சிற்றாலயங்கள் எடுக்கப்பட்டன. சப்தமாதர்க்கு அருகிய அளவில் திருச்சுற்றுமாளிகையின் தென்புறத்தில் சிற்பங்கள் வடித்து வைக்கப்பட்டன. முற்காலப்பாண்டியர் காலத்தில் சைவக்கோயில்களில் இருந்த மூதேவியின் வழிபாட்டைப் பிற்காலப் பாண்டியர் கோயில்களில் காணமுடியவில்லை துர்க்கைக்குத் தனி சிற்றாலயம் எடுக்கப்படும் மரபு இக்காலத்தில் மறைந்துவிட்டது இக்காலத்தில் பைரவர்க்குத் தனி சிற்றாலயம் அமைக்கப்படும் மரபு பெருவழக்காக இருந்தது பாண்டியநாட்டில் பெரிச்சிக்கோயிலில் மட்டும் பொ.ஆ 12ஆம் நூற்றாண்டிற்கு முன்பாகவே பைரவர்க்குச் சிற்றாலயம் எடுக்கப்பட்டுள்ளது மேலும் பாண்டிய நாட்டில் சோழர் ஆட்சியின்போது சேத்திரபாலர் வழிபாடு வந்துள்ளதும் இங்கு குறிப்பிடத்தக்கது.

திருமால்கோயில்களில் நரசிம்மர்க்கும் விஷ்வக்சேனர்க்கும் தனிச்சிற்றாலயங்கள் காணப்படுகின்றன. திருமோகூர் போன்ற சில இடங்களிலுள்ள கோயில்களில் சக்கரத்தாழ்வார்க்குத் தனிச்சிற்றாலயம் அமைக்கப்படும் வழக்கம் பிற்காலப்பாண்டியர் காலத்தில் தோன்றிவிட்டது திருமால்கோயில் கருவறைகளில் திருமாலின் நின்ற, இருந்த, கிடந்த கோலங்கள் வழிபாட்டில் உள்ளன இவற்றில் நின்ற, இருந்த கோலங்களுடன் ஸ்ரீதேவி, பூதேவி ஆகியோரது திருவுருவங்களும் செய்து வைக்கப்பட்டன திருமோகூர் காளமேகப்பெருமாள் கோயில் வளாகத்தில் பொ.ஆ 13ஆம் நூற்றாண்டில் பள்ளி கொண்ட பெருமாளுக்குத் தெற்கு நோக்கிய நிலையில் தனிச்சன்னதி திருவரங்கத்தினைப் போன்று எடுக்கப்பட்டுள்ளது இப்பெருமானின் பாதத்திற்கு அருகில் ஸ்ரீதேவி, பூதேவி அமர்ந்துள்ளனர் திருமால்கோயில்களில் ஆழ்வார்களுக்குச் சிற்றாலயம் அமைக்கப்படும் வழக்கம் பிற்காலப்பாண்டியர் காலத்தில் தோன்றியது மன்னார்கோயிலில் எடுக்கப்பட்ட குலசேகரஆழ்வார்கோயில் இதற்குச் சிறந்த சான்றாகும்

பிற்காலப்பாண்டியர் கோயில் விமானங்கள் ஆறு அங்கங்கள் கொண்ட ஒற்றைத்தளம் அல்லது இருதளங்களுடன் உள்ளன சிறிய கருவறையைக் கொண்டதாக இருக்கின்றன கோபுரங்களே விமானத்தைவிட உயர்ந்து நிற்கின்றன. விமானம் சதுர, செவ்வக வடிவங்களில் அமைக்கப்பட்டன விமானத்தில் பிரஸ்தரத்திற்கு மேலுள்ள பகுதி பெரும்பாலும் செங் கல்லாலும் சுதையாலும் உருவாயின இவற்றின் சிகரம் பெரும்பாலும் எண்பட்டையாயும் (திராவிடசிகரம்) சில இடங்களில் சதுரமாயும் (நாகரம்) உள்ளன திருக்கோளூர் போன்ற இடங்களில் சாலை வடிவில் உள்ள சிகரங் களும் அருகிய அள வில் எடுக்கப்பட் டுள்ளன

பிற்காலப் பாண்டியர் கோயில் விமானங்களின் அதிட்டானங்கள் எளிய பாதபந்த அதிட்டானங்களாகவே அமைந்துள்ளன. சோழர்காலக் கோயில்களைப் போன்ற அழகிய பிரதி பந்த, கபோதபந்த அதிட்டானங்

களைக் காணமுடியவில்லை. இவற்றில் கண்ட சிற்பங்கள் அருகிய அளவில் வடிக்கப்பட்டுள்ளன. திருவேகம்பத்துப் பகுதியில் எடுக்கப்பட்ட சிவன்கோயிலின் அதிட்டானத்து உபானப்பகுதியில் நாட்டிய கரணச் சிற்பங்களை அமைக்கும் புதிய மரபு காணப்படுகிறது. விமானத்தின் உயரத்தைக்கூட்ட கபோதபத்ர அமைப்பைக் கொண்ட உபபீடம் சில இடங்களில் உள்ளன. பாண்டிய நாட்டில் கோயில் கலை வரலாற்றில் செய்யப்பட்ட புதிய முயற்சிகள் இவையாகும். திருவுருவங்களுக்குத் திருமஞ்சனம் செய்யப்படும் கோயில்களின் வடபுற அதிட்டானப் பகுதியில் எளிய சிம்மமுகத்துடன் கூடிய பிரநாளம் பிற்காலப்பாண்டியர் கோயில்களில் செய்விக்கப்பட்டுள்ளன.



விமானத்தின் சுவர்ப்பகுதியில் கருவறையில் மூன்றும் அர்த்த மண்டபத்தில் இரண்டுமாக மொத்தம் ஐந்து தேவ கோட்டங்கள் அமைக்கும் மரபே பிற்காலப்பாண்டியர் கோயில்களில் காணப்படுகிறது. முற்காலப்பாண்டியர் கோயில்களைப் போன்றே இவற்றில் பெரும்பாலும் தெய்வவுருவங்கள் வைக்கப்படவில்லை. இவை அலங்காரத் திற்கு வைக்கப்பட்ட மாடங்களாகவே உள்ளன. சில இடங் களில் சோழர்கோயில் களின் தாக்கத்தினால் தேவகோட்டங்களில் தென்புற தேவகோட்டத்தில் தட்சிணாமூர்த்தி, வடபுறம் பிரம்மா, மேற்புறத் தேவகோட்டத்தில் இலிங்கோத்பவர் உருவங்கள் செய்து வைக்கப்பட்டன. அர்த்தமண்டப தென்புறத் தேவகோட்டத்தில் விநாயகர் உருவமும் வடபுறத் தேவகோட்டத்தில் துர்க்கையின் உருவமும் செய்து வைக்கப்பட்டன. அருப்புக்கோட்டை போன்ற இடங்களிலுள்ள சிவன்கோயிலில் தேவகோட்டங்களிலுள்ள தெய்வவுருவங்களின் பெயரும் அவற்றைச் செய்வித்தோரின் பெயரும் கல்வெட்டுகளாகப் பொறிக்கப்பட்டுள்ளன.

பிற்காலப்பாண்டியர் கோயில் தேவகோட்டங்களிலுள்ள தெய்வவுருவங்கள் சோழர் காலக் கோயில்களைப் போன்று தேவகோட்டம் முழுவதும் நிறைந்து நிற்கும் முறையில் எடுப்பான தோற்றத்துடன் செய்விக்கப்பட வில்லை

பிற்காலப் பாண்டியர் கோயில்களின் கருவறை, அர்த்தமண்டப தேவகோட்டங்களின் மேலே அரைவட்டவடிவில் தட்டையான மகரதோரணங்கள் அணி செய்கின்றன மகரதோரணத்தின் நடுவே அமைந்த சிறிய வட்ட, அரைவட்ட குறு மாடங்களில் குறுஞ்சிற்பங்கள் வடிக்கப்பட்டுள்ளன சிவன்கோயில்களில் விநாயகர், தட்சிணாமூர்த்தி, யோகநரசிம்மர், பிரம்மா போன்றோரின் உருவங்கள் உள்ளன திருமால் கோயில்களில் அவரது பல்வேறு கோலங்கள், திருவிளையாடல்கள், அழகிய குறுஞ்சிற்பங்களாக வடிக்கப்பட்டுள்ளன ஆனால் இவற்றில் திட்டவட்டமான வரையறை பின்பற்றப்படவில்லை பதின்மூன்றாம் நூற்றாண்டின் பிற்பகுதியிலிருந்து தேவகோட்டங்களின் மீது சாலைவடிவத் தோரணம் அமைக்கும் அலங்காரமுறை வந்துள்ளது. தேவகோட்டங்களின் பக்கவாட்டில் இருபுறமும் சுவர்ப்பகுதியில் கம்பபஞ்சரம், கோட்டபஞ்சரம், கும்பபஞ்சரம் சதுரவடிவிலான அரைத்தூண்கள் பிற்காலப்பாண்டியர் கோயில்களில் காணப்படுகின்றன தூண்களிலும் அரைத்தூண்களிலும் வெட்டுப்போதிகை, ஆப்புமுனைப் போதிகைகளும் இடம் பெற்றுள்ளன இவற்றோடு பூமொட்டுப் போதிகையையும் பிற்காலப்பாண்டியர் கோயில்களில் அவர்தம் இறுதிக்காலத்தில் வழக்கிற்கு வந்துவிட்டன கும்பபஞ்சரத்தை முற்கால இடைக்காலப் பாண்டியர் கோயில்களில் காணமுடியவில்லை பிற்காலப்பாண்டியர்காலக் கோயில் சுவர்களில் இதனைக் காணமுடிகிறது சுவருக்கு மேலுள்ள பிரஸ்தரத்தில் எடுப்பான கொடுங்கை, யாளிவரி, பூதவரி, அன்னவரி ஆகியவை காணப்படுகின்றன பிற்காலப்பாண்டியர் கோயில்கள் பலவற்றில் பிரஸ்தரத்திற்கு மேலேயுள்ள தளம், சிகரப்பகுதிகள் நாயக்கர் மற்றும் அண்மைக்காலங்களில் புதுப்பிக்கப்பட்டுவிட்டமையால் அவற்றின் இயல்பை முற்றிலுமாக அறிந்துகொள்ள இயலவில்லை.

பிற்காலப்பாண்டியர் கோயில்கள் பாண்டியப் பேரரசுத்தன்மையைப் புலப்படுத்துகின்ற முறையில் பெரிதாகவும் விரிவாகவும் கட்டப்படவில்லை இவை முற்காலப்பாண்டியர் கலை பாணியை அடித்தளமாகக் கொண்டு பிற்காலச்சோழர்களைப் பின்பற்றிக் கட்டப்பட்டுள்ளன பிற்காலச் சோழர்களால் எடுக்கப்பட்ட கோயில்களின் கலைப்பாணியின் தாக்கத்தை இவை பெற்றிருந்தாலும் சோழநாட்டில் பிற்காலச்சோழர்களால் எடுக்கப்பட்ட கம்பீரமாக உயர்ந்தும் விரிந்தும் காட்சியளிக்கும் கட்டடக்கோயில்கள் (அதாவது தாராசுரம், திருபுவனம் போன்றவை) ஒன்று கூட பாண்டியநாட்டில் இல்லை பெரிய நகரங்களில் எடுக்கப்பட்ட கோபுரங்கள் மட்டும் பிற்காலப்பாண்டியர் எழுச்சியைப் புலப்படுத்து

கின்றன தமிழ்நாட்டில் பொ ஆ 13, 14ஆம் நூற்றாண்டுகளில் பேரரசுகளுக்கிடையே நடைபெற்ற ஆதிக்கவுரிமைப் போர்களில் பாண்டியர் சிக்கித் தவித்தனர் அக்காலத்தில் இடைவிடாது பல போர்களில் பாண்டிய மன்னர் ஈடுபட வேண்டியிருந்தது இதனால் பாண்டியநாட்டில் கோயில்கலை வரலாற்றில் உன்னதமான நிலை எட்டுவதற்குரிய சூழலும் உருவாகவில்லையோ என்று கருதத் தோன்றுகிறது

## அடிக்குறிப்புகள்

1. *1. C.Sivaramamurthi, Kalugumalai and Early Pandyan Rockart Shrines,1961.*

   *2. Ganapathy Subbiah, Early Pandyan Architecture (C.600-950), Unpublished Ph.D. Thesis.*

   *3. K.V.Soundararajan, Early Pandyan, Muttarayar and Irukkuvel Architecture, in studies in Indian Temple Architecture, 1995*

2 கு. சேதுராமன், இராமேசுவரம் கோயில், ஜெ.ஜெ. பப்ளிகேசன்ஸ், மதுரை 2000.

3. *SII Vol.VIII No.411.*

4 *ARE 447-452/1906.*

5. *ARE 291/1972-73.*

6. *SII.XXIII No.421.*

7. *SII VIII No.404.*

8. வெ.வேதாசலம், இடைக்காட்டூர் திருமணிகண்டேசுவரர் கோயில் கல்வெட்டுகள் *ஆவணம்*, இதழ்–8, தமிழகத் தொல்லியல் கழகம், தஞ்சை, 1997, பக்.50.

9. *SII VIII No 442.*

10 *ARE 35, 36/1926*

11. வெ. வேதாசலம், *திருவேகம்பத்து திருக்கோயில் வரலாறு,* 1998.

12. *ARE 235/1940-41*

13. வெ. வேதாசலம், ஆர். பாலச்சந்திரன், மங்கலம் சிவன்கோயில் கல்வெட்டுகள் *ஆவணம்* இதழ் – 11, கி.பி.2000, பக்.33.

14. *V Vedachalam, G.Sethuraman, Madhuca Krishnan, Virudhunagar District - An Archaeological Source Book; Sivakasi 2000, P.63*

5. மேலது, பக்.46.

16 *SII XXVI No.528*

17. *ARE 521/1962-63*

17a. *SII XXIII No.101*

18. *ARE.503/16-17*

19. *ARE.490/1916-17*

20. *ARE 496/1916-17*

21. *ARE 522/1911.*

22. *ARE 397/1916-17*

23 *ARE 7/1915-16*

24. *ARE 446/1909*

25. *ARE 527/1911*

26. *ARE 269, 270/1940-41*

27. *ARE 443/1909*

28. *ARE 546, 549/1916-17*

29 *ARE 357/1949-50*

30. எஸ்.இராமச்சந்திரன், பகவந்தனைக்கோயில் கல்வெட்டுகள், *வரலாறு* இதழ்–7, இராசமாணிக்கனார் வரலாற்றுப்பேரவை, திருச்சி 1997, பக்.4

31. *கன்னியாகுமரி மாவட்டக் கல்வெட்டுகள்*, தொகுதி–3, எண்.1968/269

32. *ARE 613/17-18; SII.VIII No.175; ARE 235/1940-41; ARE 466/1916-17, ARE 35/31-32*

33. *ARE 223/1940-41*

34. *ARE 306/1949-50*

35. *ARE 84/1915-16*

36. *ARE 337/1918-19; ARE 293/1949-50; ARE 129/1910*

37. *ARE 194/1943-44*

38. *ARE 100/1915-16C*

39. *ARE 53/1926-27*

40. *ARE 51/1924C*

41. *IPS Vol.Nos 407, 1002*

42. *ARE 270/1929-30; ARE 49/1946-47; ARE 301/1945-50*

43. *ARE 104/1908*

44. *ARE 10/1924C*

45. *ARE 216/1924C*

46. *ARE 497/1909*

47. *ARE 284/1940-41*

48. *ARE 336/1916-17*

49. *ARE 454/1929-30; ARE 341/1916-17; ARE 781/1962-63; ARE 598/1926-27*

50 *ARE 18/1915-16C*

51. *ARE 512/1962-63*

52. *ARE 306/1949-50*

53. *ARE 297/1923*

54. *ARE 29/1926-27C*

55. *ARE 61/1928-29*

56. இக்கல்வெட்டு நேரில் படிக்கப்பட்டது

57. *ARE 48/1926-27C*

58. *ARE 482/1916-17, ARE 266/1940-41; ARE 476/1916-17*

59. *ARE 492/1909*

*Virudhunagar District - An Archaeological Source Book PP.87-88*

60. *ARE 285, 286/1941-42*

61. *ARE 331/1929-30*

62. *SII XXIII No.430*

63. *ARE 620/1926-27; ARE 32/1926; IPS No.1005; ARE 643/1917; ARE 313/1940-41; ARE 385/1929-30; ARE 442/1977; ARE 19/1926-*

64. வெ. வேதாசலம், இடைக்காட்டூர் திருமணிகண்டேசுவரர் கோயில் கல்வெட்டுகள் *ஆவணம்* இதழ் எண் 8, 9.

பட்டியல் ஒன்று – மன்னர்களின் காலவாரியாக கோயில்களின் எண்ணிக்கை

| | காலம் | மதுரை | திண்டுக் கல் | தேனி | விருது நகர் | இராமநாத புரம் | சிவ கங்கை | திருநெல் வேலி | தூத்துக் குடி | கன்னி யாகுமரி | மொத்தம் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| சடையவர்மன் குலசேகரன் – 1 | கி.பி 1190–1218 | 1 | 0 | 2 | 7 | 0 | 3 | 3 | 3 | 0 | 19 |
| மாற.சுந்தர பாண்டியன் – 1 | கி.பி.1216–1244 | 6 | 1 | 4 | 9 | 3 | 9 | 11 | 3 | 0 | 46 |
| மாற சுந்தர பாண்டியன் – 2 | கி.பி 1238–1255 | 0 | 0 | 0 | 5 | 1 | 2 | 4 | 1 | 0 | 13 |
| சடைய.சுந்தர பாண்டியன் – 1 | கி.பி 1250 – 1284 | 1 | 0 | 3 | 1 | 1 | 3 | 0 | 1 | 0 | 10 |
| மாற குல சேகரன் – 1 | கி.பி.1268 – 1318 | 4 | 1 | 0 | 6 | 0 | 3 | 1 | 1 | 0 | 16 |
| மொத்தம் | | 12 | 2 | 9 | 28 | 5 | 20 | 18 | 9 | 0 | 104 |

பட்டியல் இரண்டு – காலவாரியாகக் கோயில்களின் எண்ணிக்கை

| | காலம் | மதுரை | திண்டுக் கல் | தேனி | விருது நகர் | இராமநாத புரம் | சிவ கங்கை | திருநெல் வேலி | தூத்துக் குடி | கன்னி யாகுமரி | மொத்தம் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| காலம் ஒன்று | கி.பி.1190 – 1250 | 9 | 1 | 7 | 28 | 6 | 23 | 25 | 4 | 0 | 103 |
| காலம் இரண்டு | கி.பி.1290 – 1300 | 7 | 2 | 4 | 21 | 5 | 9 | 1 | 2 | 0 | 51 |
| காலம் மூன்று | கி.பி.1300 – 1400 | 1 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 0 | 1 | 2 |
| மொத்தம் | | 17 | 3 | 11 | 49 | 11 | 32 | 26 | 6 | 1 | 156 |

பட்டியல் மூன்று – சமயங்கள் வாரியாகப் பிறகாலப் பாண்டியர் கோயில்கள்

| சமயம் | மதுரை | திண்டுக்கல் | தேனி | விருதுநகர் | இராமநாதபுரம் | சிவகங்கை | திருநெல்வேலி | தூத்துக்குடி | கன்னியாகுமரி | மொத்தம் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| சைவம் | 11 | 3 | 7 | 30 | 11 | 23 | 14 | 5 | 1 | 104 |
| வைணவம் | 6 | 0 | 4 | 18 | 0 | 8 | 11 | 1 | 0 | 49 |
| சமணம் | 1 | 0 | 0 | 1 | 0 | 0 | 1 | 0 | 0 | 3 |
| மொத்தம் | 17 | 3 | 11 | 49 | 11 | 31 | 26 | 6 | 1 | 156 |

# 66. செய்தித் திரட்டு – புதிய கண்டுபிடிப்புகள்

## 66 : 1 அரிய நாகர் சிற்பம்



காஞ்சிபுரம் மாவட்டம், செய்யூர் வட்டம், பரமேசுவரமங்கலம் கைலாச நாதர் கோயில் முன் மண்டபத்தில் வழிபாட்டில் உள்ள நாகர் சிற்பம். மூன்று தலைகள் உடையது. மேற்பகுதியில் உள்ள சிவலிங்கத்தின் மீது பசு பால் சொரியும் காட்சி சிற்பமாக வடிக்கப்பட்டுள்ளது. பொதுவாக நாகர் சிற்பத்தில் சிவலிங்கம் அல்லது நடனமாடும் நிலையில் கண்ணன் காட்டப்பட்டிருப்பார். இங்கு சிவலிங்கத் தின் மீது பசு பால் சொரியும் நிலையில் சிற்பத்தில் வடிக்கப்பட்டுள்ளது சிறப் பாகும். இது 15-16ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது.

## 66 : 2 கருவறைச் சுவர்



காரைக்குடி வட்டம் நெடுங்குடி கைலாசநாதர் கோயிலில் பிரசன்ன நாயகி அம்பாள் எழுந்தருளியுள்ள கருவறைச் சுவர் அமைப்பு சிறப்பானதாக அமைந்துள்ளது. உப பீடத்தின் மீது அமைந்துள்ள கருவறைச் சுவர் பொதுவாக திருக்கோயிலில் காணப்படும் கட்டட அமைப்புடன் காணப்படுகிறது. சுவரில் காணப்படும் (பித்தி) கும்ப பஞ்சரம் என்ற சிற்ப அமைப்பு சற்று மாறுபட்டுக் காணப்படுகிறது. கும்ப பஞ்சரத்தில் கீழ்ப்பகுதி குடம் போல பொதுவாகக் காட்டப்பட்டிருக்கும். இக்கோயிலில் யானையின் உருவம் (முன் பகுதி) காட்டப்பட்டிருப்பது அரிய சிற்ப - கட்டட அமைப்பாக விளங்குகிறது. மதுரை திருக்கோயிலிலும் கருவறை வெளிச்சுவரில் யானையின் சிற்ப உருவங்கள் காட்டப்பட்டிருக்கும். எட்டு யானைகள் - தாங்கி நிற்கும் இவ்விமானத்தை 'இந்திர விமானம்' என்று திருவிளையாடற் புராணம் குறிப்பிடுவதும் நோக்கத்தக்கது..

**கி. ஸ்ரீதரன், சென்னை**

**ஆவணம் 24, 2013**

## 66 : 3 அரியலூர் பகுதியில் கட்டடக் கலைக் கூறுகள்

**வாலாஜாநகரம் தூங்கானை மாடக்கோயில் :** *அரியலூர் அருகே உள்ள வாலாஜாநகரம் கிராமத்தில் சொர்ணபுரீஸ்வரர் என்னும் சிவன் கோயில் உள்ளது. இக்கோயிலின் விமானம் அடி முதல் பிரஸ்தரம் வரை உருண்டை வடிவிலான கஜபிருஷ்ட (தூங்கானைமாடக் கோயில் ) விமான கலைப்பாணியில் கட்டப்பட்டுள்ளது மேலே உள்ள விமானம் வேசர வடிவில் உள்ளது. இக்கோயிலில் சிங்கமுகத் தூண்கள் உள்ளன. விமானத்தின் சுவர்ப்பகுதியில் விஜயநகர காலக் கலைப்பாணியில் வடிக்கப்பட்ட தப்பு வாசிக்கும் இசைக்கலைஞன், பபூன் (விதூஷகன்) போன்ற உருவச் சிற்பங்கள் உள்ளன. இதனால் பல்லவர் கால கலைப்பாணியில் இக்கோயில் கட்டப்பெற்று பிற்காலத்தில் விஜயநகர - நாயக்கர் காலத்தில் மீண்டும் செய்யப்பெற்றது என்று கருதலாம். இக்கோயிலில் கல்வெட்டுகள் எதுவுமில்லை*

**உடையவர் தீயனூர் கணபதி சன்னதி :** *அரியலூர் -விக்கிரமங்கலம் சாலையில் உடையவர் தீயனூர் கிராமத்தில் உள்ள ஜமதக்னீஸ்வரர் கோயிலில் பரிவார விநாயகர் சன்னதி உள்ளது. இச்சன்னதியின் அடி முதல் பிரஸ்தரம் வரை சதுரவடிவிலும் உச்சிப் பகுதி கஜபிருஷ்ட விமான கலைப்பாணியிலும் கட்டப்பட்டுள்ளது கல்வெட்டுகளிலிருந்து இவ்வூர்ப்பெயர் முதலாம் இராஜேந்திர சோழரின் இரண்டாவது மகனான சோழ கேரளன் பெயரில் மனுகுலகேசரி நல்லூர் என அழைக்கப்பட்டதை அறியமுடிகிறது இக்கோயில் இரண்டாம் இராஜராஜன் காலத்தில் கட்டப்பெற்றதாகும் எனவே இச்சன்னதி இம்மன்னர் காலத்தைச் சேர்ந்தது எனலாம். இருப்பினும் இச்சன்னதியில் விஜயநகர மன்னர் இரண்டாம் தேவராயரின் (1422-1444) கல்வெட்டு (கி பி 1428-29) உள்ளது எனவே இக்கோயில் விஜயநகர காலத்தில் திருப்பணி செய்யப்பட்டபோது மானம் கஜபிருஷ்ட வடிவில் அமைக்கப்பட்டது என்றும் கருதத் தோன்றுகிறது.*

*அரியலூர் மாவட்டத்தின் வடக்கு எல்லையில் வெள்ளாற்றின் வடக்குக் கரையின் உள்ள பெண்ணாகடம் பிரளயகாலேஸ்வரர் கோயில் தூங்கானைமாடக் கோயில் என்பதை அப்பரின் தேவாரப்பாடலும் இங்குள்ள முதலாம் இராஜேந்திர காலக்கல்வெட்டுகளும் தெரிவிக்கின்றன இக்கலையின் தாக்கம் அரியலூர் பகுதியிலும் இருந்தது என்பதை வாலாஜாநகரம் , உடையவர் தீயனூர் கோயில்கள் உணர்த்துகின்றன*

**மூத்ததேவி சிற்பம் :** *அரியலூர் மாவட்டம் உடையார் பாளையம் வட்டம் கோவிந்தப்புத்தூரில் முற்காலச்சோழர் கலைப்பாணியில் மூத்த (ஜேஷ்ட)தேவியின் சிற்பம் கோயில் வளாகத்தில் உள்ளது இச்சிற்பம் அக்காலக்கோயிலின் பரிவார தெய்வங்களில் ஒன்றாக இருந்து பிற்காலத்தில் வழிபாடின்றி கோயிலுக்கு வெளியே வந்துவிட்டது என்று கருதலாம்*

**இல. தியாகராஜன், அரியலூர்**

## 66 : 4 வாஸ்து புருஷ புடைப்புச் சிற்பம்

*தேனி மாவட்டம், உத்தமபாளையத்தில் உள்ள திருக்காளாத்தீஸ்வரர் கோயிலின் மண்டபத்தின் நடுவே உள்ள புடைப்புச் சிற்பமாக உள்ளது வாஸ்து பகவான் தன் தலைமுடியை இருபக்கமும் தோள்களின் வழியே தொங்கவிட்டுள்ளார் நடுப்பகுதி முடியை மேல்நோக்கி முடிந்து அதன் உச்சியை இலிங்கவடிவில் கட்டிக் கொண்டையிட்டவாறு காணப்படுகிறார் இவருடைய ஜடாமுடி கொண்டையின் அடிப்பாகத்திலும் ஒரு சிறிய சிவலிங்கம் காணப்படுகின்றது அடர்த்தியான மீசையுடனும், நெறித்த இரு புருவங்களுடனும், உற்றுப் பார்க்கும் விழிகளுடனும் காணப்படுகிறார். காதின் இருபுறமும் வட்டமான குழைகள் தொங்குகின்றன இரு செவிகளிலும் செவிப்பூ உள்ளது தோள்களில் தோள்வளைகளும், புஜங்களில் முத்துக்களாலும் மற்றும் தங்கத்தாலும் ஆன கடகங்கள் மிளிர்கின்றன கைகளில் வளையல்கள் அணி செய்கின்றன கழுத்தில் கண்டசரம், முத்துவடம் மற்றும் சரபளி ஆகிய ஆபரணங்களை அணிந்துள்ளார் மார்பின் நடுப்பகுதியில் அறுகோணம் காணப்படுகிறது மார்பின் குறுக்கே முத்துக்களாலான உதரபந்தமும், வயிற்றின் இரு பக்கங்களிலும் முப்புரி நூல் இரு பிரிவுகளாகப் பிரிந்து பின்னோக்கிச் செல்கின்றது தொப்பூள் ஒரு முக்கோணத்தின் நடுவே அமைந்துள்ளது பத்மாசனத்தில் அமர்ந்துள்ள இவரது இரு கைகளும் தொடை மீது வைக்கப்பட்டுள்ள இடையில் பக்கத்திற்கு ஒன்றாக இரு மணிகள் தென்படுகின்றன இவரின் உடை முழங்கால் வரை உள்ளது கால்களில் தண்டைகளும், பாதங்களில் பாதசரமும் உள்ளன பாதத்தின் அடிப்பகுதியின் நடுவே ஒரு இலிங்கம் காட்டப்பட்டுள்ளது ஜடாமுடியின் இரு பக்கங்களிலும் சந்திர சூரியர்கள் வணங்கும் நிலையில் உள்ளார்கள். அவர்களுக்குக் கீழே இரு வானவர்கள் வீணை வாசித்துக் கொண்டிருக்கிறார்கள் வாஸ்து பகவானின் தலைக்குமேல் பிரம்மாவும் அம்பிகையும் சிவனை வழிபடுகிறார்கள் ஒரு பாம்பு அவர்களைச் சுற்றியுள்ளது இச்சிற்பத்தில் 28 கட்டங்கள் உள்ளன இதில் வடமேற்கு மூலையில் உள்ள கட்டத்தில் ஒரு உருவம் தவம் செய்யும் நிலையில் காட்டப்படுகிறது இதை தவிர்த்தால் 27 கட்டங்களும் அவற்றில் 27 விண்மீன்களுக்குரிய விலங்குகளைச் சித்தரிக்கின்றன உள்சதுரக்கட்டத்தில் பன்னிரெண்டு இராசிகளான மேஷம் (ஆடு), ரிஷபம் (மாடு), மிதுனம் (சிறுவன் சிறுமி), கடகம் (நண்டு), சிம்மம் (சிங்கம்), கன்னி (சிறு பெண்), துலாம் (தராசு), விருச்சிகம் (தேள்), தனுசு (வில் அம்பு), மகரம் (ஆடு உடலும் மீன் வால் கொண்ட உருவம்), கும்பம் (தண்ணீர் உள்ள பானை), மீனம் (எதிர் எதிர் திசையில் நீந்தும் இரு கயல்கள்) ஆகியன உள்ளன*

**கோ. எழில் ஆதிரை, நாகப்பட்டினம்**



**ஆவணம் 24, 2013**

## 66 : 5 பெருங்கற்கால பண்பாட்டுச் சின்னங்கள்

கோவை மாவட்டம், அவிநாசி வட்டம், சேவூரிலிருந்து நம்பியூர் செல்லும் சாலையில் 4 கி.மீ. தொலைவில் உள்ள போத்தம்பாளையம் என்ற ஊராட்சிப் பகுதியில் இருந்து 2 கி.மீ. தொலைவில் கரடிகோயில் செல்லும் வழியில் புலிப்பார்கிராமம் அமைந்துள்ளது.



இங்கு நத்தக்காடு என்றழைக்கப்படுகின்ற பகுதியில் திரு. பழனிச்சாமிக் கவுண்டருக்குச் சொந்தமான வால்கிணறு தோட்டத்தில் வடமேற்குப் பகுதியில் கற்பதுக்கைகள் பல உள்ளன. 15க்கும் மேற்பட்ட கற்பதுக்கைகளின் கல்வட்டத்தின் நடுவே கற்குவை அல்லது மண்குவை அமைக்கப்பட்டு மேடாகக் காணப்படுகிறது. இக்கற்பதுக்கையில் இடுதுளை மேற்குப்புறத்தில் மேற்பகுதி ஒரு அடி அகலமும் கீழ்ப்பகுதி குறுகியதாகவும் உள்ளது. இக்கல்வட்டப் பகுதியில் முதுமக்கள் தாழியொன்றும் பல மட்கலங்களும் உடைபட்ட நிலையில் உள்ளன.

**ச. இரவி, கோவை**

## 66 : 6 கண்டிரமாணிக்க புத்தர் சிலை



திருவாரூர் மாவட்டம் குடவாசல் வட்டத்திலுள்ள கண்டிரமாணிக்கம் அருகே புத்தர் சிற்பம் ஒன்றை முனைவர் குடவாயில் பாலசுப்ரமணியம் தினத்தந்தி நிருபர் திரு. சிவராமன் மற்றும் ஊராட்சிமன்றத் தலைவர் திரு. காளிமுத்து ஆகியோர் உதவியுடன் காணமுடிந்தது. மேட்டுத்தெருவில் திரு. மணிகண்டன் வீட்டுக் கட்டுமானப் பணியின் போது சுமார் ஆறு அடி ஆழத்தில் இச்சிற்பம் கண்டெடுக்கப்பட்டது. இச்சிற்பம்

பொ.ஆ 10-11ஆம் நூற்றாண்டைச் சார்ந்த சோழர் காலச் சிற்பம் ஆகும். 63 அங்குலம் உயரமும், 33 அங்குலம் அகலமும் உள்ள இச்சிற்பம் அமர்ந்த நிலயில் தியான கோலத்தில் உள்ளது புன்னகை தவழும் இதழ்கள், நெற்றியில் திலகக் குறி, நீண்டு வளர்ந்த காதுகள், பரந்த மார்பில் காணப்படும் மேலாடை, இடுப்பில் ஆடை ஆகியவையும் வானோக்கி உள்ள வலது கையில் தர்ம சக்கரக்குறியும் காணப்படுகிறது. தலையில் சுருள் முடிக்கு மேல் தீச்சுடர் உள்ளது மூக்கு சிதைந்த நிலையில் உள்ளது.

**பா. ஜம்புலிங்கம், தஞ்சாவூர்**

## 66 : 7 முதலூர் பைரவர் சிற்பமும் பிற சிற்பங்களும்

இராமநாதபுரம் மாவட்டம், பரமக்குடி வட்டத்தில் வைகையாற்றின் கிழக்குக் கரையில் இராமநாதபுரத்திலிருந்து சுமார் 23 கிமீ தொலைவில் முதலூர் அமைந்துள்ளது இடைக்காலத்தைச் சார்ந்த வாழ்விடப் பகுதி கண்டறியப்பட்டது இவ்வாழ்விடப் பகுதியில் கருப்பு நிற மற்றும் சிவப்பு நிறப் பானையோடுகள் பரவலாகக் காணப்படுகின்றன. ஊரின் மேற்குப் புறத்தில் உள்ள கிராமத் தெய்வமான ஸ்ரீ மீனாட்சி அம்மன் கோயிலைக் கட்ட நிலத்தைத் தோண்டிய பொழுது பைரவர் சிற்பம் ஒன்றும், பலிபீடம் ஒன்றும், விநாயகர் சிற்பம் ஒன்றும், மூஞ்சுறு சிற்பம் ஒன்றும் வெளிக் கொணரப்பட்டன இச்சிலைகள் யாவும் ஸ்ரீ மீனாட்சி அம்மன் கோயிலுக்கு எதிர்புறம் தற்பொழுது வைக்கப்பட்டுள்ளன இச்சிற்பங்களில் காலத்தால் முந்தியதாகக் கருதப்படுவது பைரவர் சிற்பமாகும் இச்சிற்பம் 13-14ஆம் நூற்றாண்டிற்குட்பட்ட பிற்காலப் பாண்டியர் காலத்தைச் சார்ந்தது மற்ற மூன்று சிற்பங்களான பலிபீடம், விநாயகர், மூஞ்சுறு போன்றவை பிற்காலமாகலாம்

பைரவர் சிற்பம் சமபாத ஸ்தானத்தில் நின்ற நிலையில் பத்ம பீடத்தில் நாய் வாகனத்துடன் உள்ளது இச்சிலை பத்ம பீடத்திலிருந்து 123 செ.மீ யும், பாதத்திலிருந்து 107 செ மீ.யும், கணம் 15 செ மீ யும் கொண்டதாக அமைந்துள்ளது பைரவ மூர்த்தி உக்ரமான முகமும், மூன்று கண்களும், நான்கு கைகளும், செந்நிற திருமேனியும் உடையவராய் திகம்பரராய், ஜடா மகுடத்துடன் தலைமுடியில் மகர பூரிமத்தைக் கொண்ட தீச்சுடரினை தலைக்கோலமாய்க் கொண்டுள்ளார் தலையில் பிறை சந்திரன் வலது, இடது மேற்கரங்களில் உடுக்கை, பாசம் போன்றவையும், வலது, இடது, கீழ் கரங்களில் முறையே சூலம், கபாலம் போன்றவையும் கொண்டுள்ளன. தற்பொழுது இடது கீழ்க்கரம் கபாலம் இல்லாமல் உடைந்து காணப்படுகின்றது வலது, இடது தன்கரத்தில் பூரிமம் கட்டினையும், கை வளையல்களையும் அணிந்துள்ளார் கழுத்திலே மணிமாலை, காதுகளில் முறையே மகர குண்டலம், பத்ர குண்டலம், மார்பிலே முப்புரிநூல் ஆகியவற்றை இவர் கொண்டுள்ளார்

**ஆ. ராஜா, தஞ்சாவூர்**



நவகண்டச் சிற்பம் : திருப்பூர் மாவட்டம், அவினாசியில் அவினாசி - கோவை தேசிய நெடுஞ்சாலையில் தேர்நிலை, நல்லாற்றங்கரை அருகில் காரணப் பெருமாள் கோயிலின் முக மண்டபத்தில் இடப்புறம் பழமையான நவகண்டச் சிற்பம் காணப்படுகின்றது. சுமார் மூன்றடி உயரமுடைய இச்சிற்பம் 2 அடி சுற்றளவுடன் எளிமையான கலை வேலைப்பாடுகளுடன் காட்சியளிக்கின்றது. இடக்கரம் தலை முடியைப் பற்றிக் கொண்டு, வலக்கரத்திலுள்ள அரிவாளால் தலையை அறுப்பது போன்று இச்சிற்பம் உள்ளது. பெரிய அளவிலான குடுமியும், காதுகளில் குண்டலங்களும் இச்சிற்பத்தில் காட்டப்பட்டுள்ளன. தோள்வளை, கைவளை மற்றும் அலங்காரமின்றி கழுத்தணிகளுடன் காட்சி தருகின்றது. இடுப்பில் ஆடை இடம் பெற்றுள்ளது.

வாயிற் காவலர் மரச்சிற்பங்கள் : அவினாசி நகரில் பிரசித்தி பெற்ற இலிங்கேஸ்வரர் திருக்கோயிலுக்கு 18ஆம் நூற்றாண்டின் இறுதியில் மைசூர் மன்னர் ஸ்ரீசாமராஜ உடையாரின் புதல்வரான சங்கராச உடையார் சித்திரை மாதம் வளர்பிறை ஏகாதசி திதி பூர நட்சத்திரத்தில் பிறந்ததற்காக பிரம்மாண்டமான அழகிய தேர் ஒன்றைத் தயார் செய்தளித்தார். இத்தேர் காலப்போக்கில் உடைந்து சிதிலமடைந்து விட்டது. இரண்டு வாயிற்காவலர் (துவார பாலகர்) சிற்பங்களை இக்கோயிலில் வைத்துள்ளனர். இரண்டு அடி உயரத்தில் உள்ள இம்மரச் சிற்பங்கள் தலையில் காதுகளில் குண்டலங்கள், கழுத்தில் ஆரம், சரப்பளி, கண்டிகை உள்ளிட்ட அணிகலன்கள் ஆகியவை உள்ளன. இடக்கரம் கதாயுதத்தைக் கொண்டுள்ளது. தோள் வளை, கைவளை, வீர சங்கிலி போன்ற மாலை அலங்காரத்துடன் கட்டிய கீழ் ஆடை ஆகியன இவ்விரு சிற்பங்களையும் அலங்கரிக்கின்றன. மற்றுமொரு துவார பாலகர் சிற்பத்தின் வலதுகால், வலது கை ஆகியன கதாயுதத்தைத் தாங்கியுள்ளது. இடது கை மூலவரைச் சுட்டுகின்றது.



**சி.எம். ரமேஷ் குமார், கோயமுத்தூர்**

## 66 : 9 அளவுகோல்கள்

*தஞ்சாவூர் மாவட்டத்தில் உள்ள திருவையாறுக்கு அருகில் அமைந்துள்ள கண்டியூருக்கு கிழக்கே சுமார் 5 கிமீ தொலைவில் திருச்சோற்றுத்துறை உள்ளது இங்குள்ள ஓதனவனேஸ்வரர் சிவன் கோயிலின் மகாமண்டபத்தின் தெற்குப்புறச்சுவரின் அதிட்டானத்தின் குமுதப்பட்டையில் அளவுகோல் குறியீடுகள் குறிக்கப்பட்டுள்ளன*

*ஓர் அளவுகோல் 182.5 செமீ நீளமுடையது அதன் இரு புறங்களிலும் இரு + குறியீடுகள் காணப்படுகின்றன இதன் நடுவே 45.5, செமீ 45.5 செமீ மற்றும் 91.25 செமீ தூரங்களில் மூன்று செங்குத்துக்கோடுகள் காணப்படுகின்றன இது எட்டுசாண் அளவுடைய நில அளவுகோலாக இருக்கலாம்*

*மேற்கண்ட அளவு கோலுக்கு மேற்கே மற்றொரு அளவுகோல் 183.25 செமீ தொலைவில் குறிக்கப்பட்டுள்ளது. இதன் மொத்த நீளம் 357 செமீ ஆகும் இதில் 268 செமீ, 66 செமீ மற்றும் 23 செமீ இடைவெளிகளில் மூன்று செங்குத்துக்கோடுகள் காணப்படுகின்றன*

*இவை இரண்டு அளவுகோல்களாகவோ, ஒரே அளவுகோலாகவோ இருக்கலாம் இவற்றை ஒரே அளவுகோல் எனக்கொண்டால், இதன் மொத்த நீளம் சுமார் 723 செமீ ஆகும்*

திருவிடந்தை அளவுகோல் : *திருவிடந்தை சென்னையிலிருந்து மாமல்லபுரம் செல்லும் சாலையில் 42 கிமீ தொலைவில் உள்ளது இங்கு புகழ்பெற்ற ஆதிவராகப்பெருமாள் கோயில் உள்ளது இதன் இரண்டாவது கோபுரவாயில் பாதையின், தெற்கு நோக்கி உள்ள வடக்குப்பக்கச் சுவரில் 81.5 செமீ அளவுடைய ஒரு அளவுகோல் இரண்டு செங்குத்துக்கோடுகளால் குறிக்கப்பட்டுள்ளது.*

**வீ. செல்வகுமார் ஆ. இராசா, தஞ்சாவூர்**

## 66 : 10 கொரடாச்சேரி அளவுகோல்

*தஞ்சாவூர், நாகைப்பட்டினம் சாலையில் உள்ள கொரடாச்சேரி யிலிருந்து திருவாரூர் செல்லும் வழியில் 5 கிமீ தொலைவில் உள்ள முகந்தனூரிலிருந்து சுமார் 3 கிமீ வடக்கே என்கண் உள்ளது இவ்வூரில் இரண்டு சிவன்கோயில்கள் உள்ளன வடக்கே உள்ள சிவன் கோயிலில் புகழ்பெற்ற முருகன் சன்னிதி உள்ளது தெற்கே உள்ள பிரம்மபுரீஸ்வரர் கோயில் தெற்குக்கோயில் எனப்படுகின்றது சிதிலமடைந்த நிலையில் செங்குத்தாக இக்கோயில் உள்ளது முகமண்டபத்தின் வடகிழக்கு மூலையில் உபபீடத்தின் ஒரு அளவுகோல் குறிக்கப்பட்டுள்ளது இதன் இரு புறங்களிலும் இரு + குறியீடுகள் காணப்படுகின்றன இதன் மொத்த நீளம்*

*167.5 செமீ ஆகும். இதில் 83.5 செமீ, 22, செமீ 21 செமீ மற்றும் 41 செமீ இடைவெளிகளில் 4 செங்குத்துக்கோடுகள் காணப்படுகின்றன். இதல் முதல் அளவு இரண்டு முழம் அல்லது நான்கு சாண்களையும், இரண்டாவதாக உள்ள இரு அளவுகள் ஒவ்வொரு சாணாக இரண்டு சாண்களையும்; இறுதியாக உள்ளது ஒரு முழத்தையும் குறிப்பதாகலாம்.*

**வீ. செல்வகுமார், தஞ்சாவூர்**

## 66 : 11 மஞ்சப்பேட்டை சிவன்கோயில்

*மஞ்சப்பேட்டை கிராமம் புனல்குளத்திற்கு அருகில் உள்ளது. இவ்வூரில் ஒரு சிவன் கோயில் உள்ளது. இவ்வூரின் மேற்குப்புறத்தில் உள்ள காலனி வீடுகளின் அருகே ஒரு சிவன்கோயில் இடிந்த நிலையில் உள்ளது. இங்கு ஒரு சிவலிங்கம், நந்தி, ஏழு தாய்மார்களின் தொகுப்புச்சிற்பம் மற்றும் இலட்சுமி ஆகியவை காணப்படுகின்றன.*

**வீ. செல்வகுமார் செ. கௌரிசங்கர், தஞ்சாவூர்**

## 66 : 12 கூவத்தூர் கொற்றவை சிற்பம்



*காஞ்சிபுரம் மாவட்டம், செய்யாறு வட்டம் கூவத்தூரில் உள்ள செல்லியம்மன் கோயிலின் முன்புறம் உடைந்த நிலையில் உள்ள சிற்பத்தை தற்பொழுது வழிபட்டுவருகின்றனர். கொற்றவை நீண்ட சதுர பலகைக் கல்லில் புடைப்புச்சிற்பமாக எட்டு கைகளுடன் உள்ளாள். கைகளில் பிரயோகச் சக்கரம், நெடுவாள், குறுவாள் முதலியவற்றையும், இடது கரங்கள் முறையே சங்கு, கேடயம், வில் முதலியவற்றை கொண்டுள்ள இச்சிற்பத்தின் முன் இடதுகரம் அபய ஹஸ்தமும் வலது கரம் வயிற்றுப் பகுதியில் இறுத்தியவாறு மண்டை ஓட்டையும் ஏந்திய நிலையில் உள்ளது. கொற்றவையின் உருவம் சமபங்க நிலையில் இல்லாமல் தலையை இடது பக்கம் சிறிது சாய்த்து சற்றே வளைந்த கோலத்துடன் இடது காலை தரையின் மீது சமமாக வைத்தும், வலது காலை, விரல் நுனிகள் மட்டும் தரையில் பதித்துக் குதிகால் தரையில்படாமல் சற்று மேலே தூக்கிய நிலையிலும் உள்ளது. தோள்பட்டை அருகே சூலமும் அதன் அருகில் அம்பராத்துணி சற்றே புடைத்த நிலையிலும் செதுக்கப்பட்டுள்ளது. வலதுபுறம் கால்முட்டிக்கு அருகில் கழுத்து வரையிலான மான் காண்பிக்கப்பட்டுள்ளது. இத்தகைய அமைப்பை பாய்கலைப்பாவை என்பர். பொதுவாக கொற்றவையின் வாகனமாக மானைக் காட்டும் மரபு*

தமிழ்நாட்டில் மட்டுமே உண்டு. சிற்பத்தின் இருபுறமும் காலருகே உள்ள மானிடர் இருவர் காணப்படுகின்றனர். வலதுபுறத்திலுள்ள சிற்பம், தலைக்கு மேலே முடியைச் சோத்து பிடித்துக் கொண்டு வலது கையால் பின்புறமிருந்து தன் தலையை தானே அரிந்து கொள்வது போலும், பிறிதொருவர் கை கால்களை மடக்கிக் கட்டிக்கொண்டு அமாந்துள்ளவாறும் செதுக்கப் பட்டுள்ளன. பாதம் வரை தொங்கும் ஆடைக்கட்டு உள்ளது. மார்பில் கச்சையும் காலில் தண்டை, காதில் குண்டலங்கள், கைவளை, தோள்வளை, வாகுவளையம் முதலிய அணிகலன்களும் காணப்படுகின்றன. இச்சிற்பம் அமைப்பில் பொ.ஆ. 7-8ஆம் நூற்றாண்டைச் சார்ந்த பல்லவர் காலக் கொற்றவையாகும்.

**தீ. ஆனந்தி, சென்னை**

## 66 : 13 செவ்வூர் நெடுங்கல்

சிவகங்கை மாவட்டம், திருப்பத்தூர் வட்டம், செவ்வூரில் பதினெட்டு அடி உயரம் உள்ள நெடுங்கல் ஒன்று மரங்களுக்கிடையில் அரை அடி கணமும், மூன்றரை - நான்கு அடி வரை அகலத்துடன் காணப்படுகின்றது. கல்லின் சிறு நுனிப்பகுதி சிறிதளவு உடைந்துள்ளது. செவ்வூரில் மேலும் இரண்டு நெடுங்கற்கள் உள்ளன. சிவகங்கை மாவட்டத்தில் 18 அடி உயரமுள்ள நெடுங்கல் கிடைத்திருப்பது இதுவே முதல் முறையாகும்.

**அ. சந்திரபோஸ், புதுக்கோட்டை**

## 66 : 14 வேலூர் பகுதியில் புதிய சிற்பங்கள்

கொற்றவை : திருவண்ணாமலை மாவட்டம், போளூர் வட்டத்தில் கொத்தந்தவாடி ஊருக்கு வடகிழக்கில் நஞ்சை நிலத்தில் கிணற்று மேட்டில் கொற்றவை கற்சிலையும் ஒரு கல் இலிங்கமும் இருக்கின்றன. கொற்றவை பலகைக் கல்லில் புடைப்பாகச் செதுக்கப் பட்டிருக்கிறது. தலையில் சடா மகுடமும் வலது கையில் சக்கரமும் இடது கையில் சங்கும் காணப்படுகின்றன. வலது முன் கை காக்கும் நிலையிலும் இடது முன் கை கட்டிய வலம்பிதத்திலும் உள்ளன. கொற்றவை பொ.ஆ. 10ஆம் நூற்றாண்டாகலாம்.



சண்டிகேசுவரர் : திருவண்ணாமலை மாவட்டம், வந்தவாசி வட்டத்தில் கோட்டுப்பாக்கம் ஊருக்குத் தெற்கில் நஞ்சை நிலங்களுக்கு நடுவில் உள்ள பாறையின் அருகில் சண்டிகேசுவரர்

கற்சிலையும் இலிங்கமும் இருக்கின்றன சண்டிகேசுவரர் சிலை கனமான கற்பலகையில் அமர்ந்த கோலத்தில் செதுக்கப்பட்டிருக் கிறது தலையில் சடாமகுடம் உள்ளது வலது கையில் கோடரியை ஏந்தியும் வலது கை சிதைந்தும் காணப்படுகின்றன முப்புரி நூல் வலது கையின் முன் பக்கத்தில் செல்லுகிறது சிலையின் வடிவமைப்பைக் கண்ணுறும்போது சண்டிகேசுவரர் சிலை பொ.ஆ 9ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தது எனலாம்

**தீப்பாய்ந்தாள் கல்** : ஆந்திர மாநிலம், சித்தூர் மாவட்டம் காளகஸ்தி காளத்தீஸ்வரர் திருக்கோயிலின் இரண்டாவது திருச்சுற்றும், கோபுரத்தின் வாயில் அருகில் உள் பக்கத்தில் தீப்பாய்ந்தாள் கல் சிலை இருக்கிறது இந்தச் சிலையில் வீரனும் அவனுடைய துணைவியாரும் இணையாக நிற்கின்றனர் இவர்களுக்குப் பின் பக்கத்தில் திருவாசி செதுக்கப்பட்டிருக்கிறது வீரன் தன்னுடைய வலது கையில் போர் வாளை தரையில் ஊன்றியுள்ளான் இச்சிலை பொ.ஆ 16ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தது

**வீரக்கற்கள்** : மேற்படிக் கோயிலின் முன்பக்கத்தில் எழு வீரக்கற்கள் வரிசையாக உள்ளன இவற்றில் நான்கு நவகண்ட சிற்பங்களாகும் மற்றவை வீரக்கற்களாகும் நவகண்ட சிற்பங்களில் வீரன் தன்னுடைய கழுத்தில் கூரிய வாளை வைத்திருக்கின்றான் அதேபோல வீரக்கற்களில் வீரன் வலது கையில் வாளை தன்னுடைய தலைக்கு மேல் ஓங்கியும் இடது கையில் பெரிய கேடயத்தையும் ஏந்தியுள்ளான் இவையும் பொ.ஆ 16ஆம் நூற்றாண்டைச் சார்ந்ததாகலாம்

**மூத்தவள்** . வேலூர் மாவட்டம், வேலூர் வட்டத்தில் பள்ளிகொண்டா விற்கு வடகிழக்கில் உள்ள நாகநாதர் கோயிலுக்கு வெளியில் கிழக்குப் பார்த்தவாறு நடப்பட் டுள்ள புடைப்புச் சிற்பம் உயரமான மேடையில் அமர்ந்த நிலையில் கால்கள் இரண்டும் விரிக்கப்பட்டு பாதங்கள் தரையில் இறுத்திய நிலையில் உள்ளது வட்டமான முகத்துடனும், வலது கையில் தாமரை மொட்டையும் இடது கையினை இடது தொடையில் இறுத்தியவாறு காணப்படுகின்றது மூத்தவளுக்கு வலது பக்கத்தில் காக்கைக் கொடியும், இடது பக்கத்தில் துடைப்பமும் காட்டப்பட்டிருக்கின்றன மூத்தவளின் இருக்கையின் வலதுபுறத்தில் நந்தி மகன் தன்னுடைய வலது கையில் ஒரு குண்டாந்தடியைக் கொண்டுள்ளான் இடது பக்கத்தில் பணிப்பெண் அமர்ந்திருக்கிறாள் பணிப்பெண்ணின் தலையில் எளிய மகுடம் அழகு செய்கிறது ஆடைகளும் வளையல்களும் பல்லவர் பாணியில் பொ.ஆ 8ஆம் நூற்றாண்டைச் சார்ந்ததாக உள்ளது எனினும் அவை சன்னமாகத் தோற்றமளிக்கும் வகையில் செதுக்கப்பட்டிருக்கின்றன

**மூத்தவள்** : வேலூர் மாவட்டம், வாலாசாபேட்டை வட்டத்தில் திருமலைச்சேரி பொன்னியம்மன் கோயிலின் எதிரில் இருக்கின்றது கற்பலகையில் புடைப்பாகச் செதுக்கப்பட்டிருக்கும் சிற்பம் மூத்தவள் அமர்ந்த நிலையில் இரு கால்களை தரையில் நிறுத்தியுள்ளாள் இரண்டு கைகளையும் தன்னுடைய தொடைகள் மீது இறுத்தியுள்ளாள் காதுகளில் தடித்த காதணிகளும் கழுத்தில் தடிமனான ஆரங்களும் அணி செய்கின்றன



கைகளில் மூன்று மூன்று வளையல்களுடன் உள்ள இச்சிற்பம் மூத்தவளுடைய மார்பகங்களும் வயிறும் புடைப்பாகக் காட்டப்பட்டுள்ளன. இது பொ.ஆ. 9ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தது.

கொற்றவை : வேலூர் மாவட்டம், வாலாசாபேட்டை வட்டம் மேல் விசாரம் ஊரின் பாலாற்றின் தென் கரையில் உள்ள வசிஸ்டீசுவரர் கோயில் வளாகத்தில் நிறுத்தி வைக்கப்பட்டிருக்கிறது. கொற்றவை சிலை நின்ற கோலத்தில் வடிக்கப்பட்டிருக்கிறது. சிலையின் முகம் மற்ற உடல் உறுப்புகள் தேய்ந்துள்ளன. எனவே சிற்ப அமைதி தெளிவாகத் தெரியவில்லை. தலையில் இருக்கும் கரண்ட மகுடம் சிறியதாகச் செதுக்கப் பட்டிருக்கிறது. கொற்றவையின் முகம் முழுமையாகத் தேய்ந்துள்ளது. காதுகளில் தடித்த குண்டலங்கள் தொங்குகின்றன. பின் கைகளிலிரண்டில் சக்கரத்தையும் சங்கையும் பிடித்திருக்கிறாள். வலது முன் கை காக்கும் நிலையிலும் இடது முன் கை தொடை மீதும் இருக்கின்றன. ஆடை தடிப்பாகத் தோற்றமளிப்பதாலும் கை கால்கள் பல்லவர் கால கலை வெளிப்பாடாகவும் இருப்பதாலும் கொற்றவை சிற்பம் பொ. ஆ. 9ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தது என்ற முடிவிற்கு வரலாம்.

தீர்த்தகங்கரர் : வேலூர் மாவட்டம், அரக்கோணம் வட்டம் பாலாற்றின் தென் கரையில் களத்தூர் அமைந்துள்ளது. களத்தூருக் குத் தென் களந்தை என்றொரு பெயரிருக்கிறது. தீர்த்தங்கரர் சிலை புடைப்பாகச் செதுக்கப்பட்டிருக்கிறது. இவர் ஒரு பலகை மீது பத்ம ஆசனத்தில் தியான நிலையில் அமர்ந்திருக்கிறார். இவருடைய தலையைச் சுற்றிலும் சிறிய பிரபை செதுக்கப் பட்டிருக்கிறது. இந்தப் பிரபையின் வெளிப்புறத்தில் தீக்கொழுந்துகள் காட்டப்பட்டிருக் கின்றன. பிரபைக்கு மேல் பக்கத்தில் முக்குடையைச் செதுக்கியுள்ளனர். முக்குடையின் இரண்டு பக்கங்களிலும் பூ வேலைகள் உள்ளன. தீர்த்தங்கரரின் முதுகை ஒரு நீண்ட திண்டு தாங்குகிறது. இந்தத் திண்டின் முனைகளில் பக்கத்திற்கு



ஒருவர் வீதம் இயக்கர்கள் நின்று கொண்டு தீர்த்தங்கரரைப் போற்றுகின்றனர். இவர்களுடைய வெளிப்புறக் கைகளில் வெண் சாமரத்தை பிடித்திருக்கின்றனர். இயக்கர்களின் தலைகளை கரண்ட மகுடம் அணி செய்கிறது. இவர்களுடைய காதுகளில் வட்டமான கம்மல்கள் தொங்குகின்றன. தீர்த்தங்கரரின் வயிறு, மார்பு, நெஞ்சு, நெற்றி, தலை ஆகிய இடங்களில் வெள்ளியால் ஆன அரை உருண்டைகளைப் பதித்திருக் கின்றனர். இது தற்காலச் சேர்க்கையாகும். கலை அடிப்படையில் தீர்த்தங்கரை நோக்கினால் இந்தச் சிலை பொ.ஆ. 10ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியைச் சேர்ந்தது எனலாம்.

**ம. காந்தி, வேலூர்**

## 66 : 15 நடுகல்

ஈரோடு மாவட்டம், பவானி அருகே பட்டலூரில் வாகீஸ்வரமுடையார் கோயில் உள்ளது. இக்கோயிலின் தென்புறம் நடுகல் ஒன்று உள்ளது. இந்த நடுகல் கொங்கு சோழ மன்னன் வீரராஜேந்திரன் ஆட்சிக் காலத்தின் பிற்பகுதியைச் சேர்ந்தது. இதன் வலபுறம் தெய்வமாக இருவரின் உருவம் ஒரு கல்லிலும், இடபுறம் குதிரையின் உருவம் ஒரு கல்லிலும் செதுக்கப்பட்டு தனித்தனியாக வைக்கப்பட்டுள்ளன. வீரனின் கைகளில் ஆயுதங்கள் உள்ளன. இந்த நடுகல் வேட்டுவ குலத்தில் தோன்றிய ஒருவனுக்காக எடுக்கப்பட்டது.

நகவேட்டுவர் குலத்தைச் சேர்ந்த சிலம்பன் என்பவர் புலியுடன் போராடி இறந்துவிட்டான் என்ற செய்தியை நடுகல்லில் உள்ள கல்வெட்டு தெரிவிக்கிறது. இந்நடுகல் பொ.ஆ.13ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது.

**அ. பழனியப்பன், ஜம்பை**

## 66 : 16 கோர் ரோரி–சுமுரம் தமிழ் பிராமி எழுத்துப் பொறிப்பு



தெற்கு ஏமனில் உள்ள கோர் ரோரி வரலாற்றுத் தொடக்ககாலத் துறைமுகப் பட்டினமாகும். இவ்விடம் சலாலாவிற்குக் கிழக்கே சுமார் 40 கிமீ தொலைவில், அரபிக் கடற்கரையில் தோபார் பகுதியில் அமைந்துள்ளது. இப்பகுதியில் ஜேம்ஸ் தியாடார் பென்ட் மற்றும் அவரது மனைவி மாபேல் ஆகியோர் பத்தொன்பதாம் நூற்றாண்டில் கள ஆய்வு மேற்கொண்டனர். இவ்வூரின் பழைய பெயர் சுமுரம் என்பதாகும். கோட்டையுடைய இந் நகரம் ஹட்ராமவுத் அரசால் அமைக்கப்பட்டது எனக் கருதப்படுகின்றது. இப்பகுதி பிராங்கின்செனஸ் எனப்படும் குங்கிலிய

(வாசனையுடைய ஒரு வகை மரப்பிசின்) வியாபரத்திற்குப் புகழ்பெற்றதாகும். இந்தியாவிற்கும் மத்திய தரைக்கடல் நாடுகளுக்குமிடையே உள்ள கடல் வழியில் ஒரு சிறப்பான துறைமுகமாகக் இவ்விடம் கருதப்படுகின்றது. இங்கு இத்தாலியத் தொல்லியல் ஆய்வுக்குழுவைச் சார்ந்த முனைவர் அலேசாண்ட்ரா என்பவர் தலைமையில் ஆய்வு நடத்தினார். இந்தியப் பானை வகைகள் குறிப்பாக ரூலட்டட் தட்டின் துண்டுகள், சிவப்பு நிறப்பானை ஓடுகள் இங்கு கிடைத்துள்ளது குறிப்பிடத்தக்கதாகும். இங்கு கிடைத்துள்ள சிவப்பு நிறப்பானை ஓடுகள் கேரளாவில் பட்டணத்தில் கிடைத்துள்ள பானை ஓடுகளை ஒத்துள்ளன.

ஆம்போரா ஓடு ஒன்றில் '..ணந்தை கீரன்' என்ற தமிழ் பிராமி எழுத்துப் பொறிப்பு 2006ல் நடத்திய அகழாய்வில் கிடைத்துள்ளது குறிப்பிடத் தக்கதாகும். கேரள வரலாற்றாய்வுக் கழகம் 2011 ல் கேரளாவில் நடத்திய பணிப்பட்டறையில், முனைவர் அலெக்சியா பவன் அவர்களால் காட்சிப்படுத்தப்பட்டபோது இப்பானையோட்டுப் பொறிப்பு பேராசிரியர், கா. இராசன், முனைவர் து.தயாளன், மற்றும் பிறரால் அடையாளப் படுத்தப்பட்டது. 'ணந்தை கீரன்' என்னும் பெயர் பொறித்த இப்பானை ஓட்டின் முன் பகுதி உடைந்துள்ளது. இப்பெயர் 'கண்ணந்தை கீரன்' எனப் படிக்க வாய்ப்பு உள்ளது.

**வீ.செல்வகுமார், தஞ்சாவூர்**

## 66: 17 திண்டிவனம் வட்டத்தில் சிற்பங்கள்



விழுப்புரம் மாவட்டம் திண்டிவனம் வட்டத்தில் குரூர், வட நெற்குணம், பந்தாடு,ஆவணிப்பூர் ஆகிய ஊர்களில் தொன்மையான கொற்றவை, சப்தமாதர் சிற்பங்கள் காணப்படுகின்றன. இவை இப்பகுதியில் அன்று விளங்கிய கிராமிய வழிபாட்டிற்கு எடுத்துக்கட்டுகளாகும்

குரூர் : இவ்வூர் காளியம்மன் கோயிலில் அழகிய முற்காலச் சோழர் பாணி கொற்றவைச் சிற்பம் உள்ளது. பலகை கல்லில் அமைந்துள்ள இச்சிற்பம் எட்டுகரங்களுடன் திரிபங்கமாக எருமைத் தலையின் கொம்புகளிடையே வலதுகால் ஊன்றி இடது காலின் குதிகால் உயர்த்தி நிற்க்கிறது. கோலம் நடனமாடுவது போலவே அமைந்துள்ளது. கரங்களில் வில் - அம்பு, கத்தி - கேடயம், சங்கு - சக்கரம் முதலியவை இருக்க இடது தோளின் பின்புறம் பெரிய அளவில் சூலம் காட்டப்பட்டுள்ளது. இச்சிற்பம் மிக நேர்த்தியாகவும் அழகாகவும் அமைந்துள்ளமை சிறப்பாகும்.



மேலும் இவ்வூரில் இதே காலத்திய சப்தமாதர்கள், ஐயனார் உருவங்களும் அமர்ந்தநிலையில் திருமால் உருவமும் உள்ளன. சோழர் காலத்தில் இவ்வூர் சிவன், திருமால், எல்லைக் காவல் தெய்வங்கள் அமைந்த ஒரு சிறந்த ஊரமைப்புடன் விளங்கியமை இச்சிற்பங்களால் தெரியவருகிறது.



வடநெற்குணம் : இவ்வூரில் பெருமாள் கோயில் அருகில் பலகைக் கல்லில் சமபங்கமாக நின்ற நிலையில் எட்டுகரங்களுடன் கூடிய கொற்றவை சிற்பம் உள்ளது. நெடியவாள், வில், தோளின் பின்புரம் மான்,சிம்ம்ம் ஆகியவையும் உள்ளன. கரங்களின் தோற்றம் மானின் உருவ அமைப்பு ஆகியவை கிராமியக் கலை அமைப்பில் அமைந்த சோழர் காலச் சிற்பமாக இதனை வெளிக் காட்டுகின்றன.

பந்தாடு : இவ்வூர் காளியம்மன் கோயிலினுள் மாமல்லபுர பல்லவர் கொற்றவையை நினைவூட்டும் பலகைக்கல் கொற்றவை சிற்பம் வழிபாட்டில் உள்ளது. வலது தோளின்பின் சிம்மமும் இடது தோளின் பின் மானும் அழகுடன் உள்ளன. சங்கு, சக்கரம் உயர்ந்த வில், வாள், அம்பு ஆகியவையும் உள்ளன. இவ்வூரில் மாந்தன் மாந்தியுடன் கூடிய பிற்காலப் பல்லவர் ஜேஷ்டா சிற்பம் ஒன்றும் உள்ளது.



ஓங்கூர் : இவ்வூரில் கொற்றவை, ஜேஷ்டா, சண்டிகேஸ்வரர் சிற்பங்கள் உள்ளன. இவற்றில் சண்டிகேஸ்வரர் சிற்பம் மிக அழகிய முற்காலச் சோழர் சிற்பமாகும்.ஜடாமண்டலம், பத்திர குண்டலங்கள், வாகுமாலை, வாகு வலையம் ஆகியவை சிற்ப நுனுக்கம் மிக்கவை. கீழே தொங்கும் வலது கால் உடைந்துள்ளது

ஆவணிப்பூர் : இவ்வூர் தொடக்கப் பள்ளி அருகில் உள்ள அரச மரத்தடியில் ஒரு தீர்த்தங்கரர் சிற்பம் மார்பளவு புதைந்துள்ளது. தீர்த்தங்கரரின் பின்புறம் பிரபையும் மலர்கள் ஏந்திப் போற்றும் சூரியன் சந்திரன் உருவங்களும் உள்ளன. இதன் காலம் சுமார் 11 ஆம் நூற்றாண்டாகலாம். மேலும் இவ்வூரில் பலகைக்ல்லில் அமைந்த பல்லவர் கொற்றவை சிற்பம் ஒன்றும் உள்ளது. நெடிய வாளும் வில்லும் தோள்களின் பின்புறம் சிம்மமும் மானும் விளங்க இக்கொற்றவை காட்சித்தருகின்றாள். முழங்காலுக்குக் கீழ் சிற்பம் பதிக்கப்பட்டு கட்டப்பட்டுள்ளது. கடிபந்த குஞ்சரங்கள் அழகிய மடிப்புடன் விளங்குகின்றன.

தொன்மையான கொற்றவைச் சிற்பங்கள் உள்ள இவ்வட்டாரத்தில் இன்றும் சுதையால் செய்யப்பட்ட பெரிய காளி உருவங்கள் பல வழிபாட்டில் உள்ளமை குறிப்பிடத்தக்கதாகும்.

**கோ.உத்திராடம், அன்னம்பாக்கம்**

## 66: 18 பலகைக் கல் ஐயனார் சிற்பங்கள்



விழுப்புரம் மாவட்டம் கள்ளக்கொளத்தூர், சர்பசார், நெற்குன்றம், ஒரு கோடி ஆகிய ஊர்களில் தொன்மையான ஐயனார்சிற்பங்கள் பலகைக் கற்சிற்ப்பங்களாகக் கண்டறியப் பட்டுள்ளன. இவை பல்லவர் கால கிராமிய சிற்பக்கலை மற்றும் ஊர்த் தெய்வ வழி பாட்டிற்குச் சிறந்த எடுத்துக்காட்டுகளாக விளங்குகின்றன.

கள்ளக்கொளத்தூர் : மயிலம் அருகில் உள்ள இவ் வூரின் ஏரி வாய்க் கால் அருகில் 3½ உயரமுடைய தாக ஒரு ஐயனார் சிற்பம் மிக நேர்த்தியாக அமைந்துள் ளது. ஆண் - பெண் பணியாளர் இரு தோள் மருங்கிலும் நிற்க காலடியில் நாய் படுத்துள்ளது. ஐயனாரின் ஐடா மண்டலம் மிக அழகியது. அவரது உபவீதம் வலது கைமீது செல்கிறது. இடையில் குறுவாள் சொருகியுள் ளார். சிற்ப அமைதியில் முற்கால பல்லவர் காலமாக பொ.ஆ. 6-7 ஆம் நூற்றாண் டாகக் கருதலாம்.





சர்பசார் : சங்கராபுரம் வட்டத்தில் உள்ள இவ்வூரில் பாறை அருகில் ஒரு சிவன் கோயில் இருந்து அழிந்துள்ளது. இப்பாறையில் முதலாம் பராந்தகன், முதலாம் குலோத்துங்கள் , பிற்காலப் பாண்டியர் கல்வெட்டுகள் உள்ளன. இச்சிவன் கோயில் சுற்றுப்பகுதியில் அறியப்படும் ஐயனார், கணபதி சிற்பங்கள் பலகைக் கற்களில் அமைந்தவை. சரிந்து உத்குடி ஆசனத்தில் அமர்ந்துள்ள இவ்வய்யனாரின் இடதுகையில் ஒரு குடுவை உள்ளது. மூன்றரை அடி உயரமுள்ள இதனில் ஜடாமண்டலமும் கழுத்தில் தடித்த கழுத்தணியும் உள்ளன. சிற்பத்தின் நேர்த்தி கொண்டு முற்காலப் பல்லவர் காலத்ததாகக் கருதலாம்.



நெற்குன்றம் : திருக்கோயிலூர் வட்டத்தில் உள்ள இவ்வூரின் கிழக்குப் பகுதியில் 2½ அடி உயரமுடைய கற்பலகையில் ஐயனார் சிற்பம் உள்ளது. இடதுகால் அருகில் குதிரை உருவமுள்ளது. ஜடாமண்டலம் மூன்றடுக்கு உடையதாகக் காணப்படுகிறது. இதன் காலம் சோழர் காலமாகலாம். இதனருகே உடைந்த நிலையில் மற்றொரு ஐயனார் சிற்பமும் உள்ளது. இது பல்லவர் காலத்தைச் சேர்ந்ததாகும்.

ஒரு கோடி : விழுப்புரம் வட்டத்தில் உள்ள இவ்வூரில் சிவன் கோயிலின் மேற்குப் பகுதி வேப்பமரத்தடியில் 3½ உயரமுடைய பலகைக் கல்லில் இவ்வய்யனார் உருவம் உள்ளது. காலடியில் படுத்துள்ள நாயும் வலதுதோளின் பின்புறம் குதிரையும் இடது தோளின் பின்புறம் பணிப்பெண்ணும் உள்ளனர். ஐயனார்க்கு மீசை உள்ளமை குறிப்பிடத்தக்கதாகும்.முற்காலப் பல்லவர் சிற்ப அமைதியில் இச்சிற்பம் உள்ளது.

**சி. வீரராகவன், மங்கையர்கரசி விழுப்புரம்**

# 67. திருப்பரங்குன்றம் தமிழ் – பிராமி கல்வெட்டு

ஐராவதம் மகாதேவன், சென்னை

*அண்மையில் திருப்பரங்குன்றத்தில் 2 வரிகளில் தமிழ் - பிராமி கல்வெட்டு அறியப்பட்டு அதன் மைப்படியும், வரைபடியும், வாசகமும், செய்தியும் நாளிதழ்களில் வெளிவந்தது இக்கல்வெட்டினை நேரடியாக எடுத்த ஒளிப்படத்தினை படித்தறிந்த டாக்டர் பத்மஸ்ரீ ஐராவதம் மகாதேவன் கீழ்க்கண்ட கருத்துகளைத் தொலைபேசி மூலம் தெரிவித்துள்ளார்*

*இக்கல்வெட்டு இரண்டு வரிகளால் ஆனது இதன் மசிப்படத்தைவிட நேரடியாக எடுக்கப்பட்ட ஒளிப்படம் கல்வெட்டு எழுத்துகளைத் தெளிவாகக் காட்டுகிறது அதன் அடிப்படையில் இக்கல்வெட்டின் சரியான பாடம் பின்வருமாறு.*

1. மூநகர ஐ
2. மூல கஊதி

*இரண்டாவது வரியில் 'ல' எழுத்தின் நடுவில் பாறையில் உள்ள பிளவு காரணமாக அது 'ச' என்ற எழுத்துப்போலத் தோன்றுகிறது ஆனால் படத்தில் 'ல' கரம் தெளிவாக உள்ளது 'கஊதி' என்ற சொல்லின் நடு எழுத்தான 'உ' கரம் முதலில் விடுபட்டுப் போய் பின்னர் வரிக்குக் கீழே செதுக்கப்பட்டுள்ளது*

*இக்கல்வெட்டை TB-1 என்ற பட்டிபுரோலு முறையில் வாசிக்க வேண்டும் இந்த முறையில் எழுத்துக்கள் பெரும்பாலும் இரட்டிக்கப் படுவதில்லை முதல் வரியில் 'ஐ' என்பது 'ஐஐ' என்று (அதாவது ஐயை) என்று வாசிக்கப்பட வேண்டும் இரண்டாவது வரி 'கஊதி' என்பதைக் 'கவுட்டி' என்று வாசிக்க வேண்டும் இவ்விரு சொற்களுக்கும் 'சமணத் துறவி' என்று சூடாமணி நிகண்டில் பொருள் கொடுக்கப்பட்டுள்ளது ஆகவே இக்கல்வெட்டின் திருத்திய பாடமும் பொருளும் பின்வருமாறு·*

1. மூநகர ஐயை
2. மூல கஊதி

பொருள் : *மூநகரத்தைச் சேர்ந்த ஐயை மூல கவுதி (என்ற சமணப் பெண் துறவி)*

*மூநகர என்பதற்கு மதுரை என்ற பொருள் கொள்ளப்பட்டுள்ளது சிலப்பதிகாரத்தில் மதுரை, மூதூர் என்று குறிப்பிடப்படுகிறது இருப்பினும் 'மூநகர' என்பதற்கு வேறு விதமாகவும் பொருள் கொள்ளலாம் நகரம் என்ற சொல் நகரத்தார் என்ற வணிகப் பெருமக்களைக் குறிக்கும் கல்வெட்டில் குறிக்கப்பட்டுள்ள சமணப் பெண் துறவி நகரத்தார் சமூகத்தைச் சேர்ந்தவராக இருக்கக் கூடும் கல்வெட்டின் காலம் கி மு முதல் நூற்றாண்டு இதில் உள்ள 'ஐ' கர எழுத்து முதன் முறையாக வருகிறது என்பதைச் சிறப்பாகக் குறிப்பிட வேண்டும்*

# 68. திருக்காட்டுப்பள்ளி விருபாக்ஷராயர் கல்வெட்டும் மக்கென்சி தொகுப்பும் – ஒரு குறிப்பு

எ. சுப்பராயலு, சு. இராசவேலு

கிழக்கிந்தியக் குழுமத்தின் முதல் அளவாளராக இருந்த மக்கென்சியும் அவரது உதவியாளர்களும் தென்னிந்தியாவில் நிலப்படங்கள் வரைவதிலும் பல அரிய வரலாற்று ஆவணங்களையும் தொகுக்கும் பணியில் ஈடுபட்டனர் அவ்வகையில் தமிழகத்தில் பல கோயில்களில் இருந்த கல்வெட்டுக்கள் இவர்களால் நேரிடையாகப் படிக்கப்பட்டு ஆவணப்படுத்தப்பட்டன தஞ்சாவூர் மாவட்டம் திருக்காட்டுப்பள்ளி கோயிலின் கருவறைச் சுவரில் உள்ள ஒரு கல்வெட்டு அவ்வாறு 1800ஐ ஒட்டி மக்கென்சி உதவியாளரால் படிக்கப்பட்டு மக்கென்சி சுவடித்தொகுப்பில் சேர்க்கப்பட்டு இருந்தது இது தென்னிந்திய கோயில் கல்வெட்டுகள் எண் 595இல் திரு திநா சுப்பிரமணியன் அவர்களால் பதிப்பிக்கப்பட்டுள்ளது இக்கோயிலில் மைய அரசு தொல்லியல் ஆய்வுத்துறையின் கல்வெட்டுப்பிரிவினர் 1897ல் படியெடுத்து நான்கு கல்வெட்டுக்களைத் தொகுத்து வெளியிட்டுள்ளனர் (தென்னிந்திய கல்வெட்டுகள், 6, எண் 1-4) ஆனால் மக்கன்சி உதவியாளரால் ஆவணப்படுத்தப்பட்ட மேற்கூறிய கல்வெட்டு மைய அரசின் தென்னிந்தியக் கல்வெட்டுத் தொகுதியில் காணப்படவில்லை

இக்கோயிலில் தற்சமயம் மேற்குப்புறச்சுவரை அணைத்து எழுப்பப்பட்டுள்ள மேடைப்பகுதியினால் இக்கல்வெட்டின் முக்கியமான சில பகுதிகள் மறைக்கப்பட்டுள்ளது (இம்மேடை எப்பொழுது கட்டப்பட்டது என்று தெரியவில்லை எஞ்சியுள்ள பகுதியை நேரில் நாங்கள் படித்த பாடம் கீழே முதற்பகுதியில் கொடுக்கப்பட்டுள்ளது மறைந்துள்ள பகுதி மக்கென்சியின் பாடத்தைக் கொண்டு பிறையடைப்புக்குள் நிரப்பியுள்ளோம் மக்கென்சியின் முழுப்பாடம் பகுதி இரண்டில் உள்ளது

மக்கென்சியின் உதவியாளர் முறையாகக் கல்வெட்டுப் பயிற்சி பெறாதவர்; மேலும் மூலபாடத்தைத் மாற்றி, தாங்கள் வழங்கிய மொழியில் குறித்து வைத்தனர் ஆகவே அந்தப் பாடத்தில் மிகுந்த அளவில் குறையுள்ளதில் வியப்பில்லை இருப்பினும் அவர்கள் படித்துத் தொகுத்த பல கல்வெட்டுகள் தற்பொழுது மறைந்துவிட்டன அல்லது திருக்காட்டுப்பள்ளி கல்வெட்டு போன்று அரைகுறையாக அழிந்து கிடைக்கும் நிலையில் உள்ளன அவ்வகையில் வரலாறு ஆவணங்களைத் தொகுத்தளித்த மக்கென்சிக்கு நாம் மிகவும் கடமைப்பட்டுள்ளோம் என்றால் அது தவறாகாது

*திருக்காட்டுப்பள்ளி கல்வெட்டுச் செய்தி:*

*வல்ல நாடு, இரண்டுகரை நாடு முதலிய பகுதிகளைச் சேர்ந்த பஞ்சாளத்தார் (கொல்லர், தச்சர், தட்டார் முதலியோர் அடங்கிய கம்மாளர்) கூட்டமாகத் திரண்டு இக்கோயிலில் தங்கள் பொருட்டு திருவிழாக் கொண்டாட தோப்பு ஒன்று வைத்து அதில் ஒரு மண்டபமும் கட்டித் திருவிழாச் செலவுக்கு வீடுதோறும் கலியாணம் முதலிய நேரங்களில் குறிப்பிட்ட தொகையைக் கொடுப்பதாக முடிவு செய்தனர் இதுபோன்று ரதகாரர் (கம்மாளரின் இன்னொரு பெயர்) கூடிச்செய்த வேறொரு முடிவைப் பற்றிய கல்வெட்டு புதுக்கோட்டை மாவட்டம் குன்னாண்டார் கோயில் உள்ளது (புதுக்கோட்டைக் கல்வெட்டுகள், எண் 689)*

*இப்பொழுது கோயிலில் கிடைக்கும் பாடமும் (மக்கென்சியின் பாடமும்)***

1. சுபமஸ்து ஸ்வஸ்தி ஸ்ரீ மந் மஹாமண்டலீசுரன் அரிய இராய விபாடன் பாஷைக்குத் தப்புவ இராயர் கண்டன் மூவராயர் கண்டன் கண்ட நாடு கொண்டு கொண்ட நாடு குடாதான் (பூஞ் ஷளாயச சம்பிதகா சமுத்திராருபதி கமன இராசராணடு இராசா தனது ரோசபா மேதான கெசமே)ஞ்
2. ருளிய ப்ரதாப–தேவராய மஹா இராயர் குமார விருபாக்ஷ இராயர் ப்ரதி இராஞ் பண்ணி அருளா நின்ற சகாப்தம் 1380ன் மேல் செல்லா நின்ற விய வருஷத்து கன்னி நாயற்று பூர்வபக்ஷத்து ஷஷ்டியும் சோம வாரமும் பெற்ற அனுழத்து நாள் பாண்டிகுலாசனி வளநாடு எயில் நாட்டு ஆற்காட்டு கூற்றத்து யில்)ஞ்
3. மேலை முட்டி திருக்காட்டுப்பள்ளி திருக்காட்டுப்பள்ளி உடையநாயனார் கோவில் ஆதிசண்டேசுர தேவகன்மிகளுக்கு இந்தப் (வுத்தம கெற்பனை வுடன்வட்டக்காரும் ஒருத்தன் வீரகளளைஞ்சனிமாரு)ம் இரண்டு கோயிலும் இரண்டு கரை நாடும் (பெரிய ஊர் வரம்பநதான கோட்டை உடன்கூட்டத்தாரும் வல்ல)
4. நாடு பஞ்சாளத்தாரும் நாலுநாடு பஞ்சாளத்தாரும் நிறைவற நிறைந்து குறைவறக் கூடி முழுதுமல்லான் மண்ட(பத்தில் இருந்து முன்ன நாலு மண்டலமும் கசு கூடுகையம) யாண்டு இந்த (சமய)ப்படி திருப்பணிக்கு (வஞ் ணகக்கு யிரண்டு குணமும் கல்விஆணத்து ஒரு பணமும் கஞ்)
5. வாழிமோதிரத்து ஆதிஅந்த சமயத்திலெ இருந்தபடிஆலெ யிம்மதிகாரியம் தந்து எங்கள் உபைய(ம் ஆக னடந்தப் பெஞ்.டு நாள் யிஷப வாஹனத் திரு)நாள் முழுதுமல்லான் தோப்பிலெ நடத்த தோப்பு வைத்த எல்லை ஆ(ன சந்திரரேகை வாயிக்காலுக்கும் வழிக்கும் வழிக்கும் தெற்கு ஒன்ப)

6. திற்றுவெலி எல்லைக்கு மேற்க்கு பெருமாள் பெருவழிக்கு வடக்கு ஆலுக்கு கிழக்கு யிந்த நான்கெல்லைக்கு உட்பட்ட நிலம் (உள்ளது தென்னமரம் பலாமரத்தும் பல மரமும்) தொப்பு ஆக வைத்து சந்திராதித்த வரையிலும் யிந்த தொப்பும் யிந்த திருநாளும் (எங்கள் சுவந்திரமும் சந்திராதித்த வரையிலும் சருவ மானியமும் நாங்கள் நடத்தி)

7. தற கடவோமாகவும் யிந்த கல்வெட்டுக்கு விக்கினம் பண்ணிநால் கங்கைக் கறையில் காராம் பசுவை கொன்ற பாவத்திலே (போகக் கடவார்கள் ஆகவும் ஸுபமஸ்து)

***இப்பொழுது கல்லால் மறைக்கப்பட்டுள்ள பகுதிக்கு மட்டும் மக்கென்சியின் பாடம் பிறை அடைப்புகளுக்குள் கொடுக்கப்பட்டுள்ளது*

# 69. இந்திய காலமுறை

**மோகன சுந்தர், சென்னை**

*உலக அளவில் கிறித்துவ ஆண்டை மையமாக வைத்து காலமுறைப் பின்பற்றப்படுகிறது எனினும் இந்தியர்கள் கால முறையைக் கீழ்க்கண்டவாறு பகுத்தார்கள்*

நான்கு யுகங்கள்

| | | |
|---|---|---|
| 1. | கிருத யுகம் | 17,28,000 வருடங்கள் |
| 2 | திரேத யுகம் | 12,96,000 வருடங்கள் |
| 3 | துவாபரயுகம் | 8,64,000 வருடங்கள் |
| 4. | கலியுகம் | 4,32,000 வருடங்கள் |
| | *சதுர்யுகம் / மஹாயுகம்* | *43,20,000 வருடங்கள்* |

*71 சதுர் / மஹாயுகங்கள் ஒரு மன்வந்தரம்*

பதினான்கு மன்வந்தரங்கள்

1. சுயம்புவ மன்வந்தரம்
2. சுவரோச்சிச மன்வந்தரம்
3. உத்தம மன்வந்தரம்
4. தாமச மன்வந்தரம்
5. ராய்வத மன்வந்தரம்
6. சக்சுச மன்வந்தரம்
7. வைவஸ்வத மன்வந்தரம் (தற்சமயம் நடப்பது)
8. சூரியசர்வானி மன்வந்தரம்
9. இந்திரசர்வானி மன்வந்தரம்
10. பிரம்மசர்வானி மன்வந்தரம்
11. ருத்திரசர்வானி மன்வந்தரம்
12. தக்சயசர்வானி மன்வந்தரம்
13. ரோச்சிய மன்வந்தரம்
14. பைசிய மன்வந்தரம்

*பதினான்கு மன்வந்தரங்களும், 6 மஹாயுக இடைவெளிகளும் சேர்ந்தது ஒரு கல்பம்*

ஏழு கல்பங்கள்

1. பார்தீவ கல்பம்
2. கூர்ம கல்பம்
3. பிரளய கல்பம்
4. ஆனந்த கல்பம்
5. ஸ்வதவராக கல்பம் (தற்சமயம் நடப்பது)
6. பிரம்ம கல்பம்
7. சாவித்திரி கல்பம்

*1000 கல்பங்கள் பிரம்மாவின் ஒரு பகல் 1000 கல்பங்கள் பிரம்மாவின் ஒரு இரவு*

*ஒரு கல்பம் என்பது 432 கோடி ஆண்டுகள்* (43,20,000 x 1000)

# 70. புதிய வெளியீடுகள்

இர்ஃபன் ஹவிபு மற்றும் ஃபைஸ் ஹவிபு, பண்டைய இந்திய வரலாற்று அட்லஸ், ஆக்ச்ஃபோர்டு அச்சகம், 2012 (**Irfan Habib & Faiz Habib, Atlas of Ancient Indian History, New Delhi, Oxford University Press, 2012), 13** படங்கள் **133** பக்கம்.

*இந்த நூலின் முதல் ஆசிரியரான இர்ஃபன் ஹவிபு 1982இல் வெளியிட்ட முகலாயப் பேரரசின் அட்லஸ் (Atlas of the Mughal Empire) பலரும் அறிந்த ஒன்று ஏறக்குறைய அதே தொழில்நுட்பத்தைக் கையாண்டு இந்த அட்லஸை அவரும் அவருடைய மகனும் இணைந்து செய்துள்ளனர் கடந்த ஒரு நூற்றாண்டுக்கும் மேலாக தென்னாசியாவின் தொல்பழங்காலம் மற்றும் முன்வரலாற்றுக்காலம் பற்றி செய்யப்பட்டுள்ள ஆய்வுமுடிவுகளின் சாரத்தைப் பன்னிரண்டு நிலப்படங்களாகச் செய்து தந்துள்ளனர் முதல் படத்தில் கற்கருவிப் பண்பாடுகள் பற்றியும், தொடர்புடைய மனித இனத்தின் மூதாதையரின் தோற்றமும் பரவலும் பற்றியும் சொல்லப்படுகிறது இரண்டாம் படத்தில் குறுணிக்கற்கருவி காலம் மற்றும் புதிய கற்காலம் பற்றிய விவரம் உள்ளது மூன்றாம் படத்தில் சிந்துசமவெளி நாகரிகம் பற்றியது படங்கள் 4,5 கிமு 1800-600 காலகட்டத்தில் தொல்லியல் மற்றும் வரலாற்று நிலவியல் பற்றியன படம் 5இல் திராவிட மொழிக்குடும்பம் இந்தோ-இரானிய (அதாவது ஆரிய) மொழிக்குடும்பம் ஆகியவற்றின் தொடக்கநிலைகள் மற்றும் பரவல் பற்றிய செய்திகள் குறிப்பிடத்தக்கவை 6ஆம் படம் கிமு 600-320 காலகட்டத்தில் நிலவிய அரசு, பொருளதாரம் பற்றியது 7ஆம் படம் மௌரியப்பேரரசு காலத்திய வரலாறு பற்றியது இப்படத்திலும் அடுத்த (8) படத்திலும் தமிழ்பிராமி பற்றிய செய்தி கொடுக்கப்பட்டுள்ளது 8, 9ஆம் படங்கள் கிமு 200-கிபி 300 காலகட்ட அரசியல் மற்றும் பொருளாதாரம் பற்றியவை 9இல் தங்க, வெள்ளி நாணயச் செலாவணியை வைத்து குஷாண நாணய வட்டாரம், க்ஷத்ரப நாணய வட்டாரம், ரோம நாணய வட்டாரம் எனப் பாகுபாடு செய்யப்பட்டுள்ளது இந்தப் பாகுபாடு அக்கால உள்நாட்டு வணிகத்துக்கும், அயல்நாட்டு வணிகத்துக்கும் உள்ள தொடர்பைப் பற்றி மேலும் ஆராய உதவும் 10இல் கிபி 300-550 கால வரலாறு, 11இல் கிபி 550-750 கால வரலாறு பற்றியும் 12இல் 500-800 காலப் பொருளாதார நிலை பற்றியும் சொல்லப்பட்டுள்ளன எல்லாப் படங்களிலும் அவ்வக்காலத்தில் இருந்த ஊர்கள் (அல்லது தொல்லியல்/ இருப்பிட நிலைகள்), அரசு அல்லது பண்பாட்டு வட்டாரங்கள், ஆறுகள் ஆகியன பெயர்களோடு குறிக்கப்பட்டுள்ளன கூடவே அவ்வவ்வூர்கள் தொடர்பான பொருளாதாரச் செய்திகள் (கருவிகள், தானியங்கள் முதலிய உணவுபொருள், போன்றவை, கைவினைப்பொருள், மண்கலங்கள், உலோகங்கள், கல்மணிகள்) தரப்பட்டுள்ளன*

இரண்டாம் பகுதியில் (பக்கம் 1-110) பன்னிரண்டு அதிகாரங்களில் நிலப்படங்கள் தொடர்பான தரவுகள், மூலநூல்கள், கல்வெட்டுகள், நாணயங்கள், வணிகப்பொருள், மண்கலவகை போன்றவற்றைப் பற்றிய செய்திகள், காலக்கணக்கீடு பற்றிய விவாதங்கள், இனக்குழுக்கள், அரசுகள், ஊர்கள், வட்டாரங்கள் ஆகியன பற்றிய விவரங்கள் எல்லாம் விரிவாகக் கொடுக்கப்பட்டுள்ளன இதற்குப் பின் சுட்டுநூற்பட்டியலும், மூன்று சொல்லடைவுகளும் இணைக்கபட்டுள்ளன முதல் அடைவில் படங்களில் குறிக்கப்பட்டுள்ள சுமார் 1075 ஊர்கள் அல்லது இடப்பெயர்கள் அவற்றின் நிலக்குறுக்குக்கோணம் மற்றும் நெடுங்கோணங்களுடன் (coordinates) கொடுக்கப்பட்டுள்ளன இரண்டாம் அடைவில் அரசுகள், வட்டாரங்கள் பற்றிய பட்டியலும், மூன்றாம் அடைவில் ஆறுகளின் பெயர்ப்பட்டியலும் உள்ளன

விருப்பு வெறுப்புக்கு இடமில்லாமல் இந்திய/தென்னாசிய வரலாற்றை நிலப்படம் மூலமாக விளக்கும் இந்த நூலில் தென்னிந்திய மற்றும் தமிழ்நாட்டுச் செய்திகளுக்கு உரிய இடம் கொடுத்துள்ளது பாராட்டத்தக்கது சில சிறு குறைகளும் உண்டு காவிரிப்பூம்பட்டினம் விடுபட்டுவிட்டது படம் 5இல் தென்னிந்திய புதியகற்காலப் பண்பாட்டு நிலைகளையும் பெருங்கற்படைக்காலப் பண்பாட்டு நிலைகளையும் ஒருசேரக் காட்டியிருப்பதால் பெருங்கற்படைக்கால நிலைகளுக்கு போதிய முக்கியத்துவம் தரப்படவில்லை இதற்குப் படத்தின் சிறிய அளவும் (1 செ.மீ =90 கிலோமீட்டர்) ஒரு காரணம் ஆசிரியர்கள் இப்படங்களை கணிப்பொறி உதவியில்லாமல் பழைய முறையில் கையாலேயே வரைந்து உருவாக்கியுள்ளனர் என்பது மனங்கொள்ளத்தக்கது ஆசிரியரின் கடின உழைப்பும் பரந்த அறிவும் இந்நூல் முழுக்கக் காணலாம் இந்த வரலாற்றுப் பெட்டகம் ஆசிரியர், மாணவர், ஆர்வலர் ஆகிய யாவருக்கும் உறுதுணையாக நிற்கும் என்பதில் இருவேறு கருத்திருக்க முடியாது

**எ. சுப்பராயலு, கோயம்புத்தூர்**

## முனைவர் தி. சுப்பிரமணியன், தமிழகத்தில் பெருங்கற்காலப் பண்பாடு, நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் (பி) லிட், சென்னை, 2011, பக். 231.

உலகெங்கும் இறந்தவர்களைப் பல முறைகளில் அடக்கம் செய்து இறந்தவர்களின் ஆவியை அமைதிப்படுத்தும் வழக்கம் மிகப் பழங்காலத் திலிருந்து இருந்து வருகிறது இறந்தவர்களின் ஆவியைத் திருப்திபடுத்துவதன் மூலம் தங்கள் வாழ்வு வளம் பெருகிச் செழிக்கும் இறந்தவர்களின் ஆவி தங்களைத் துன்புறுத்தாதுஎன்ற நம்பிக்கை மிகப் பழங்காலத்திலிருந்து மக்களிடையே இருந்து வருகிறது இதனால் இறப்புச் சடங்குகளை விரிவாகச் செய்து தங்கள் பொருளாதார நிலைக்கு ஏற்ப கல்லறைகள் உருவாக்கி அவற்றில் படையல்கள் வைத்துப் போற்றுகின்றனர் இதனைத்

*தமிழக வரலாற்றுச் சான்றுகள் மூலம் விரிவாக இந்நூல் ஆய்வு செய்துள்ளது தமிழ்நாட்டில் பல வடிவங்களில் ஈமச் சின்னங்கள் அமைக்கப்பட்ட முறைகள், அவற்றில் வைக்கப்பட்டிருந்த படையல் பொருட்கள், அவற்றின் மூலம் அறியப்படும் மக்களின் நம்பிக்கைகள், சமூகப் பொருளியல் நிலைகள் குறித்து ஆழமாக இந்நூல் ஆய்வு செய்துள்ளது மேற்பரப்பு ஆய்வுகள், அகழாய்வுகள் செய்து அவற்றின் மூலம் பெறப்பட்ட அரிய செய்திகளை இந்நூலாசிரியர் தந்துள்ளார் தொல்லியல் துறையில் நீண்ட காலம் அனுபவம் பெற்ற இந்நூலாசிரியரின் இம்முயற்சி தமிழ்நாட்டில் பெருங்கால ஈமச் சின்னங்கள் பற்றி அறியவிழைவோர்க்கு நல்விருந்தாகும்*

**முனைவர் வெ. வேதாசலம், மதுரை**

**ச.மா. இரத்னவேல், ஸ்ரீவை. நா. கள்ளபிரான், பாசன ஏரிகளின் பாரம்பரியத்தைத் தேடி..., பாவை பப்ளிகேஷன்ஸ், சென்னை, 2013, பக். 128.**

*உலகளவில் பாசனத் தொழில்நுட்பம் குறித்து நீண்ட காலம் பாசனத் துறையில் தமிழ்நாட்டில் பணியாற்றி ஒய்வு பெற்ற துறைபோகிய பாசனத் தொழில்நுட்பப் பொறியாளர்களால் இருவரால் எழுதப்பட்ட நூல் இது தமிழ்நாட்டில் காணப்படும் சிறப்பும் தனித்தன்மையும் வாய்ந்த பண்டையப் பாசனத் தொழில்நுட்பம் போற்றிப் பாதுகாக்கப்பட வேண்டும் என்ற ஆதங்கத்தோடு இந்நூல் எழுதப்பட்டுள்ளது ஓரளவு வரலாற்று நோக்கோடு தற்காலப் பாசனப் பொறியாளரின் கள ஆய்வுப் பார்வையில் தமிழ்நாட்டின் பண்டைய ஆற்றுப்பாசனம், ஏரிப் பாசனம் போன்றவை எவ்வாறு இருந்துள்ளன என்பதை உரிய ஒளிப்படங்கள், வரைபடங்களோடு இந்நூல் தெளிவாக்குகிறது ஆற்றுப் பாசனத்தைவிட ஏரிகளின் தோற்றம், அமைப்பு, பாசனக் கட்டமைப்புகள், வளர்ச்சி, தளர்ச்சி பற்றி விரிவாகவும் ஆழமாகவும் இந்நூல் எடுத்துக் கூறுகிறது மேலும் கற்சிறை எனப்படும் பண்டைய தடுப்பணைகளின் கட்டுமானச் சிறப்பும் இந்நூலில் விளக்கப் பட்டுள்ளது பண்டைய பாசன ஏரிகளின் பாரம்பரியத் தொழில்நுட்பம் குறித்து அண்மையில் வந்த நூற்களில் குறிப்பிடத்தக்கதாக இந்நூல் திகழ்கிறது*

**முனைவர் வெ. வேதாசலம், மதுரை**

**அமுதன் அடிகள், வரலாற்றில் புன்னைக் காயல் , 2012, தியான இல்லம், வேளாங்கண்ணி, XIX + 194 பக்கங்கள், விலை ரூ. 150/–**

*சமூகப் பண்பாடுகளின் தாக்கங்களை அறிய வட்டார, உள்ளூர் வரலாற்றறு ஆய்வுகள் மிகுதியான அளவில் மேற்கொள்ளப்பெறவேண்டும் இதுபோன்ற முயற்சிகள் பல தமிழகத்தில் மேற்கொள்ளப்பெற்று*

வருகின்றன அவ்வகையில் ‘வரலாற்றில் புன்னைக் காயல்’ என்னும் இந்நூல் வெளிவந்திருப்பது பாராட்டிற்குரியது இந்நூலாசிரியர் தாம் பிறந்த ஊரான புன்னைக்காயலின் வரலாற்றை வெளிக்கொணர்ந்திருக்கிறார் புன்னைக்காயலில் தற்போது மிகுதியாக வசிக்கின்ற பரத இனத்தவரின் பண்டைக்கால வரலாற்றை முதலில் அறிமுகம் செய்கின்றார் இடைக்காலத்தில் காயலுக்கும் சீனம் உள்ளிட்ட கடல் கடந்த நாடுகளுக்கும் இடையில் இருந்த தொடர்பை சான்றுகளுடன் குறித்துள்ளார் போர்த்து கீசியர்களின் வருகையினால் ஏற்பட்ட கிறித்தவ மதமாற்றம் மற்றும் இசுலாமியர் விசய நகர மன்னர்களுக்கிடையேயான உறவுகள் இதனால் பரதவர்களுக்கு போர்த்துக்கீசியர் அளித்த உதவிகள் மற்றும் மதமாற்றம் குறித்த செய்திகளைச் சான்றுகளினடிப்படையில் அளித்துள்ளார் புனித சவேரியர் முத்துக்குளித்துறைக்கு வந்த வரலாறு தொடங்கிப் பின்னர் ஏற்பட்ட வரலாற்று நிகழ்வுகளை லிஸ்பன் நகரில் உள்ள போர்த்துகீசிய ஆவணங்களில் கிடைக்கும் சான்றுகளையும் இந்தியாவில் கிடைக்கும் சான்றுகளையும் ஒருங்கிணைத்து கிறித்துவ சபைகளின் நடவடிக்கைகள், புன்னைக்காயலைச்சுற்றியுள்ள ஊர்களுடனான உறவுகள், கோவில்கள், இயேசு சபைத் துறவிகளின் சமூகப்பணிகள், புன்னைக்காயலில் நடைபெறும் திருவிழாக்கள், புன்னைக்காயலில் பிறந்து சமூக மேம்பாட்டிற்காக உழைத்த பெரியோர்கள் போன்றன குறித்த வரலாற்றுச் செய்திகளைத் திறம்பட அளித்துள்ளார் தமிழகக் கடல்சார் வரலாற்றிற்கு மிகவும் பயனுள்ள இதுபோன்ற நூல்களை எழுத விரும்பும் இளைய தலைமுறையினருக்கு இந்நூல் வழிகாட்டியாக அமைகிறது

**ந. அதியமான், தஞ்சாவூர்.**

**செ. இராசு, கொங்கு வேளாளர் குல வரலாறு, இரண்டு பாகங்கள், 2012, கொங்கு ஆய்வு மையம், ஈரோடு, 646 பக்கங்கள், விலை ரூ. 350/ – (இருபாகங்களும்).**

கொங்கு வேளாளர் குல வரலாறு என்னும் இரு தொகுதிகளிலான இந்நூல் இதுவரை ஆசிரியர் எழுதிய பல கொங்கு வேளாளர் குலங்களைப் பற்றிய வரலாற்றாய்வுகளின் முழுத்தொகுப்பாகும் கல்வெட்டு, செப்பேடு, ஓலைச்சுவடி, காணிப்பாடல்கள், இலக்கியம் வழியான அனைத்துத் தரவுகளையும் ஒருங்கிணைத்து ஒட்டுமொத்த கொங்குச் சமூகத்தின் வரலாற்றை இந்நூலாசியர் அளித்துள்ளார் இந்நூலில் முன்னரையாக கொங்குநாடு என்னும் பெயர் வழங்கியமையைச் சங்கப்பாடல்களில் காணும் சான்றுகளைக் கொண்டு விளக்குகிறார் கொங்கு என்னும் சொல்லுக்கான பெயர்க்காரணம், கொங்குநாட்டுப் பிரிவுகள், கொங்கு வேளாளர்கள் யார்? அவர்தம் தொழில், கொங்குநாட்டிற்கும் வேளாளருக்கும் உள்ள பூர்வீக உறவுகள், குலம்-கூட்டம்-கோத்திரம் குறித்த செய்திகளையும் காமிண்டர் - கவுண்டர் சொற்களுக்கான விளக்கம் மற்றும் கொங்கு வேளாளர்களின்

சமூகம் குறித்தும் அளித்துள்ளார் இதுவரை கொங்கு வேளாளர் பற்றி மேற்கொண்ட ஆய்வுகள் குறித்தும் விரிவாக தம்நூலில் அளித்துள்ளார் பின்னர் அக்கினி குலம்தொடங்கி வேந்தன் குலம் வரையிலான 102 குலங்களின் வரலாற்றுப் பின்னணிகளைச் சான்றுகளைக் கொண்டு விரிவாக அளித்துள்ளார் மேலும், கொங்கு வேளாளர் கிளையினாராக பத்து கிளையினர் குறித்த வரலாற்றுச் செய்திகளையும் அளித்துள்ளார் சமூக வரலாறு எழுத முற்படும் ஆய்வாளர்களுக்கு இந்நூல் வழிகாட்டியாக அமையும்

**ந. அதியமான், தஞ்சாவூர்.**

**செ.இராசு (பதிப்பாசிரியர்) , திருச்செங்கோட்டுத் திருப்பணிமாலை, கொங்கு ஆய்வு மையம், ஈரோடு, 328 பக்கங்கள், 16 படங்கள், விலை ரூ. 200/–**

திருச்செங்கோடு சதாசிவ பண்டிதர் இயற்றி திருச்செங்கோட்டுத் திருப்பணிமாலை என்னும் நூலை அட்டாவதனம் தி அ முத்துசாமிக் கோனார் 1912-ஆம் ஆண்டு ஓலைச்சுவடியிலிருந்து நூலாகப்பதிப்பித்தார் இந்நூல் நூறாண்டுகள் கழித்து மீண்டும் செம்பதிப்பாக வெளிவருகிறது. இப்பதிப்பில் பழைய நூலிலுள்ள குறைகளைக் களைந்தும் பல புதிய வரலாற்றுச் செய்திகளைக் கண்டறிந்தும் பதிப்பாசிரியர் செம்மையாகப் பதிப்பித்துள்ளார் இந்நூல் முதன்முதலில் பதிப்பிக்கப்பெற்ற வரலாறு, அதுகுறித்த செய்திகள் குறித்து பதிப்பாசிரியர் முன்னுரையில் அளித்துள்ளார் சங்ககிரியில் நிர்வாகம் செய்த நாயக்கர் கால அதிகாரிகள் குறித்த செய்திகளையும் பின்னர் இருந்து ஜமீன்தார்கள் குறித்தும் அவர்களால் திருச்செங்கோட்டுக் கோயிலுக்குக் கிடைத்த திருப்பணிகள் குறித்தும் திருப்பணி மாலையில் உள்ளவாறு விளக்கியுள்ளார் திருச்செங்கோட்டு குருக்கள் குறித்த செய்திகளையும் தந்துள்ளார் கோயில் திருப்பணியில் பங்குபெற்ற பிற சமூகத்தினர் மற்றும் பெண்களின் திருப்பணிகள் குறித்த வரலாற்றுச்சான்றுகளையும் முன்னுரையில் அளித்துள்ளார் பின்னர் ஒவ்வொரு செய்யுளையும் அளித்து அதற்குப் பாடற்பொருள் அளித்துள்ளது படிப்போருக்கு எளிமையாகப் புரியும் வண்ணம் அமைகிறது இப்பாடற்பொருளில் வரலாற்றுக்குறிப்புகளையும் ஆண்டுகளையும் அளித்துள்ளமை கோயிலுக்கு நடைபெற்ற திருப்பணிகள் குறித்த செய்திகளைப் பற்றிக் காலவாரியாக அறியமுடிகிறது இறுதியில் திருச்செங்கோடு குறித்த இலக்கியங்களை அட்டவணையில் பதிப்பாசிரியர் அளித்துள்ளார் திருச்செங்கோட்டு குருக்கள், தேர் மற்றும் கோயில் சிற்பங்கள், நடுகல் போன்று படங்களை இறுதியில் சேர்த்திருப்பது இந்நூலுக்குச் சிறப்பு கோயில் திருப்பணி வரலாற்றினைப் பற்றிய இலக்கியங்களைப் பதிப்பிப்போருக்கு இந்நூல் சிறந்த வழிகாட்டியாக அமைகிறது

**ந. அதியமான், தஞ்சாவூர்.**

# தமிழகத் தொல்லியல் கழக 22ஆம் ஆண்டுக் கருத்தரங்கம் – செயலர் அறிக்கை

கோட்டையூர், முத்தையா - இராமநாதன் அறக்கட்டளையினர் சார்பில் தமிழகத் தொல்லியல் கழகத்தின் 22 ஆம் ஆண்டுக் கருத்தரங்கு ஜூலை 14,15 தேதிகளில் இராமநாதன் செட்டியார் திருமண மண்டபத்தில் சிறப்பாக நடத்தப்பட்டது இந்தியா, இலங்கை, ஜப்பான், பிரான்ஸ், இங்கிலாந்து, ஹாலந்து, அமெரிக்கா என்று பரவலாக 600 வாழ்நாள் உறுப்பினர்களைக் கொண்ட இக்கழகம், தமிழகம் சார்ந்த கல்வெட்டுகள், சிற்பங்கள், கோயில்கள், காசுகள், சுவடிகள், தொல்லியல் என்று வரலாற்றுக்கு அடிப்படையான ஆதாரங்களை ஆண்டுதோறும் 'ஆவணம்' என்ற இதழில் பதிவு செய்து வெளியிட்டு வருகிறது அவ்வகையில் 23ஆவது ஆவணம் இதழும் இவ்விழாவில் வெளியிடப்பட்டது

தமிழகத் தொல்லியல் கழகத் தலைவர் ஆத்தங்குடி முனைவர் சு இராச கோபால் விழாவிற்குத் தலைமையேற்றார் குன்றக்குடி ஆதீனம் தவத்திரு பொன்னம்பல அடிகளார் அவர்கள் ஆவணம் இதழை வெளியிட்டுச் சிறப்புடையாற்றினார்கள் முதல் இதழினைப் பெற்றுக் கொண்டும் நகரத்தார் பண்பாட்டுப் பாரம்பரியக் கண்காட்சிகளைத் திறந்து வைத்தும் கோவிலூர் ஆதீனம் சீர்வளர்சீர் மெய்யப்ப ஞானதேசிய சுவாமிகள் உரையாற்றினார்கள் தமிழகத் தொல்லியல்கழக நிறுவனர் பேராசிரியர் சுப்பராயலு கழகத்தின் நோக்கம் பற்றி எடுத்துரைத்தார்

முத்தையா இராமநாதன் அறக்கட்டளைத் தலைவர் திருமதி வள்ளி முத்தையா அவர்கள் வாழ்த்துரை கவிதையாக அமைந்தது தமிழகத்தில் தொல்லியலை வளர்த்த கம்பன் அடிப்பொடி சா கணேசன், அழகப்பா பல்கலை நிறுவனமும் தனது அய்யாவுமான டாக்டர் அழகப்பா செட்டியார் ஆகியோர் புகழும் தமிழகத் தொல்லியலின் சிறப்பும் அவர்களது கவிதையில் இடம்பெற்றன பேராசிரியர் அய்க்கன், கழக உள்ளூர்ச் செயலர் பேராசிரியை வள்ளி சொக்கலிங்கம், தொல்லியல் கழகச் செயலர் பேராசிரியர் இல தியாகராஜன் ஆகியோரும் உரையாற்றினர் நூற்றுக்கும் மேற்பட்ட பேராளர்கள் தமிழகத்தின் அனைத்துப் பகுதிகளி லிருந்தும் வந்திருந்து கருத்தரங்கில் கலந்துகொண்டனர் வெளியூர் உள்ளூர் பேராளர்கள் அனைவருக்கும் செட்டிநாட்டு மரபுப்படி சிவப்பு ஓலைக் கொட்டானில் செட்டிநாட்டுப் பலகாரங்கள் வழங்கப்பட்டன.

கருத்தரங்கிற்கு முன்னதாக ஜூலை 10 முதல் 13 முடிய நான்கு நாட்களில் காரைக்குடி, திருப்பத்தூர் கல்லூரி மாணவ மாணவியர் நாற்பத்தைந்து

பேருக்கு தொல்லியல் - கல்வெட்டியல் அறிமுக வகுப்புகள் நடத்தப்பட்டன திருமெய்யம், திருப்பத்தூர், குன்றக்குடி, கோவிலூர் ஆகிய வரலாற்றுச் சின்னங்களுக்கு தனிப் பேருந்து மூலம் அம்மாணவர்கள் அழைத்துச் செல்லப்பட்டு நேர்முகப் பயிற்சியும் பெற்றனர்

குன்றக்குடி குடைவரைக் கோயில்களில் அளித்த பயிற்சியின்போது தவத்திரு பொன்னம்பல அடிகளார் அவர்கள் நேரில் வந்திருந்து மாணவர்களையும், ஆசிரியர்களையும் வாழ்த்தினார்கள் கோவிலூரில் கல்வெட்டுகளைப் படியெடுக்கும் பயிற்சியும் அளிக்கப்பட்டது இந்த நான்கு நாள் பயிற்சி வகுப்புகளை முனைவர் சு இராசகோபால், பேராசிரியை வள்ளி சொக்கலிங்கம், முனைவர் சொ சாந்தலிங்கம், முனைவர் சு இராசவேலு, முனைவர் சு கண்ணன், முனைவர் பன்னீர்செல்வம் ஆகியோர் நடத்தினர்

நிறைவு விழாவில் பயிற்சி பெற்ற மாணவர்களுக்கு அழகப்பா பல்கலைக் கழக துணைவேந்தர் மாண்புமிகு சேது, சுடலைமுத்து அவர்கள் சான்றிதழ்கள் வழங்கி நிறைவுரையாற்றினார்கள் புதுச்சேரி பிரான்சு இந்திய கழகப் பேராசிரியர் கோ விஜயவேணுகோபால் அவர்கள் வகுப்புகள், கண்காட்சி மற்றும் கருத்தரங்கு ஆகியவை செட்டிநாட்டு உபசரிப்புடன் சிறப்பாக நிகழ்த்தப்பட்டதைப் பாராட்டினார்கள் முத்தையா - இராமநாதன் அறக்கட்டளைத் தலைவர் திருமதி வள்ளி முத்தையா அவர்கள் அழகப்பா பல்கலையில் தொல்லியல்சார் வகுப்புகள் தொடங்கப்பட வேண்டியதின் அவசியத்தை தனது கவிதையில் குறிப்பிட, துணைவேந்தர் அவர்கள் விரைவில் பல்கலைக் கழகத்தில் வகுப்புகள் தொடங்க நடவடிக்கை எடுப்பதாக உறுதியளித்து எல்லோரையும் மகிழ்வித்தார்கள்

கருத்தரங்கில் சிற்பக்கலை குறித்த கோவிலூர் ஆண்டவர் அறக் கட்டளைச் சொற்பொழிவு, கல்வெட்டுக் குறித்த தி நா சுப்பிரமணியம் அறக்கட்டளைச் சொற்பொழிவு ஆகியவை நிகழ்ந்தன நாட்டரசன் கோட்டை நபார்டு திரு கண்ணப்பன், இராயவரம் திரு குப்பன் செட்டியார், நேமத்தான்பட்டி திரு சுகுமாரன் ஆகியோர் முறையே செட்டிநாட்டுப் பாரம்பரியப் பொருள்கள், அரிய நூல்கள், காசுகள் குறித்த கண்காட்சிகளை அமைத்திருந்தனர்

'செட்டிக்கப்பலுக்குச் செந்தூரன் துணை' வில்லுப்பாட்டு நாட்டியம் காணொலிக் காட்சியாகக் காட்டப்பட்டது ஆச்சிமார்கள் கொடை கொடுத்த சுமைதாங்கிகள், ஊரணிக் கல்வெட்டுகள், ஆவணம் இதழில் பதிவாகியிருந்தன கோட்டையூர் முத்தையா - இராமநாதன் அறக்கட்டளைச் செயலர் திரு அழகப்பன் அவர்கள் ஆறு நாட்களுக்கும் வேண்டிய உணவு, உறைவிடம், போக்குவரத்து ஏற்பாடுகளைச் சிறப்பாகச் செய்திருந்தார்

# காரைக்குடி ஆவணம் கருத்தரங்கத்தில் படிக்கப்பட்ட கட்டுரைகள்

மாணவர் போட்டிக்கட்டுரை

1 மீ மருதுபாண்டியன்- குலக்குறிமரபும் , முத்தரைய மக்களும்

2 ந தனசேகரன் - தொண்டை மண்டலத்தில் அறிய வகைச் சிற்பம்

நாள் : 15 07 12

## முதல் அமர்வு

தலைவர் : டாக்டர் பாலாஜி

| | | |
|---|---|---|
| 1 | வை இராம்குமார் மற்றும் தி லெ சுபாஷ்சந்திரபோஸ் | பூலாங்குறிச்சி திரிரத்னா மற்றும் பரசு குறியீடுகள் |
| 2 | பாலகிருஷ்ணன் சுபாஷ்சந்திரபோஸ் | சூலமும் பரசும் கொண்ட வெள்ளிக்காசும் கல் தூணும் |
| 3 | க கருப்பையா | ஆந்திர பிரதேசத்தில் தமிழக் கல்வெட்டு |
| 4 | டாக்டர் எஸ் கண்ணன் | வடலூர் பகுதியில் இடைக்கால தொல்லியல் தடயங்கள் |
| 5 | மு பிரபாகரன் | துறையூர் சார்ஜா கல்வெட்டுகள் |
| 6 | யாழ் சு சந்திரா | மதுரை மொட்டைக் கோபுரம் முனீஸ்வரர் கோயில் திருவாச்சி |
| 7 | சமா இரத்தினவேல் | இருப்பைக்குடி கிழவன் 9 ஆம் நூற்றாண்டு பொறியாளர் |
| 8 | ச ரவி | பெருங்கற்கால மட்பாண்டக் குறியீடுகள் |

நாள் . 15 07 12

## இரண்டாம் அமர்வு

தலைவர் : ஏ. சுப்பராயலு

| | | |
|---|---|---|
| 1 | வீரராகவன் | விழுப்புரம் பகுதியில் புதிய சிற்பங்கள் |
| 2 | இரா தமிழாதன் கணபதிராசன் | சிந்துவெளி முத்திரை தேனி மாவட்டத்தில் இருபுலிகளுடன் போரிடும் வீரன் |
| 3 | இராமநாதன் | Dravidian speakers in South India |

நாள் : 15 07 12

## மூன்றாம் அமர்வு

தலைவர் · ஏ. சுப்பராயலு

| | | |
|---|---|---|
| 1 | டாக்டர் ஏ சுப்பராயலு | இந்தளூர்ச் செப்பேடு |
| 2 | டாக்டர் க. இராஜன், பொருந்தல் | கொடுமணல் அகழாய்வு |
| 3 | டாக்டர் பன்னீர் செல்வம் | மன்னராட்சியில் மக்களாட்சி |
| 4 | யத்தீஸ் | அமராவதி பள்ளத்தாக்குத் தொல்லியல் |

## அறக்கட்டளை சொற்பொழிவு

| | | |
|---|---|---|
| 1 | முனைவர் சூ சுவாமிநாதன் | பாண்டிய நாடு அரசு - ஆட்சி முறை - பிரம்மதேயங்கள் |

அன்புடன்
இல. தியாகராஜன்
செயலர்

# தென்னிந்திய வரலாற்று ஆசிரியர் நபுரு கராசிமா அவர்களுக்கு பத்மஸ்ரீ விருது



தென்னிந்திய வரலாற்று ஆசிரியரும் சிறந்த கல்வெட்டறிஞரும் தமிழகத் தொல்லியல் கழகத்தின் வாழ்நாள் உறுப்பினருமான நபுரு கராசிமா அவர்களுக்கு 2013ஆம் ஆண்டின் இந்தியாவின் உயர் விருதான பத்மஸ்ரீ விருது வழங்கப்பட்டது. அன்மையில் இந்தியப் பிரதமர் மன்மோகன் சிங் ஜப்பானிற்குச் சென்றபொழுது இவ்விருதினை நேரிடையாக வழங்கினார். ஜப்பான் தோக்கியோப் பல்கலைக்கழகத்தின் வரலாற்றுத் தகைமைப் பேராசிரியராக விளங்கும் நபுரு கராசிமா அவர்கள் தென்னிந்திய வரலாற்றில் குறிப்பாகத் தமிழகத்தின் வரலாற்றைக் கல்வெட்டுகளின் அடிப்படையில் எழுதியுள்ளார். புள்ளியியல் ஆய்வினை தமிழ்க்கல்வெட்டுகளில் அறிமுகம் செய்தவர். தமிழக கல்வெட்டுகளை உலக அளவில் அறிஞர்களின் பார்வைக்கு எடுத்துச் சென்றவர். எட்டாவது உலகத் தமிழ்மாநாட்டைத் தஞ்சையில் மிகச் சிறப்பாக 1995 ஆம் ஆண்டு இவரது தலைமையில் தமிழக அரசு நடத்தியது. உலகத் தமிழாய்வுக் கழகத்தின் தலைவராக விளங்கிய இவர் தென்னிந்தியக் கல்வெட்டு மற்றும் வரலாற்று ஆசிரியர்களுடன் இணைந்து பல ஆய்வுகளை மேற்கொண்டவர். இவரது அரும்பணிகள் தொடரவும் எல்லா நலனும் பெற்றுச் சிறக்கவும் தமிழகத் தொல்லியல் கழகம் தனது வாழ்த்தைத் தெரிவித்துக்கொள்கிறது.

# கல்வெட்டு அறிஞர் கே.வி. இரமேஷ் மறைவு



இந்தியத் தொல்லியல் துறையின் மேனாள் இணைத் தலைமை இயக்குநராகவும் இந்தியாவின் மிகச் சிறந்த கல்வெட்டறிஞராகவும் விளங்கிய முனைவர் கே.வி. இரமேஷ் அவர்கள் 10-07-2013 அன்று மாலை மைசூரில் மாரடைப்பால் காலமானார். 1935 ஆம் ஆண்டு பிறந்த முனைவர் கே.வி. இரமேஷ் தனது பள்ளி மற்றும் கல்லூரிப் படிப்புகளை சென்னையில் மேற்கொண்டு 1956ஆம் ஆண்டு இந்தியத்தொல்லியல் ஆய்வுத்துறையின் கல்வெட்டுப் பிரிவில் உதகமண்டலத்தில் தமிழ்க் கல்வெட்டாய்வராகச் சேர்ந்து படிப்படியாக பதவி உயர்வு பெற்று மைசூர் கல்வெட்டுப்பிரிவின் முதன்மைக் கல்வெட்டாய்வாளராக 1981ஆம் ஆண்டும் 1984இல் இயக்குநராகவும் பணியாற்றிப் பின்னர் இந்தியத் தொல்லியல் துறை புதுதில்லியில் இணைத் தலைமை இயக்குநராகப் பணிபுரிந்து ஓய்வு பெற்றார். வடமொழி மற்றும் திராவிட மொழிகளை நன்கு அறிந்த முனைவர் கே.வி. இரமேஷ் நடுவனரசின் சிறப்பு அறிஞராக சென்ற ஆண்டு தேர்ந்தெடுக்கப்பட்டார்.

முனைவர் கே.வி. இரமேஷ் அவர்கள் தமிழகத் தொல்லியல் கழகத்தில் அறக்கட்டளைச் சொற்பொழிவு ஆற்றியவர். பல நூல்களை எழுதியுள்ளார். இந்திய வரலாற்றுக் கழகத்தின் வாயிலாக கல்வெட்டு அருங்கலைச் சொற்கள் திட்டத்தின் பதிப்பாசிரியராகப் பணியாற்றி நூல்களை வெளியிட்டுள்ளார். கல்வெட்டுத்துறை இவரது காலத்தில் மேன்மை பெற்ற துறையாக விளங்கியது. சென்னையில் இத்துறையின் கிளை அலுவலகம் வருவதற்கு முதன்மைக்காரணமாக விளங்கிய இவருக்கு மனைவியும் மூன்று மகள்களும் உள்ளனர். எல்லோரிடமும் அன்புடனும் எளிமையுடனும் பழகும் பண்பு மிக்க முனைவர் கே.வி. இரமேஷ் இந்தியக் கல்வெட்டுக் கழகம், இந்திய ஊர்ப்பெயர் ஆய்வுக் கழகம் ஆகியவற்றை நிறுவியவர்களுள் ஒருவராவார். இவ்விரண்டு கழகங்களும் தொடர்ந்து இன்றும் செயல்பட்டு வருவதற்கு இவரது பங்கு மகத்தானது. அறிஞர் கே.வி. இரமேஷ் ஆங்கிலம் மற்றும் கன்னடத்தில் நூல்கள் பலவற்றையும் எழுதியுள்ளார். இந்தியக் கல்வெட்டுகள்,வாதாபி சாளுக்கியர் வரலாறு, மேலைக்கங்கர் கல்வெட்டுகள் ஆகிய நூல்கள் இவற்றுள் குறிப்பிடத்தக்கவை. பல்கேரியா, ஜப்பான், தென்கிழக்காசிய நாடுகள் தென் ஆப்ரிக்கா போன்ற நாடுகளுக்குச் சென்று கள ஆய்வுகள் மேற்கொண்டவர். மிகச் சிறந்த இந்தியக் கல்வெட்டறிஞரான முனைவர் கே.வி. இரமேஷ் அவர்களின் மறைவிற்குத் தமிழகத் தொல்லியல் கழகம் தனது ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக் கொள்கிறது.

# கட்டுரையாளர்கள் முகவரி

**செல்வி இரா. அகிலா**
அரசுக் கலைக்கல்லூரி
அரியலூர்

**திரு. ந. அதியமான்**
பேராசிரியர்,
கடல்சார் வரலாறு மற்றும் கடல்சார் தொல்லியல், தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர்

**திரு. அ. அன்பு**
அரசுக் கலைக்கல்லூரி
அரியலூர்

**செல்வி அனுராதா**
அரசுக் கலைக்கல்லூரி
அரியலூர்

**செல்வி ஆனந்தி**
சென்னை

**முனைவர் ச. இரவி**
வரலாற்றுப் பேராசிரியர்,
பி.எஸ்.ஜி. கலைக்கல்லூரி,
கோயமுத்தூர்

**திரு. கோ. இரவீந்திரன்**
பிரெஞ்சு இந்தியக் கழகம்,
புதுச்சேரி.

**முனைவர் சு. இராசகோபால்**
"இராஜாஜி இல்லம்"
7, முதல் தெரு
வெங்கடேஸ்வரா நகர், அடையாறு
சென்னை 600 020

**முனைவர் சு. இராசவேலு**
42, நாலடியார் தெரு, ஸ்ரீசக்தி நகர்,
ஆவடி கார்ஷெட் காம்ப்ளக்ஸ்
சென்னை – 600 109

**திரு. கரு. இராசேந்திரன்**
மேலப்பனையூர் (அஞ்சல்)
விராச்சிலை (வழி)
புதுக்கோட்டை 622 420

**திரு. பொ. இராஜேந்திரன்**
பணி ஓய்வு,
தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை,
மதுரை

**திரு. வெ. இராமமூர்த்தி**
பணி ஓய்வு,
தமிழ்நாடு தொல்லியல் துறை,
சென்னை

**திரு. உத்திராடம்**
உ.வே.சா. நூலகம்,
பெசன்ட் நகர், சென்னை

**முனைவர் கோ. எழில்ஆதிரை**
இணைப் பேராசிரியர்
6, பெருமாள் வடக்கு வீதி,
வெளிப்பாளையம்,
நாகப்பட்டினம் 611 011.

**முனைவர் ஐராவதம் மகாதேவன்**
பி. 1, நறுமுகை வளாகம், 2வது தெரு,
விருந்தாமன் நகர் விரிவாக்கம்,
ஆதம்பாக்கம், சென்னை 600 088

**செல்வி கு. கண்ணகி**
அரசுக் கலைக்கல்லூரி,
அரியலூர்

**திரு ம. காந்தி**
875, பேஸ் 2, 7வது குறுக்குத்தெரு,
சத்துவாச்சாரி, வேலூர் 632 009

**திரு. சு. குமரன்**
பண்டைய வரலாறு மற்றும்
தொல்லியல் துறை,
சென்னைப் பல்கலைக்கழகம்,
சென்னை

**திரு கி. குமார்**
இ.103,பொதுப்பணித்துறை
குடியிருப்பு,
தாடண்டர் நகர்,
சைதாப்பேட்டை,
சென்னை 600 015

**திரு. செ. கோவிந்தராஜ்**
கிருஷ்ணகிரி அருங்காட்சியகம்
தமிழ்நாடு அரசு
கிருஷ்ணகிரி

**திரு. செ. கௌரிசங்கர்**
முனைவர் பட்ட ஆய்வாளர்,
கல்வெட்டியல் மற்றும்
தொல்லியல் துறை,
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர் 10

**முனைவர் அ. சந்திரபோஸ்**
விரிவுரையாளர்,
மாட்சிமை தாங்கிய மன்னர் கல்லூரி,
புதுக்கோட்டை – 622 001.

**திரு. சொ. சந்திரவாணன்**
தமிழ்நாடு தொல்லியல் ஆய்வுத் துறை
உதவி இயக்குநர் (ஓய்வு)
இராசபாளையம்.

**செல்வி கோ. சசிகலா**
258, பாரதியார் மெயின் தெரு
கடைசி, அயப்பன் கோயில் அருகில்,
ஜெய்ஹிந்த்புரம்,
மதுரை 625 011

**முனைவர் சொ. சாந்தலிங்கம்**
மாவட்ட தொல்பொருள்
அலுவலர் (ஓய்வு)
32, பிரீதம் தெரு, துரைசாமி நகர்
மதுரை 625 010.

**முனைவர் பி. சாமுண்டீஸ்வரி**
உதவிப் பேராசிரியர்
அண்ணாநகர் கிழக்கு, சென்னை

**திரு. ஜெ. சவுந்தரராஜன்**
விரிவுரையாளர், பண்டைய வரலாறு
மற்றும் தொல்லியல் துறை,
சென்னைப் பல்கலைக்கழகம்,
சென்னை 600 005.

**திரு. பெ. சுதாகர்**
த\பெ. பெருமாள்
பொய்யூர், மேலக்கருப்பூர் (அ)
அரியலூர் 621 707.

**திரு. து. சுந்தரம்**
21, கிரீன்வியூ டெலிகாம் குடியிருப்பு,
விளாங்குறிச்சி சாலை,
பீளமேடு, கோவை – 641 004

**முனைவர் எ. சுப்பராயலு**
26, பாரதி பார்க்,
6வது குறுக்குத் தெரு,
சாயிபாபா காலனி,
கோயமுத்தூர் 641 011

**திரு. க. சுரேஷ்**
கல்வெட்டியல் துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்

**Dr. S. Swaminathan**
Deputy Superindenting, Epigraphist
Office of the Director (Epigraphy)
Near Sankaranti Circle, 4th Main
2nd Stage, Mysore - 570 017

**முனைவர் வீ. செல்வகுமார்**
விரிவுரையாளர்
கல்வெட்டியல் மற்றும் தொல்லியல்
துறை, தமிழ்ப்பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர் – 613 010.

**திரு. த. தங்கதுரை**
த/பெ. ப. தங்கையா
பாத்தம்பட்டி (தெற்கு) (அஞ்சல்)
ஆலங்குடி (தாலுக்கா), புதுக்கோட்டை

**திரு த.த. தவசிமுத்து**
36, பூவரசுர் மெயின் ரோடு
ஆறுமுகனேரி 628 202, தூத்துக்குடி

**முனைவர் இல. தியாகராசன்**
தலைவர், வரலாற்றுத்துறை
அரசு கலைக்கல்லூரி
அரியலூர் 621 713.

**திரு. கோ. திருமூர்த்தி**
உதவி கண்காணிப்பாளர்,
தொல்லியல் துறை, சந்திரகிரி

**திரு. துக்கன்**
பாண்டிச்சேரி பல்கலைக்கழகம்
பாண்டிச்சேரி

**திரு. செ. நந்தகுமார்**
முனைவர் பட்ட ஆய்வாளர்,
பண்டைய வரலாறு மற்றும்
தொல்லியல் துறை,
சென்னைப் பல்கலைக்கழகம்,
சென்னை.

**முனைவர் மா. பவானி**
விரிவுரையாளர்
கல்வெட்டியல் மற்றும்
தொல்லியல் துறை,
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர் – 613 010

**Dr. K.Panneerselvam**
O/o, Director of Epigraphy
Office of the Director (Epigraphy)
Near Sankaranti Circle, 4th Main
2nd Stage, Mysore - 570 017

**திரு. நா. பாபு (எ) இராமசாமி**
பிரெஞ்சு இந்தியக் கழகம், புதுச்சேரி.

**திரு. பரந்தாமன்**
ஆய்வு மாணவர், கல்வெட்டியல் துறை,
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர்

**திரு. பழனியப்பன்**
சம்பை, பவானி வட்டம், ஈரோடு

**திரு. சா. பாண்டியன்**
கல்வெட்டியல் துறை,
தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்

**திரு. கு. பால்துரை**
பாண்டிச்சேரி பல்கலைக்கழகம்
புதுச்சேரி

**திரு. பா. பாலமுருகன்**
பாண்டிச்சேரி பல்கலைக்கழகம்
புதுச்சேரி.

**திரு. பிச்சைப் பிள்ளை**
விழுப்புரம்

**திரு. பிரசன்னா**
தொல்லியல் ஆய்வாளர்,
இந்தியத் தொல்லியல் ஆய்வுத் துறை,
சென்னை

**திரு ப. பூபாலன்**
9, பாட்டை தெரு
நவல்பூர் (அஞ்சல்),
இராணிப்பேட்டை 632 402

**திரு. ஆ. பெருமாள்**
முனைவர்பட்ட ஆய்வாளர்,
புதுச்சேரி பல்கலைக்கழகம், புதுச்சேரி

**திரு. மோகனசுந்தர்**
சென்னை

**திரு. மோசஸ்**
கலவெட்டியல் துறை,
தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்

**திருமதி மங்கையர்க்கரசி**
கே சி.எம். பள்ளி
66, முத்துவேல் லே–அவுட்
கே.கே.சாலை, விழுப்புரம் 605 602

**திரு. த. மணி**
புதுக்கோட்டை

**திரு. ஆர். மணி**
10, ஐஸ்வர்யா தெரு,
எழில் நகர், பெரிய அல்லாபுரம்,
தொரப்பாடி, வேலூர் – 632 002

**திரு. வீ. முத்துகுமார்**
117, மாயாண்டி சாமி நகர்
திருவப்பூர், புதுக்கோட்டை – 3

**திரு. இரா. ரமேஷ்**
த\பெ. கே. இராமசாமி
காளயனூர், கருங்கல்லூர் (அஞ்சல்)
மேட்டூர் (வட்டம்), சேலம்

**திரு. சி.எம். ரமேஷ்குமார்**
அவினாசி

**திரு. ஆ. ராஜா**
த/பெ. சி. ஆரோக்கியசாமி
நெப்பியப்பட்டி, வடவாளம் (அஞ்சல்)
புதுக்கோட்டை தாலுக்கா
& மாவட்டம் – 622 004.

**செல்வி வ. வசுமதி**
அரசுக் கலைக்கல்லூரி, அரியலூர்

**முனைவர் கோ. விஜயவேணுகோபால்**
15, 4வது குறுக்குத் தெரு
ஜெயா நகர்,
ரெட்டியார் பாளையம்
பாண்டிச்சேரி 605 010

**திரு. வீரராகவன்**
கே ஜி.எம். பள்ளி
66, முத்துவேல் லே–அவுட்
கே.கே.சாலை,
விழுப்புரம் 605 602

**திரு. க. வெங்கசேடன்**
பண்டைய வரலாறு மற்றும்
தொல்லியல் துறை,
சென்னைப் பல்கலைக்கழகம்,
சென்னை 600 009

**திரு ப. வெங்கடேசன்**
3/178, கம்பன் தெரு
பெல்லியப்பா நகர்
வாலாஜாப் பேட்டை – 632 513

**முனைவர் வெ. வேதாசலம்**
51/12இ, ரத்தினசாமி நாடார் தெரு,
பி.பி. குளம்,
மதுரை – 625 002

**திரு. கி. ஸ்ரீதரன்**
324, முதல் தெரு,
நடேசன் நகர்,
விருகம்பாக்கம்
சென்னை – 600 092.

**முனைவர் பா. ஜம்புலிங்கம்**
கண்காணிப்பாளர்
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர் 613 010

# நன்றி

*கல்வெட்டு மற்றும் கட்டுரைகளை ஆவணத்தில் எழுதிய ஆசிரியர் களுக்கு உதவி புரிந்த கீழ்க்கண்டவர்களுக்கு நன்றி*

1. து. சுந்தரம், கொங்குப் பகுதியில் சில கல்வெட்டுகள் –
   கல்லாபுரம் திரு. ஜான்சன்

2. செ. கோவிந்தராஜ், பேருஹள்ளி கல்வெட்டு –
   திரு. டி.வி. கோவிந்தசாமி

3. பரந்தாமன், மணப்பாறை பகுதியில் சில புதிய கல்வெட்டுகள் –
   திருவாளர்கள் சு. இராசவேலு, அழகேசன்

4. கி. ஸ்ரீதரன் – புண்ணியகோடீசுவரர் கோயில் கல்வெட்டுகள் –
   திருவாளர்கள் தி. இரவிசங்கர், மைசூர், முனைவர் சு. இராஜகோபால்

5. இல. தியாகராஜன், பெரிய ஓலைப்பாடி கல்வெட்டுகள் –
   திரு. தே. க. இராஜேந்திரன் ஐ.பி.எஸ்.

6. இல. தியாகராஜன், வயலூர், இராஜந்தாங்கல் கல்வெட்டுகள் –
   திருவாளர்கள் அருணாசலநயினார், சிவப்பிரகாச நயினார்,
   கி. மணிகண்டன், கா. ஞானவேல், செல்வன், வைத்தியநாதன்,
   அப்துல்அலி, கோயில் குருக்கள் சந்திரசேகரன், கே.எஸ். துரைராஜன்,
   எம். ஏழுமலை, எஸ். அருள்முருகன்

8. ஆனந்தி, – கூவத்தூர் கொற்றவை சிற்பம் –
   திரு. அர. பூங்குன்றன்

9. கோ. விஜயவேணுகோபால், சிங்கப்பூர்த் தமிழ்க் கல்வெட்டுகள் –
   திருவாளர்கள் சுப. திண்ணப்பன், சிங்கப்பூர், கோகுலபாலன்

10. கி. குமார், வேலூர் மாவட்டக் கல்வெட்டுகள் –
    திரு. எஸ். நாகர்ச்சுனா

## TAMIL NADU ARCHAELOGICAL SOCIETY, THANJAVUR - 613 010

## RECEIPTS AND PAYMENT ACCOUNT FOR THE YEAR ENDED 31.03.2013

| RECEIPTS | | PAYMENTS | |
|---|---|---|---|
| **Opening Balance** | | | |
| Cash in hand | 7,812 80 | Stationery | 3,781.00 |
| Indian Bank | 2,446.00 | Printing charges | 67,410.00 |
| State bank of India | 32,940.62 | Xerox | 149 00 |
| Book Sales | 5,567.50 | Auditor Fees | 1,500.00 |
| Donation | 56,000.00 | Student Prize | 4,000.00 |
| Membership Fees | 65,950.00 | Salary | 6,000.00 |
| Fixed Deposit | 410,000.00 | Honararium | 7,000.00 |
| ICHR Grant | 29,750.00 | Sundries | 2,382.00 |
| Interest | 37,852.00 | Postage & Courier | 5,515.00 |
| Commission received | 190.00 | Freight Charges | 1,220.00 |
| | | Commission received | 95.00 |
| | | Telephone Charges | 200.00 |
| | | Travelling Charges | 7,176.00 |
| | | Fixed Deposit | 528,000.00 |
| | | Closing Balance Indian Bank | 5,419.00 |
| | | State Bank of India | 3,084.62 |
| | | Cash in hand | 5,577.30 |
| | 648,508.92 | | 648,508.92 |

## TAMIL NADU ARCHAELOGICAL SOCIETY, THANJAVUR - 613 010

### INCOME AND EXPENDITURE ACCOUNT FOR THE YEAR ENDED 31.03.2013

| Expenditure | Amount | Income | Amount |
|---|---|---|---|
| To Stationery | 3,781.00 | By Book Sales | 5,567.50 |
| To Printing Charges | 67,410 00 | By Donations | 56,000.00 |
| To Xerox | 149.00 | By Members Fess | 65,950 00 |
| To Audit fees | 1,500.00 | By Interest | 37,852.00 |
| To Student Prize | 4,000 | By ICHR Grant | 29,750.00 |
| To Salary | 6,000.00 | By Commission received | 190 00 |
| To Honararium | 7,000.00 | | |
| To Sundries | 2,382.00 | | |
| To Postage & Courier | 5,515.00 | | |
| To Freight | 1,220.00 | | |
| To Bank Commission | 95 00 | | |
| To Telephone | 200.00 | | |
| To Travelling | 7,176.00 | | |
| To Excess of Income Over Expenditure | 88,881.50 | | |
| | 195,309.50 | | 195,309.50 |

**TAMIL NADU ARCHAELOGICAL SOCIETY, THANJAVUR - 613 010**

## BALANCE SHEET AS ON 31.03.2012

| LIABILITES | | ASSEST | |
|---|---|---|---|
| Fund Account | 560,780 92 | Furniture | 18,700 00 |
| | | Fixed Deposits | 528,000 00 |
| | | Indian Bank | 5,419.00 |
| | | State Bank of India | 3,084.62 |
| | | Cash in hand | 5,577.30 |
| | 560,780 92 | | 560,780 92 |

## FUND ACCOUNT

| | | |
|---|---|---|
| 01 04 2012 | By Opening Balance | 471,899.42 |
| 31 03 2013 | By Excess of Expenditure over Income | 88,881 50 |
| 01 04 2013 | By Opening Balance | 560,780.92 |

# ஆவணம்

## தமிழகத் தொல்லியல் கழகத்தின் ஆண்டு இதழ்

ஆவணம் தமிழக வரலாற்றை வளப்படுத்தும் எல்லா அடிப்படைச் சான்றுகளையும் வெளியிடும் நோக்கம் கொண்டது. இதுவரை வெளியிடப்படாத கல்வெட்டுகள், செப்பேடுகள், ஓலைச் சுவடிகள், காகித ஆவணங்கள், தொல்பொருள்கள், காசுகள், கலைப்பொருள்கள் ஆகியவற்றைப் பற்றிய செய்திகளையும், கட்டுரைகளையும் ஏந்தி வருகிறது. இது தமிழக வரலாற்றில் ஈடுபாடுடைய அனைவரின் இல்லங்களிலும் இடம் பெற வேண்டிய இன்றியமையாத வரலாற்றுக் கருவூலம்.

ஆவணம் இதழ்கள் 1 முதல் 17 வரை இருப்பு இல்லை
ஆவணம் 18 - 19 - ரூ. 150/- (இதழ் ஒன்றுக்கு)
ஆவணம் 20 - 24 - ரூ. 200/- (இதழ் ஒன்றுக்கு)

வரலாற்றுப்போக்கில் தென்னகச் சமூகம் (நொபொரு கராஷிமா) ரூ. 100/-

தமிழகத் தொல்லியல் கழக இதழ்களைப் பெறவிழைவோர், சரியான தொகையை வரைவோலை, காசோலை அல்லது பணவிடை மூலம் பொருளாளர் முகவரிக்கு அனுப்ப வேண்டும்.

கழகத்தின் வாழ்நாள் உறுப்பினர் கட்டணம் ரூ. 2000/-
நிறுவனங்களுக்கு உறுப்பினர் கட்டணம் ரூ. 4000/-

புதிய வெளியீடுகள் பகுதியில் நூல்களைச் சேர்க்க விரும்புவோர் ஒவ்வொரு நூலுக்கும் மூன்று படிகளையும், அஞ்சல் செலவுக்கு ரூ. 50/- செயலாளருக்கு அனுப்பி வைக்க வேண்டும்.

வரைவோலை, காசோலை, பணவிடைகள் தமிழகத் தொல்லியல் கழகம் என்ற பெயரில் இருத்தல் வேண்டும். காசோலையாக இருந்தால், கூடவே வங்கிக் கட்டணம் ரூ. 100/-ஐச் சேர்த்து அனுப்ப வேண்டும். ஆவணம் இதழ் நேரில் பெற்றுக் கொள்ளலாம். அல்லது அஞ்சலில் பெற ரூ. 50/- பணவிடை அனுப்பவும்.

முகவரி :

**செயலர்/பொருளாளர்**

**தமிழகத் தொல்லியல் கழகம்**

(மே/பா) கல்வெட்டியல் மற்றும் தொல்லியல் துறை
தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர் - 613 010

Contact :

**Secretary / Treasurer, Tamil Nadu Archaeological Society**

C/o. Department of Eqigraphy and Archaeology, Tamil University, Thanjavur - 613010

